ஸ்ரீ



ஸ்ரீமதே ராமானுஜாய நம

# திருச்சித்ர கூட புராணம்

(சிதம்பரம் கோவிந்தராஜப் பெருமாள் கோவில் தல வரலாறு)

# CHITRAKOOTA PURANAM (Tamil)



ஆசிரியா

**Dr. A.V. ரங்காசாரியார்**

**வேங்கடார்ய பதிப்பகம்**

105, மேலவிதி சிதம்பரம்

608 001

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமானுஜாய நம :

# திருச்சித்ர கூட புராணம்

(சிதம்பரம் கோவிந்தராஜப் பெருமாள் கோவில் தல வரலாறு)

# CHITRAKOOTA PURANAM (Tamil)

ஆசிரியர்
Dr. A.V. ரங்காசாரியார்

வேங்கடார்ய பதிப்பகம்
105, மேலவீதி சிதம்பரம்
608 001

Rs 60 P 00

ஸ்ரீ.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம .

# ஸமர்ப்பணம்

ச்ரியப்பதியான ஸர்வேச்வரன் கோயில் கொண்டுள்ள திவ்ய தேசங்களுள் ஆழ்வார்களால் மங்களாஸாஸனம் செய்யப் பெற்ற மாட்சிமை உடையவை நூற்றெட்டாகும். அவற்றுள் "ஈரிருபதாம் சோழம்" என்ற சோழநாட்டு திவ்ய தேசங்கள் நாற்பதில் முதன்மை யானதும், ஸ்ரீ குலசேகராழ்வார், ஸ்ரீ திருமங்கையாழ்வார் ஆகியோரால் பாடப் பெற்றதுமான திவ்யக்ஷேத்ரம் தில்லைத் திருச்சித்ரக்கூடம் ஆகும். மிகத் தொன்மை வாய்ந்த இத்தலத்தின் புராண வரலாறுகள் ப்ரம்மாண்ட புராணத்திலும், பவிஷ்யோத்தர புராணத்திலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மேற்படி புராண சுலோகங்களைப் பழைய சுவடிகளைப் பார்த்து கீர்த்தி மூர்த்தியான வித்வான்கள் **சித்ரகூடம் அஷ்ட கோத்ரம் குமாண்டூர் இளைய வில்லி அ. நரஸிம்மாசாரியாரும், அவர் திருத்தம்பியார் அ. வேங்கடாச் சாரியாரும்** படி எடுத்து வைத்திருந்தார்கள்.

அவர்கள் எழுதி வைத்திருந்த பழைய க்ரந்தாக்ஷர படிகளை ஸோதித்து, அழகாக தேவ நாகரியில் மாத்ருகைகளை தயார் செய்து கொடுத்தவர்கள். 1. ப்ரம்மஸ்ரீ வேதமூர்த்தி ஸிரோமணி, Dr S ஸ்ரீனிவாஸஸர்மா ஸ்வாமி, M A. Ph D., Professor and Head of the Department of Sanskrit, Annamalai University (2) Dr R திருநாராயணன் M A , M Phil , B Ed , Ph D , Professor and Head of the

Department of Sanskrit, St Joseph's College (Autonomous), Trichy, (3) ஸ்ரீ உ.வே. வித்வான் ஸிரோமணி இளைய வில்லி ராமா நுஜாசாரியார், சென்னை ஆவர்.

ஸம்ஸ்க்ருத ச்லோகங்களையும், அதன் பொருளையும் தமிழில் எழுதிக் கொடுத்தவர் ஸ்ரீ உ.வே. வித்வான் (கல்யானபுரம்) ஸிரோமணி எஸ். ஸத்யமூர்த்தி ஸ்வாமி, பேராசிரியர், வேதாகமக்கல்லூரி, தருமபுரம் ஆவர். இந்த ஸ்வாமி தனக்கு ஏற்பட்ட ஹ்ருதய அறுவை சிகிச்சையின் நிர்பந்தத்தையும் தள்ளிப் போட்டு இப்பணியை முடிந்த பிறகே Open Heart Surgery செய்து கொண்டது இப்பணியில் இந்த ஸ்வாமியின் ஈடுபாட்டைத் தெரிவிக்கும். திருப்பதி ஸ்ரீ. உ.வே. வித்வான் T A கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ பெரும்புதூர் வித்வான் ஸ்ரீ. உ.வே. T.A வேங்கடாசார்ய ஸ்வாமி, வரிச்சுக்குடி ஸ்ரீ.உ.வே. வித்வான் விஞ்ஜமூர் ரங்கநாதாசார்ய ஸ்வாமி ஆகியோர் மாத்ருகைகளை நன்கு பரிசோதித்துக் கொடுத்துச் சிறப்பித்தனர். இப்புராணம் வெளிவர உதவி செய்த திருப்பதி பேராசிரியர் Dr. M வரதராஜன் ஸ்வாமி, மற்றும் அனைத்து மஹனீயர்கட்கும் அடியேன் தலையல்லால் கைமாறிலேன்.

இப்புராணத்தை அச்சிடுவதற்கு வேண்டிய பொருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவஸதான அதிகாரிகளுக்கு அடியேனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு புராண வரலாறு, ஆழ்வார்களின் மங்களா ஸாஸனம், பரமாசார்யர்களான ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் ஈறாக அனைத்து ஆசார்யர்களின் மங்களாஸாஸனம் பெற்றதும், குறிப்பாக எம்பெருமானாரால் காக்கப்பட்ட தன்னேற்றம் பெற்ற, தில்லைத் திருச்சித்ரக்கூடத்தின் பெருமையையும் சீர்மையையும் பறை சாற்றும் இந்நூலினை

ஸ்ரீ புண்டரீகவல்லித்தாயார் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் திருவடிகளில் ஸமர்ப்பிக்கிறேன். இந்நூலினை அனைவரும் படிதது, இன்புற்று, ஸ்ரீ புண்டரீகவல்லித்தாயார் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் திவ்ய தம்பதிகளின் இன்னருளுக்கு என்றும் இலக்காகி சதிராக வாழ்ந்திட வேண்டுகிறேன்.

தில்லைத திருச்சித்ரகூடம் — **அ.வே. ரங்காசாரி**
19 09 2000

# பொருளடக்கம்

## முதல் பகுதி

# श्रीगोविन्दराजसुप्रभातम्

# ஸ்ரீ கோவிந்தராஜ ஸுப்ரபாதம்

कौसल्यासुप्रजाराम पूर्वा सन्ध्या प्रवर्तते।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम्॥ (१)

*1. கௌஸல்யையின் பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டப் பிறந்த திருக்குமாரனே! ஸ்ரீராம! ஸூர்யன் உதயமாகா நின்றான். ஹே பரம புருஷனே! எழுந்திருக்க வேண்டும். நித்யகர்மாக்களை அனுஷ்டித்தருள வேண்டும்.*

उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द उत्तिष्ठ गरुडध्वज।
उत्तिष्ठ कमलाकान्त त्रैलोक्यं मङ्गलं कुरु॥ (२)

*2. பெரிய திருவடியாகிய கருடாழ்வார் வீறுடன் விளங்கும் கொடியை உடையவனே! கோவிந்த ராஜனே! திருப்பள்ளியுணர வேண்டும். புண்டரீக வல்லியின் காந்தனே! நீ திருப்பள்ளி உணர்ந்து, மூவுலகுக்கும் மங்களம் உண்டாகச் செய்ய வேண்டும்.*

मातस्समस्त-भुवनावनहेतुभूत-
दिव्यावलोकनवशीकृतवासुदेवे।
गोविन्दराज हृदयाङ्गणभद्रपीठे
श्रीपुण्डरीकलतिके तव सुप्रभातम्॥ (३)

*3. ஸமஸ்தலோக ஸம்ரக்ஷணத்திற்குக் காரணமான உன் திவ்ய கடாக்ஷத்தால் பரவயப்படுத்திக் கொண்ட பரவாஸு தேவனையுடையவளே! ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளின் திருமார்பில் பத்ராஸநம் கொண்டருளும் ஸ்ரீ புண்டரீக வல்லியே! தேவரீருக்கு நல் விடிவு.*

तव सुप्रभातमरविन्दलोचने
प्रणतापराधिजनरक्षणोन्मुखे।
करुणामयाक्षिविषयामराधिपे
भुवि चित्रकूटनिलये हरिप्रिये॥ (४)

4. செய்யதாமரைக் கண்ணினாய்! ஆர்த்ராபராதிகளாயினும், ஆச்ரித விஷயத்தில் ஆதரத்தைக் காட்டித் தன் புருஷகார பலத்தினால், ரக்ஷித்தருள்வதில் முழு மூச்சுடன் முயன்று ரக்ஷித்தருளுமவளே! உன் கடாக்ஷத்திற்கு விஷயமான ப்ரம்மாதி பிபீலிகாந்தமான உலகையுடையவளே! புண்டரீகவல்லித் தாயாரே! திருப்பள்ளி உணர வேண்டும்.

श्रीपुण्डरीक महिषीमुखपद्मभानो
भक्ताभिलाषपरिपूरणपारिजात।
ब्रह्मेशमुख्यसुरवृन्दसुवन्दिताङ्घ्रे
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (५)

5. ஸ்ரீ புண்டரீகவல்லித் தாயாரின் திருமுகக் கமலத்திற்கு ஸூர்யன் போன்றவனே! பக்தர்கள் ப்ரார்த்திக்கும் பலன்களை கொடுப்பதில் கற்பக வ்ருக்ஷம் போன்றவனே! பிரமன், சிவன், இந்திரன், திக்பாலர்கள் கூட்டங்களால் நன்கு பூஜிக்கப்பட்டவனே! ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

वैकुण्ठवासरसिकाः त्वदनन्यभोगाः
सौशील्यमस्तसदृशं त्वनुभोक्तुकामाः।
नित्यास्त्वदीयनिलये निवसन्ति मुक्तैः
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (६)

6. ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்பவர்களும் உன்னையன்றியறியாதவர்களும், வைகுந்தத் தமரர்களுமான நித்யஸூரிகள் உன்னுடைய ஒப்புயர்வில்லா ஸௌசீல்யத்தை அனுபவிக்க ஆசை கொண்டு அதற்கு ஏகாந்தமான உன் திருக்கோயிலிலே காத்திருக்கிறார்கள். ஸ்ரீகோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

दिव्यापगाजलजसङ्ग्रत-दाममालाः
गाङ्गेयनीरपरिपूरितपूर्णकुम्भान्।
आनाय्य पद्मनिधिमेति हिरण्यगर्भः
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (७)

7. தேவகங்கையில் பூத்த தங்கத்தாமரை மலர்களை மாலைகளாக ஏந்திக் கொண்டும், அந்த தீர்த்தம் நிறைந்த பூர்ண கும்பங்களைக் கையில கொண்டும், உன் கடாக்ஷ வீக்ஷணத்தில் படும்படியாக

பத்மநிதி, ஶங்கநிதி முதலிய நவநிதிகளைக் கொண்டும் உன் உந்தியில் தோன்றிய சதுர்முகன் காத்துக் கொண்டிருக்கிறான். ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

वृन्दारकास्तव महोन्नतविश्वरूप-
सेवार्थमाहृतमहार्हनवोपहाराः ।
पादाम्बुजातयुगलेऽर्पयितुं त्वरन्ते
गोविन्दराज भगवन् तव सुप्रभातम् ॥ (८)

8. மஹோந்நதமான உன் விச்வரூப ஸேவைக்காகத் தேவர்கள் உயர்ந்த புத்தம் புதிய உபஹாரங்களை எடுத்துக்கொண்டு வந்து உன் திருவடித் தாமரை மலர்களில் ஸமர்ப்பிக்க முற்படுகிறார்க;ள். ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

कण्वो महर्षिरतिमात्र-तपःप्रभूत-
पुण्यस्त्वदीय-महिमार्णवकर्णधारः ।
त्वत्सौखशायनिक एष निषेवते त्वाम्
गोविन्दराज भगवन् तव सुपभातम् ॥ (९)

9.கணக்கிலடங்காத காலமாக உன்னைக் குறித்து தவம் செய்து பணி செய்து கிடக்கும் கண்வர் மகரிஷி உன் மஹிமையாகிய பெருங்கடலில் பழைய மாலுமி. உன் திருக்கண் வளர்த்தியில் வாஞ்சை கொண்டு திருப்பள்ளி உணரும் போது உன்னை ஸுக ஶயனம் கேட்கும் விருப்புடன் வியந்து வெளியில் நிற்கிறார். ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

सह्यात्मजाधवलनामकनिम्नगाम्बु-
धारासहस्र-कलितावभृथ-प्रमोद ।
वाराशि-वाञ्छितवरप्रद वासुदेव
गोविन्दराज भगवन् तव सुप्रभातम् ॥ (१०)

10. மலைத் தலைப்பிறந்து இழிந்து வந்து சந்தன மலைத் தொழுகும் திருக்காவேரியும், கௌவைக்களிற்றின் மருப்பும் பொருப்பும் கமழ சந்தும் உந்தி நிவாவும் தம் தீர்த்தஙகளால் அவபிருதம் செய்ய வேண்ட, அதற்கு அங்கீகாரம் அளித்து அந்த தீர்த்தஙகளால் அவபிருதம் கண்டருளுமவனே! ஸமுத்ர ராஜன் விருப்பத்திற்கிணங்க

மாசிப்பூர்ணையில் ஸேவிக்க வரம் தரும் பெருமாளே! ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

श्रीमच्छठारि-कलिवैरि-कृतानुषङ्ग-
चेराधिनाथ-कुलशेखर-सूरिबन्धो।
रामानुजार्यकलिताभिनवप्रतिष्ठ
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (११)

11. குருகைக்கோன் குலசேகரன், மங்கை மன்னன் கவியைக் கொண்டவனே! ஸ்ரீ குலசேகரப் பெருமாளின் ஸ்ரீராமாயண ஸங்க்ரஹத்தால் அவருக்கு "என்றும் நின்றானவனிவன்" என்று சக்ரவர்த்தித் திருமகனாகவே காட்சி அளித்தவனே ! எம்பெருமானார் திருவுள்ளத்திற்காகவே ஸுப்ரதிஷ்டிதராய் ஸேவை ஸாதித்தருளுகிறவனே! ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

मुक्ताप्रवालनवरत्नसुवर्णराशीन्
भक्त्या समर्प्य पदयोर्वरिवस्यया ते।
द्वारस्थितिस्सेवयिषते धुरि पल्लवेन्द्रः
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (१२)

12. பைம்பொன்னும், முத்தும், மணியும், கொணர்ந்து படைமன்னன் பல்லவர்கோன் திருவடி பணிய, திருவாசலிலே நிற்கிறார். அவனைக் கடாக்ஷித்தருள ஸ்ரீகோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

त्वामेव सात्विकतया शरणं प्रपन्नाः
प्रातः प्रवोधयिषया निलये निविष्टाः।
प्राबोधकानि कलयन्त्यतिमङ्गलानि
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (१३)

13. ஸாத்விகம் என்ற திருவிமானத்தின் கீழ் எழுந்தருளியுள்ள உன்னைப் பரம ஸாத்விக ப்ரக்ருதிகளான ஸ்ரீ வைஷ்ணவர்கள் ப்ரபத்தி செய்து உன்னைத் திருப்பள்ளி உணர்த்த வேண்டும் என்ற பாரிப்பால் திருப்பள்ளி எழுச்சிக்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சேர்த்துக் கொண்டு உள் கோயிலின் வாசலில் காத்துக்கிடக்கிறார்கள். ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

गोविन्दराज शयनात् भुजगेन्द्रभोगात्
उत्थाय वीक्ष्य करुणामसृणैः कटाक्षैः।
पाहि त्वदीयचरणार्पितसर्वभारान्
गोविन्दराज भगवन् तव सुप्रभातम्॥ (१४)

14. திருவனந்தாழ்வான் என்ற உம்முடைய திருப்பள்ளியிலிருந்து எழுந்தருளி, கருணை நிறைந்த கண்களால் எங்களைக் கடாக்ஷித்து, உம்முடைய திருவடிகளில் ஸர்வ பாரத்தையும் வைத்திருக்கிற அடியோங்களை அனுக்ரஹித்து அருள்வதற்காக ஸ்ரீ கோவிந்தராஜனே! திருப்பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டும்.

चित्रकूटनिवासाय चित्रानन्तविभूतये।
श्रीमद्गोविन्दराजाय श्रीवत्साङ्काय मङ्गलम्॥ (१५)

சித்ரகூடத்தில் வீற்றிருப்பவனும, பல்வகையாலும் முடிவில்லாத செல்வமாக இருப்பவனும் ஸ்ரீவத்ஸம் என்ற மறுவை உடையவனுமான ஸ்ரீ கோவிந்தராஜனுக்கு மங்களம்.

ஸ்ரீ கோவிந்தராஜ ஸுப்ரபாதம் முற்றிற்று

ஸ்ரீபுண்டரீகவல்லித்தாயார் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் திருவடிகளே ஶரணம்.

# பகுதி இரண்டு

## ஸ்ரீ கோவிந்தராஜஸ்துதி

श्री :

श्रियै नमः

**श्रीमते रामनुजाय नमः**

श्रीपुण्डरीकवल्ली प्रणमामि मुहुः प्रमोदसम्पत्यै।
गोविन्देक्षणमाध्वी पुष्टा जुष्टा राजरतीव संहृष्टाम्॥ (१)

*1. கோவிந்தராஜனின் நோக்கமுதத்தால் வளர்ச்சியுற்றவளும், அந்தணரால் பரவப் பெற்றவளும், மிகவும் மகிழ்ந்தவளுமான புண்டரீகவல்லியை மிக்க மகிழ்ச்சியைப் பெறுவதற்கு மீண்டும் வணங்குகிறேன்.*

महाभोगितल्पे क्षितौ चित्रकूटे महीश्रीमहिष्योः पुरस्तात् शयानम्।
पदाभ्यर्णनाट्ये समुद्वीक्ष्य लास्यं जगत्पालयन्तं भजे देवदेवम्॥ (२)

*2. சித்ரகூட ஸ்தலத்தில் பெரிய பாம்பணைப் பள்ளியில் ஸ்ரீதேவி, பூதேவியின் முன்பாக சயனித்துக் கொண்டு இருப்பவனும், திருவடியின் பக்கத்தில் நிகழும் நடனத்தைப் பார்த்து, லோகரக்ஷணம் செய்பவனுமான தேவ தேவனைப் போற்றுகின்றேன்.*

मुदा चित्रकूटे तिल्लीवनान्ते भुजङ्गेन्द्रभोगे पुरस्तात् शिवस्य।
शयानं दुहानं कटाक्षामृतौघान् महाभक्तबृन्दे भजे देवदेवम्॥ (३)

*3 சித்ரகூடத்தின் தில்லைவன எல்லையில் சிவபெருமான் முன்பாக ஆதிஶேஷன் மீது ஸந்தோஷத்துடன் ஶயனிதிருப்பவனும், பக்தர்களின் கடாக்ஷம் என்கிற அமுதப் பருக்கைச் செய்கிறவனுமான தேவதேவனை மகிழ்வுடன் போற்றுகிறேன்.*

भवानीपतेर्दिव्यनाट्यप्रपञ्च दृशा सार्थयन्तं प्रपन्नानवन्तम्।
सदा पुण्डरीकाख्यलक्ष्मीं प्रपन्ने कृपां प्रस्नुवन्तं भजे देवदेवम्॥ (४)

4. பவானீபதியான பரமேஸ்வரனின் தெய்வீக நாட்டியத்தைத் தன் கண்நோக்கால் பலனடையச் செய்தவனும், சரணடைந்தவர்களை ரக்ஷிப்பவனும், ஶரணாகதி செய்தவர்களை எப்போதும் புண்டரீகவல்லியென்னும் மஹாலக்ஷ்மியுடன் கூட அருள் பாலிப்பவனுமான தேவதேவனை வணங்குகிறேன்.

उदीचीनदीतीरदिव्यस्थलानामतिप्रत्नदिव्यस्थले सुप्रसिद्धे।
मुखस्थत्वसिद्ध्या पुरा गण्यमाने स्थितं चित्रकूटे भजे देवदेवम्॥ (५)

5. கவேரன் புதல்வியான காவிரியின் கரையிலமைந்த திவ்ய தேசங்களுள் மிகப் பழைய திருப்பதியென்று புகழ்பெற்றதும், ஸ்ரீஸ்வாமி கோவிந்தனின் திருமுக மண்டலத்தில் உள்ளது என முன்பு கருதப்பட்டதுமான சித்ரகூடத்தில் உறையும் எம்பெருமான் கோவிந்தராஜனைப் போற்றி வணஙகுகிறேன்.

महाचेरभूपालभक्तो नितान्तं विदेहात्मजाकान्तकान्तस्वरूपम्।
यदीयार्द्रदृष्ट्या विलोक्य प्रबन्धे स्वभक्तिं विवव्रे भजे देवदेवम्॥ (६)

6. பக்தனான பெரிய சேர மன்னன் எந்த பகவானின் கடாக்ஷத்தால் விதேஹ மன்னனின் புதல்வியினுடைய அழகிய வடிவினைக் கண்டு தமது பக்தியை ப்ரபந்தத்தில் விவரித்தானோ, அந்த தேவ தேவனைப் போற்றுகின்றேன்.

कलिद्विण्मुखोपान्तदिव्यप्रबन्धेष्वनेकावतारश्रयत्वेन भान्तम्।
स्वदिव्यं प्रदेशं प्रयाते महान्तं पुमर्थं ददानं भजे देवदेवम्॥ (७)

7. கலியன் (திருமங்கை மன்னன்) முதலியோரருளிச் செய்த திவ்ய ப்ரபந்தகளில் பல அவதாரங்களை எடுத்தவனாகத் திகழ்பவனும், தன்னுடைய திருப்பதியை அடைந்தவனுக்குப் பெரும்பயனை அளிப்பவனுமான, தேவ தேவனைப் போற்றுகிறேன்.

कृमीकण्ठचोलस्य दुर्मानदोषात् निरस्तं च दिव्यालयाद्वारि मध्ये।
यदि क्ष्मामृदास्थापितं तत्र भूयोऽप्युदारानुभावं भजे देवदेवम्॥ (८)

8. க்ருமிகண்ட சோழ மன்னனுடைய மரியாதையற்ற குற்றத்தினால் திவ்யாலயத்தினின்றும் வெளியேற்றப்பட்டு தண்ணீரின் நடுவே இடம் பெற்றவனும் துறவியின் தலைவரான ராமானுஜரால் மறுபடி ப்ரதிஷ்டை செய்யப்பட்டவனும் சிறந்த பெருமையுடையவனுமான தேவதேவனை வணங்குகிறேன்.

• महाभक्तमूर्धन्यकण्वस्य मोदादभीष्टान् वरान् तस्य याच्ना प्रकारम्।
समस्तान् विधाय स्थिरं तत्र वासं सदा कल्पयन्तं भजे देवदेवम्॥ (९)

9. பக்த சிரோமணிகளில் சிறந்த கண்வ முனிவருக்கு (அவரது தபஸினால்) மகிழ்ச்சியடைந்து. அவர் விரும்பிய எல்லா வரங்களையும் அவரது வேண்டுகோளின்படி அருளி அங்கேயே நிலையான வாஸஸ்தானத்தையும் கொண்டிருக்கும் தேவ தேவனைப் போற்றி வணங்குகிறேன்.

कवेराख्यराजाकलिङ्गस्य पत्या सुताया निदेशात् स्वमोक्षोपलब्ध्यै।
यमाश्रित्य पूजातपोदानजालैः कृता दीर्घकालं भजे देवदेवम्॥ (१०)

10. கலிங்க நாட்டு மன்னன் கவேரமன்னனால், தன் புதல்வியான காவேரியின் சொற்கேட்டு, தனக்கு மோக்ஷம் பெற எந்த பகவானை அடைந்து, தவம், தானம், முதலியவற்றால் நீண்ட காலம் ஆராதனம் செய்யப்பட்டாரோ, அந்த தேவ தேவனைப் போற்றுகின்றேன்.

पुरा दण्डपुत्र्या वराहाज्ञया ते वने कृष्णनाम्नि प्रकर्षेण मोक्षः।
अवश्यं भविष्यत् क्षितीशानवाचा श्रितं तिल्लयातं भजे देवदेवम्॥ (११)

11. முன்னொரு சமயம் தண்டகனுக்கு ஸ்ரீ பூவராஹனின் ஆஜ்ஞையால் ஸ்ரீ கிருஷ்ணக்ஷேத்திரத்தில் சிறப்பாக மோக்ஷம் அளிக்கப்பட்டது. அந்தத் தண்டக அரசனின் வேண்டுதலால் பிற்காலத்தில் தில்லைத் திருச்சித்ரகூடத்தில் வாஸம் மேற்கொண்டுள்ள தேவதேவனைப் போற்றி வணங்குகிறேன்.

मुदा भद्रकाल्या समाराधनार्थं विरिञ्चिप्रसूतेः कृते नाट्यरङ्गे ।
शिवस्याभिमानात् पदं सूचयित्वा शिवां त्रासयन्तं भजे देवदेवम् ।। (१२)

12. பத்ரகாளி தேவியை மகிழச் செய்து அவளை த்ருப்தி செய்விப்பதற்காகவும், பிரம்மன் தோன்றலான சிவ பெருமானுக்காக நடன அரங்கம் ஸ்ருஷ்டித்து, அவன் பேரிலுள்ள அன்பினால், நடன மாற்று அடியைக் குறிப்பால் உணர்த்தி, காளி தேவியைத் தோல்வியுறச் செய்த தேவதேவனைப் போற்றுகின்றேன்.

पुरा पुण्डरीकाख्य देवर्षिनीतं प्रियायाः विमानस्य तीर्थस्य पुर्याः ।
मुदा पुण्डरीकाभियानं प्रशस्याकरोत् पूर्णकामं भजे देवदेवम् ।। (१३)

13. முன்னொரு ஸமயம் புண்டரீகர் என்னும் முனிவரால் குறித்தபடி (பிரார்த்தித்தபடி) பத்நீ, தீர்த்தம், நகரம் முதலானவற்றுக்கு 'புண்டரீகம்' என்னும் பெயரை மகிழ்ச்சியுடன் புகழ்ந்து, மன நிறைவு பெறச் செய்த தேவ தேவனைப் போற்றுகிறேன்.

महातिल्यकान्तारमध्ये सभार्यस्तपस्यन्तमत्रिं तिरस्कर्तुमिच्छोः ।
महाहेर्महानन्ददानेन पूतं पतञ्जल्युपास्यं भजे देवदेवम् ।। (१४)

14. பெரிய தில்லைவனத்தின் நடுவே பத்நீயுடன் கூட தபஸ் செய்து கொண்டிருக்கிற அத்ரி மஹரிஷியை திரஸ்கரிக்க விரும்புகிற பெரிய ஸர்ப்பத்துக்கு மிகுந்த ஆனந்தமளித்து (திரஸ்காரத்தால் ஏற்பட்ட பாபம் நீக்கி அவனை) பரிசுத்தனாக ஆக்கியவனும், பதஞ்ஜலி முனிவரால் உபாஸிக்கப்பட்டவனுமான தேவாதி தேவனைப் போற்றுகின்றேன்.

द्वितीये युगे पूर्वकल्पे सरय्वां कृते रामभद्रेण गन्धर्वमेधे ।
हयान्वेषणे रामपुत्रेण दृष्टं महाराजचिह्नं भजे देवदेवम् । (१५)

15. முன் கல்பமான இரண்டாவது த்ரேதாயுகத்தில ஸரயூ நதியின் கரையில் ஸ்ரீராமசந்தர மூர்த்தியால் அச்வமேதயாகம்

செய்யப்பட்ட போது, யாகக் குதிரையைத் தேடும் ஸமயத்தில் ராமபுத்ரர்களான லவகுசர்களால் காணப்பட்ட சக்ரவர்த்தியின் அடையாளங்களை உடைய தேவதேவனைப் போற்றுகின்றேன்.

सदा कृष्णशृङ्गार चेष्टानुभूतिं बुभुक्षोर्मुनेस्त्वंतत गोभिलस्य।
मुदा वेणुगोपालवेषेण याच्ञां समापूरयन्तं भजे देवदेवम्।। (१६)

16. எப்போதும் ஸ்ரீக்ருஷ்ணனின் ச்ருங்கார சேஷ்டாநுபூதிகளை அநுபவிக்க விரும்புகிற 'கோபிலன்' என்பவருடைய ப்ரார்த்தனை, மிக்க மகிழ்ச்சியுடன் வேணு கோபால உருவத்துடன் நிறைவு செய்து கொடுத்தருளிய தேவ தேவனைப் போற்றி வணங்குகிறேன்.

ஸ்ரீ கோவிந்தராஜ ஸ்துதி முற்றிற்று

ஸ்ரீ புண்டரீகவல்லித் தாயார் ஸ்ரீ கோவிந்த ராஜப் பெருமாள் திருவடிகளே சரணம்

## பகுதி மூன்று

श्रीः
श्रियै नमः
|| श्रीमते रामानुजाय नमः ||

**सदा गोविन्द कीर्तनम**

ஸதா கோவிந்த கீர்த்தனம்

गोविन्दोऽवतु मां सदा करुणया गोविन्दमेष्याम्यहं
गोविन्देन कटाक्षितोऽहमिह गोविन्दाय तस्मै नमः।
गोविन्दात्किल मे सुधीरपि च गोविन्ददासोस्म्यहं
गोविन्दे च समर्पये कृतिमह गोविन्द रक्षात्र माम् ॥ (१)

1. கோவிந்தன் எப்போதும் கருணையுடன் என்னைக் காப்பாற்றட்டும். நான் கோவிந்தனை சரணடைவேன். ஈண்டு கோவிந்தனால் கடைக்கண் கொண்டு நோக்கப்பட்டுள்ளேன். அக்கோவிந்தனுக்கு என்னுடைய வணக்கம் கிடைத்துள்ளது. கோவிந்தனிடமிருந்தே எனக்கு நல்லறிவு கிடைத்துள்ளது. நான் அந்த கோவிந்தனின் அடிமை. நான் என் செயலை கோவிந்தனிடம் ஸமர்ப்பிக்கிறேன். கோவிந்த ! என்னை ரக்ஷிப்பாயாக.

गोविन्दस्सकलं ममास्तु महितं गोविन्दमेवाश्रये
गोविन्देन कृपा कृता मयि नमो गोविन्दराजाय ते।
गोविन्दादभवच्छुभं हि मम गोविन्दपादौ गतिः
गोविन्दे भरमर्पयेऽनवरतं गोविन्द मां पालय॥ (२)

2. எனக்கு அனைத்தும் கோவிந்தனேயாகுக. சிறப்புற்ற கோவிந்தனையே அடைக்கலமாகப் பற்றுகிறேன். என்பால் கோவிந்தனால் அருள் செய்யப் பெற்றது. கோவிந்தராஜனுக்கு என் வணக்கம். கோவிந்தனிடமிருந்து எனக்கு நன்மை கிட்டியது. கோவிந்தன் திருவடிகளே எனக்குப் புகலிடமாம். எப்போதும் கோவிந்தனிடமே என்னுடைய ஸம்ஸாரச் சுமையை ஒப்படைக்கிறேன். கோவிந்த ! என்னை ரக்ஷிப்பாயாக.

गोविन्दः करुणार्णवो मम गुरुर्गोविन्दमेवाश्रये
गोविन्देन सभाजितोऽहमथ गोविन्दाय कुर्वेऽर्चनाम।
गोविन्दान्मम जीविते सफलता गोविन्दराजस्य धूः ?
गोविन्दे शरणागतिर्मम हिता गोविन्दपाह्याश्रितम्॥ (३)

3. கருணைக்கடலான கோவிந்தன் எனக்கு குரு. நான் இந்த கோவிந்தனையே ஆச்ரயிக்கிறேன். கோவிந்தனால் நான் பெருமைப்பட்டிருக்கிறேன். கோவிந்தனை அர்ச்சிக்கிறேன். என்னுடைய வாழ்க்கை கோவிந்தனிடமிருந்து கிடைத்தது. இந்த வாழ்க்கையைப் பயனடையச் செய்வது அவனுடைய கடமை. கோவிந்தனை ஶரணமடைவது எனக்கு நன்மை தரும். கோவிந்த! ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பாயாக.

गोविन्दः कुलदैवत मम ततो गोविन्दमासेदिवान्
गोविन्देन समीकृतोऽहमथ गोविन्दाय मामर्पये।
गोविन्दात्कुशलान्यवापमिह गोविन्दवीक्षावशात्
गोविन्दे कलयाम्यहं प्रपदनं गोविन्ददासोऽस्मि ते॥ (४)

4. எனக்கு கோவிந்தனே குலதெய்வம். ஆகவே நான் கோவிந்தனை ஆச்ரயிக்கிறேன். நான் கோவிந்தனால் தனக்கு நிகராகச் செய்யப்பட்டுள்ளேன். கோவிந்தனுக்கு என்னையே ஸமர்ப்பிக்கிறேன். கோவிந்தனிடமிருந்து பல நன்மைகளை நான் பெற்றிருக்கிறேன். கோவிந்தனின் கடாக்ஷத்தால் அவனை நான் ஶரணடைகிறேன். கோவிந்த! நான் உன் அடிமை. என்னை ரக்ஷிப்பாயாக

गोविन्दो हृदि तिष्ठतूद्गृणतु वाग्गोविन्दमानन्ददं
गोविन्देन मतिर्विभातु मम गोविन्दाय मूर्धाञ्चतु।
गोविन्दात्कविता प्रयातु भुवि गोविन्दनामाऽस्तु तत्
गोविन्दे सति नान्यमेमि शरणं गोविन्द मां नन्दय॥ (५)

5. கோவிந்தன் என் இதயத்தில் நிலைத்திருக்கட்டும். ஸந்தோஷத்தைக் கொடுக்கிற கோவிந்தனை என் வாய்ச் சொற்கள் ஸ்தோத்ரம் செய்யட்டும். கோவிந்தனால் நம் அறிவு விளங்கட்டும். என்னுடைய தலை கோவிந்தனை வணங்கட்டும். கோவிந்தனிடமிருந்து நமக்குக் கவிதைகள் செழிக்கட்டும். இந்த உலகில் கோவிந்தனின் பெயரே இருக்கட்டும். கோவிந்தன்

இருக்கும்போது நான் மற்றவர்களை ஶரணடைய மாட்டேன். கோவிந்த! என்னை மகிழ்விப்பாயக.

[illegible]स्सुरवन्दितस्सुरवरा गोविन्दमेवाययु:
[illegible] सुरास्सदा बियमिता गोविन्दमत्रे नम:।
[illegible] चेत्रमकरयन्नथ च गोविन्दाच्छ्रियं लेभिरे
[illegible]च वशा: नमन्ति नय गोविन्द गोविन्द माम्॥ (६)

6. கோவிந்தன் தேவர்களால் வணங்கப்பட்டவன். அவர்கள் கோவிந்தனையே சரணமடைந்தார்கள். தேவர்கள் எப்போதும் கோவிந்தனால் ஆளப்பட்டவர்கள். தேவர்கள் கோவிந்தனாகிய உனக்குத் திருச்சித்ரகூடத்தை ஏற்படுத்தினர். கோவிந்தனிடமிருந்து ஶோபையை (கீர்த்தியை) அடைந்தனர். வணங்கும் அவர்கள் கோவிந்தனின் சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்கள். கோவிந்த! என்னை ரக்ஷிப்பாயாக.

[illegible]पूजितो नटपतिर्गोविन्दमानन्दयत्
[illegible]ऽजयत् भुवि च गोविन्दाय शुश्रूषते।
[illegible]मश्नुते तदनु गोविन्दपार्श्वेऽञ्चति
[illegible] कृतामुपकृतिं गोविन्द ते वैभवात्॥ (७)

7. கோவிந்தன் சிவபெருமானால் பூஜிக்கப்பட்டான். நடராஜன் கோவிந்தனை மகிழச் செய்தான். கோவிந்தனின் அநுக்ரஹத்தால் பரமேஸ்வரன் (நாட்டியத்தில்) வெற்றி பெற்றான். இந்த பூலோகத்தில் எல்லோரும் கோவிந்தனுக்குத் தொண்டு செய்கின்றனர். கோவிந்தனிடமிருந்து மங்களம் பெறுகின்றனர், கோவிந்தன் அருகில் செல்கின்றனர். கோவிந்தனிடம் நன்றியுள்ளவராகின்றனர். கோவிந்த! இவையனைத்தும் உன் பெருமையால் நிகழ்கின்றன.

[illegible]रणं नृणां हि शरणं गोविन्दमेवाश्रये
[illegible]विना न मे गतिरभूद्गोविन्दराजाय ते।
[illegible] नाथये वसु च गोविन्दाददो लब्धवान्
[illegible]श मनश्चलति गोविन्देऽस्तु गोविन्द धी.॥ (८)

8. மனிதர்களுக்குக் கோவிந்தனே ஶரணமடையத் தகுந்தவன் நான் கோவிந்தனை ஶரணமடைகிறேன். கோவிந்தனைத் தவிர எனக்கு வேறு கதியில்லை. (கோவிந்தன் ப்ரகாசமாக இருக்கிறான்). நான் இப்போது கோவிந்தனை வணங்கி பணிவுடன் கேட்டுக்

கொள்கிறேன். கோவிந்தனிடமிருந்தே எனக்குச் செல்வம் கிடைத்தது. கோவிந்தனிடம் என் மனம் ஈடுபட்டிருக்கிறது. கோவிந்த ! என்னுடைய அறிவு உன்னிடமே நிலைத்திருக்கட்டும்.

गोविन्दः कुशलं करोतु सततं गोविन्दमासेदुषां
गोविन्देन कृतावना जनिषु गोविन्दाय दास्योल्बणाः।
गोविन्दात्सकलं निषेव्य भुवि गोविन्दस्य शेषास्स्वतः
गोविन्दे कृतभक्तियोगसुभगा गोविन्द ते किङ्कराः॥ (९)

9. கோவிந்தன் எப்போதும் தன்னை அண்டினவர்களின் க்ஷேமத்தைச் செய்தருள வேண்டும். கோவிந்தனை எல்லோரும் ஶரணமடைய வேண்டும். ஜீவராசிகளின் ரக்ஷணம் கோவிந்தனால் செய்யப்பட்டுள்ளது. கோவிந்தனுக்குத் தொண்டு செய்வதால் சிறப்புப் பெற்றவர்கள் கோவிந்தனிடமிருந்து அனைத்துப் பேரின்பங்களையும் பெற்று, கோவிந்தனுடைய அடிமைகளாக தாங்களாகவே ஆகின்றனர். கோவிந்தனிடம் பக்தி யோகங்களைச் செய்து நற்பேறு பெற்று, கோவிந்தனே! உன்னுடைய ஸேவகர்களாக ஆகின்றனர்.

गोविन्दो भुजगेशयो विजयते गोविन्दमोषोऽञ्चति
गोविन्देन फणीफली भवति गोविन्दाय मञ्चायते।
गोविन्दात्सुखमश्नुते तदपि गोविन्दस्य सः कल्पते
गोविन्दे किल किं करोति वलते गोविन्द शेषस्तव॥ (१०)

10. ஆதிஶேஷன் மீது பள்ளி கொண்டவனாக கோவிந்தன் விளங்குகிறான். அடிமையாகிய நான் கோவிந்தனை ஆராதிக்கிறேன். ஆயிரம் தலைகளை உடைய ஆதிஶேஷன் கோவிந்தனால் பயன் பெறுகிறான். கோவிந்தனுக்கு மஞ்சமாகிறான். கோவிந்தனிடமிருந்து ஸுகம் பெறுகிறான். அவன் எதையும் கோவிந்தனுக்கே உடமையாக்குகிறான். கோவிந்தனிடத்தில் இன்னம் எவ்வளவோ தொண்டு செய்கிறான். கோவிந்த ! நான் உனக்கு அடிமை.

गोविन्दोऽत्र विराजतां रमत गोविन्दं श्रिया संयुतं
गोविन्देन सुरक्षितो भवति गोविन्दाय यो सन्नतः।
गोविन्दाद्धनमेष्यते तदनु गोविन्दस्य दासायते
गोविन्दं स्वमनः करोति रमते गोविन्द ते चिन्तनात्॥ (११)

*11.* இங்கு கோவிந்தன் சிறப்புடன் விளங்கட்டும். மஹாலக்ஷ்மியுடன் உள்ள கோவிந்தனைக் கண்டு களியுங்கள். கோவிந்தனை அண்டினவர்கள் கோவிந்தனால் ரக்ஷிக்கப்படுகின்றனர். கோவிந்தனிடமிருந்து செல்வம் கிடைக்கிறது. அதன் பிறகு கோவிந்தன் பக்தர்களாகின்றனர். கோவிந்தனிடம் தன் மனதை லயிக்கச் செய்கின்றனர். கோவிந்த ! உன்னைத் த்யானிப்பதால் மகிழ்ச்சியடைகின்றனர்.

गोविन्दः क्लयत्वपाङ्गक्लनां गोविन्दमेवाश्रये
गोविन्देन क्टाक्षितस्य मम गोविन्दाय बद्धात्मनः।
गोविन्दात्सकलं समेति भुवि गोविन्दभक्तोऽस्म्यहं
गोविन्दे लयमेमि शुद्धमनसा गोविन्द मा पालय॥ (१२)

*12.* கோவிந்தன் கடைக்கண் நோக்கியருள் புரியட்டும். நான் கோவிந்தனையே ஆச்ரயிக்கிறேன். கோவிந்தனால் கடைக்கண் நோக்கி அருளப் பெற்றவனும், கோவிந்தனுக்காக உள்ளத்தைக் கட்டுப்படுத்தியவனும் கோவிந்தனிடமிருந்து எல்லா நன்மைகளையும் பெறுகிறான். இவ்வுலகில் கோவிந்தனுக்கு இவை எல்லாம் ஸமர்பிக்கப்படுகிறது. ஶுத்தமான உள்ளத்துடன் கோவிந்தனிடத்தில் எவன் ஈடுபடுகிறானோ, கோவிந்த ! அவனை ரக்ஷிப்பாயாக !

गोविन्दस्सृजतीह विश्वमखिलं गोविन्दमप्येति तत्
गोविन्देन कृतावतंसमनु गोविन्दाय देहायते।
गोविन्दाध्रियते क्ला तदनु गोविन्दस्य शेषायते
गोविन्दे प्रविलीयते कृतिततिर्गोविन्द लीला तव॥ (१३)

*13.* கோவிந்தன் இந்த உலகம் முழுவதையும் படைக்கிறான். அது கோவிந்தனிடமே மறைகிறது. கோவிந்தனால் அலங்கரிக்கப்பட்டுப் பிறகு கோவிந்தனின் திருமேனியாகவே ஆகிறது. கோவிந்தனிடமிருந்து வளர்கிறது. பிறகு கோவிந்தனுடைய பகுதியாகிறது. கோவிந்தனிடமே முழுதும் ஒடுங்குகிறது. கோவிந்த ! இது உன் லீலையே !

गोविन्दो मम जन्महेतुर ध तं गोविन्दमाराधये
गोविन्देन समीक्षितोऽहमनु गोविन्दाय दासोऽस्मि भोः।
गोविन्दान्मम मुक्तिरेष्यति च गोविन्दस्य नाम ब्रुवे
गोविन्दे मम शेषता स्थिरतरा गोविन्द सर्वं भवान्॥ (१४)

14. என்னுடைய பிறப்புக்குக் காரணம் கோவிந்தனே. ஆகையால் நான் கோவிந்தனை ஆராதிக்கிறேன். நான் கோவிந்தனால் கடாக்ஷிக்கப்பட்டிருக்கிறேன். எனவே, கோவிந்தனுக்கு நான் அடிமை. கோவிந்தனிடமிருந்து எனக்கு மோக்ஷம் கிடைக்கப்போகிறது. நான் கோவிந்தனின் நாமாக்களைச் சொல்வேன். கோவிந்தனிடத்தில் எனக்கு யேஷத்வபூதம் ஸ்திரமானது. கோவிந்த ! எனக்கு எல்லாம் நீயே ஆகிறாய்.

गोविन्दः कुतामशेष जगता भद्र निरस्तामयं
गोविन्दः कुतादयामनुपमां गोविन्द एवोरिव । ?
गोविन्द कितात्कटाक्षनिचयान् गोविन्द एवाऽह्यता
गोविन्द प्रियतां सदानतजने गोविन्द एवैघताम् ॥ (१५)

15. கோவிந்தன் உலகமனைத்துக்கும் நிலையான மங்களத்தை அளிக்கட்டும். நன்மையை வீசட்டும். கோவிந்தன் நம்மீது ஈடு இணையற்ற கருணை புரியட்டும். கோவிந்தன் அனைவரையும் ரக்ஷிப்பானாக. கோவிந்தனுடைய கடைக்கண் பார்வை எல்லோருக்கும் அருள் புரியட்டும. கோவிந்தன் எல்லோரையும் தாஙகட்டும். தன்னை வணஙகுபவர்களிடம் கோவிந்தன் பிரியமுள்ளவனாக இருக்கட்டும். கோவிந்தன் புகழ் மேன்மேலும வளரட்டும்.

गोविन्दं भज मानस प्रियतमं गोविन्दमारान्नम.
श्रीगोविन्दमुपास्व पुण्यविभवं गोविन्दमेवाश्रय ।
गोविन्दं जप दिव्यनाममनुभिर्गोविन्दमाराधय
श्रीगोविन्दमनुक्षणं स्मर तथा गोविन्दमानन्दय ॥ (१६)

16. ஹே மனமே ! கோவிந்த நாமத்தை ஸ்மரிப்பாயாக. மிகுந்த அன்புள்ளவனாக கோவிநதனை அண்டி வணஙகுவோம் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் உறையும் கோவிந்தனை உபாஸி. புண்ணியம் நிறைந்த கோவிந்தனையே ஆசரயி. ஸ்ரீ கோவிந்தனை திவ்யநாமாக்களாலும, மந்த்ரஙகளாலும, ஜபம் செயது ஆராதிப்பாயாக. ஒவ்வொரு க்ஷணமும் கோவிந்தனை நினை கோவிந்தனை ஸந்தோஷமடையச் செய்

गोविन्देन मनः प्रसन्नमथ गोविन्देन सत्ताहिता
गोविन्देन हि वर्धते सुमहती भक्तिस्तदीयेऽनिशम् ।
गोविन्देन समाप्यते जनितातेर्निर्वाणमात्यन्तिक
गोविन्देन च दीयते मम हि गोविन्देन पूतो ह्यहम् ।। (१७)

17. நமது மனம் கோவிந்தனால் தெளிவாக உள்ளது. கோவிந்தனால் பிறவிப் பயன் கிடைக்கிறது. ஈடு இணையற்ற அவனிடம் உள்ள பக்தி அவனது அடியார்களிடம் கோவிந்தனாலேயே வளர்ச்சியடைகிறது. இவ்வுலகில் தோன்றியிருக்கும் ஜீவராசிகளின் நெருங்கிக் கொண்டிக்கிற முக்தி நிலை கோவிந்தனாலேயே முடித்து வைக்கப்படுகிறது. (பிறவிச் சக்ரம் சுழல்வது நிறுத்தப்படுகிறது). நான் கோவிந்தனால் தூய்மையானவனாக ஆக்கப்பட்டிருக்கிறேன்.

गोविन्दाय करोमि सन्ततमहं पूजां त्रिभिश्चेन्द्रियै.
गोविन्दाय नतिङ्करोमि भुवि गोविन्दाय कुर्वेऽर्चनाम् ।
गोविन्दाय नतिं तनोमि धुरि गोविन्दाय गामर्पये
गोविन्दाय कृतस्सदाऽहमथ गोविन्दाय तस्मै नमः ।। (१८)

18. நான் எப்போதும் மனோ வாக் காயம் எனகிற இந்த்ரியங்களாலே (த்ரிகரணஶுத்தியாக) கோவிந்தனுக்கு ஆராதனம் செய்கிறேன். கோவிந்தனுக்காகத் தலை வணங்குகிறேன். இவ்வுலகில் கோவிந்தனுக்கு அர்ச்சனை செய்கிறேன். கோவிந்தனுக்குப் (பால் திருமஞ்ஜனம்) செய்யப் பசுவை அர்ப்பணிக்கிறேன். நான் எப்போதும் கோவிந்தனுக்கே உரியவனாக இருக்கிறேன். அந்தக் கோவிந்தனுக்காக என்னுடைய ப்ரணாமங்கள் இருக்கட்டும்.

गोविन्दाज्जनितोऽहमत्र भुवि गोविन्दाच्च संवर्धितः
गोविन्दान्निवसामि पुष्पमिव गोविन्दादह पालितः ।
गोविन्दान्मम सर्वसंपदथ गोविन्दाददृष्टोच्चय.
गोविन्दात्सकल ममाजनि च गोविन्दादहं वैष्णवः ।। (१९)

19. இந்த உலகில் நான் கோவிந்தனிடமிருந்து பிறப்பைப் பெற்றேன். கோவிந்தனிடமிருந்து வளர்க்கப் பட்டேன். கோவிந்தனருளால் புஷ்பம் போல் மென்மையாக வஸிக்கிறேன். கோவிந்தனால் ரக்ஷிக்கப்படுகிறேன். கோவிந்தனிடமிருந்து எல்லா

செல்வங்களும் பெற்று, அதனால் உயர்ந்த அத்ருஷ்டசாலியாக இருக்கிறேன். நான் கோவிந்தனாலேயே வைஷ்ணவனாக விளங்குகிறேன்.

गोविन्दस्य कृपासरिज्जयतु गोविन्दस्य वीक्षितं
गोविन्दस्य गुणा लसन्तु भुवि गोविन्दस्य नामाऽऽव्रतु।
गोविन्दस्य वशे वयं तदनु गोविन्दस्य दासास्स्वतः
गोविन्दस्य दयाधनाश्च भुवि गोविन्दस्य सेवापराः॥ (२०)

20. கோவிந்தனின் பார்வைக்கு இலக்கான நாம் கோவிந்தனின் கருணைக்கடல் வெற்றி பெறட்டும் எனக்கோஷமிடுவோம். இப்பூலோகத்தில் கோவிந்தனின் குணாதிஶயங்களும், கோவிந்தனின் நாமாக்களும் சிறந்து விளங்கட்டும். நாமெல்லோரும் கோவிந்தனின் வசமாக (பாது காப்பில் உள்ளவர்களாக) இருக்கிறோம். எனவே, நாமனைவரும் கோவிந்தனின் அண்யர்கள், கோவிந்தனுக்குத் தொண்டு செய்கிற நாமனைவரும் இப்பூவுலகில் கோவிந்னுடைய தயையை செல்வமாகப் பெற்றிருக்கிறோம்.

गोविन्दे भुवि जाग्रति प्रणमतां सर्वार्थसन्दायिनि
प्रेक्षे देवमहं कथं नु धुरि गोविन्दे कृतात्मार्पणः।
गोविन्दे मम धीस्तथा भवति गोविन्देऽर्पितं मानसं
गोविन्दे मम चिन्तना भवति गोविन्देऽखिलं मामकम्॥ (२१)

21. இவ்வுலகில் ஜீவராசிகளுக்கு அருள்புரிய கோவிந்தன் மட்டுமே கவனமாக இருக்கும் நிலையில், அவனை ஸேவிப்பவர்களுக்கு எல்லாத் தேவைகளையும் அளிக்கிறான். அப்படியிருக்க நான் வேறு தெய்வத்தை ஏன் பார்க்கவேண்டும்? நான் கோவிந்தனிடம் என் ஆத்மாவை அர்ப்பணம் செய்துவிட்டேன். கோவிந்தனிடம் என் மனம் லயித்து விட்டது. எனது எண்ணங்கள் பூராவும் கோவிந்தனிடமே உள்ளது. எனக்கு (ஸமஸ்தம்) அனைத்தும் கோவிந்தனேயாவான்.

ஸதா கோவிந்த கீர்த்தனம் முற்றிற்று

ஸ்ரீ புண்டரீக வல்லித் தாயார் கோவிந்தராஜப் பெருமாள் திருவடிகளே சரணம்

# பகுதி நான்கு

சித்ரகூட புராணம்

श्रीः

श्रियै नमः

श्रीमते रामानुजाय नमः

## श्रीगोविन्दपादादि-केशान्तस्तुतिः

## ஸ்ரீகோவிந்தபாதாதிகேஶாந்தஸ்துதி

(अथवा அல்லது)

## आपादचूडस्तवः

## ஆபாத சூட ஸ்தவம்

गोविन्दराजस्य कृपाम्बुराशेः गोलोकलोकाहितरक्षणस्य।
लक्ष्मीमहीमानसमोहनस्य पादादिकेशान्तनुतिं करोमि॥

*கருணைக்கடலாகவும், பூலோக மக்களைக் காப்பதில் ஈடுபாடு கொண்டுள்ளவனும், ஸ்ரீதேவி, பூதேவி ஆகியவர்களின் உள்ளங்களைக் கவர்பவனுமான ஸ்ரீ கோவிந்தராஜனின் திருவடி முதல் திருமுடி வரை ஸ்தோத்ரம் செய்கிறேன்.*

### திருவடிகள்

गोविन्दराजचरणौ शरणं प्रपद्ये गोभिर्निसर्गललितोत्तरवर्त्मगाभिः।
स्तोतुं पदादिचिकुरान्तमुपेयिवांसं मां पातु पूर्णकरुणाविलया दृशा सः॥(१)

*1. கோவிந்தராஜனின் திருவடியிணை சரணடைகிறேன். இயல்பாகவே மிக எளிய நடையிலான வாக்குகளால் திருவடி முதல் திருமுடி வரை துதிக்கக் கிட்டியுள்ள பாக்யசாலியான என்னை, மிகுந்த கருணை நிரம்பிய கடைக்கண் பார்வையால் அவன் காப்பாற்றட்டும்.*

पादाम्बुजातयुगमाश्रितपारिजातं भागीरथीजनकमाश्रयपूर्णपात्रम्।
भक्तप्रसादनपटुं परमार्थभक्तियोगेन लभ्यमतिसीमदयं प्रपद्ये॥ (२)

*2. திருவடித்தாமரைகளிரண்டினையும் ஆச்ரயித்தவருக்கு கற்பக விருக்ஷம் போன்று அநுக்ரஹிப்பவையும், கங்கையின் உற்பத்தியை தோற்றுவித்தலுக்கு பூரண காரண பூதமாயுள்ளனவும், பக்தர்களுக்கு அருள் புரிவதில் ஆற்றல் படைத்தனவும், நிஜமான பக்தியால் அடையத்தக்கனவுமான, எல்லையில்லாத கருணையுடைய திருவடிகளைச் சரணடைகிறேன்.*

पादाम्बुजं भगवतः पुरुषोत्तमस्य फुल्लारविन्दसुषमं भुवनैकरक्षम् ।
निक्षेपमेव शरणागतिभूतिभाजां गोविन्दराजकरुणाकरणं प्रपद्ये ॥ (३)

3. விரிந்த தாமரை இதழ் போன்று அழகுற்றிருப்பதும், உலகத்திற்கு ஒரே பாதுகாப்பாகவும், அடைக்கலமென்கிற செல்வம் பெற்றவர்க்குக் காப்பிடமாகவும், கோவிந்தராஜன் திருவருளுக்கு முக்கிய காரணமாயுள்ளனவுமான பகவான் புருஷோத்தமனுடைய, இரண்டு திருவடித்தாமரைகளை ஶரணடைகிறேன்.

**पादाङ्गुली (திருவடி விரல்கள்)**

पादाङ्गुलीः परमपावननीरमातृः त्रिविक्रमविभोस्त्रिदशापगायाः ।
ध्यायेत्प्रवालनवकोरकतुल्यभासः सद्यो विकासिशतपत्रदलोपमेयाः ॥ (४)

4. மிகவும் பரிஶுத்தமான நீரையுடைய கங்கையை உற்பத்தி செய்தவையும், புதிய பவளம்போன்ற பொலிவுள்ளவையும், அன்றலர்ந்த தாமரையிதழை உவமையாகக் கொண்டவையுமான த்ரிவிக்கிரமப் பெருமானின் திருவடி விரல்களை த்யானிப்போமாக.

**पादाग्रे (திருவடிகளின் முன்பகுதி)**

पादाग्रमेमि भवसागरमग्नपोतं पद्माधरादिमहिषीगणभागधेयम् ।
भूषायितं भुवि पराङ्कुशपादुकायाः भक्तार्तिनाशनपटुं पतगध्वजस्य ॥ (५)

5. ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கியவர்களுக்கு (கரையேற) ஸாதனமாயுள்ளவையும், திருமகள், மண்மகள் முதலானோரைப் பிரியாதிருப்பவையும், பூவுலகில் பக்தர்களின் துயரகற்றவல்லமையுடைவையுமான கருடக்கொடியோன் கோவிந்தனின் திருவடி முனைகளை ஶரணடைகிறேன்.

**जङ्घे முழங்கால்கள்**

जङ्घे हरेस्तरुणहस्तिक रोपमाने पद्मासनादिसुरवर्गकिरीटचूडे।
सख्यङ्गते सरसिजाक्षकरैर्निसर्गान्मां रक्षतादुरगनाथशयस्य विष्णोः॥ (६)

6. யானைக்குட்டியின் துதிக்கையையொத்தவையும், ப்ரம்ஹ தேவன் முதலான தேவர் குழாங்களின் கிரீடங்களின் ரத்தினம் போன்றவையும், தாமரை மலர்க் கண்களையுடையவனின் கைகளுடன் இயற்கையாகவே, நட்பு பூண்டவையுமான (ஆதிஸேஷன் மீது பள்ளி கொண்டுள்ள ஸ்ரீ கோவிந்தனின்) முழங்கால்கள் என்னை ரக்ஷிக்கட்டும்.

**ऊरू திருத்துடைகள்**

ऊरू पराजितकरीन्द्रकशभिमाने लक्ष्मीपते रति मनोहर मार्दवाङ्के।
ध्वस्तातिशीतकदलीतरुसाम्यधर्मे लोकत्रयाकमणदक्षबले प्रपद्ये॥ (७)

7. சிறந்த யானையின் துதிக்கையினைப் போன்றவையும், மிகக் குளிர்ச்சியான வாழை மரத்தினை ஒத்த குளுமையுடையவையும, மூவுலகத்தையும கடப்பதற்குரிய ஆற்றலுடையனவும், ஆன ஸ்ரீலக்ஷ்மீகாந்தனான கோவிந்தனின் அதி மனோஹரமான, ம்ருதுவான துடைகளிரண்டையும் போற்றுகின்றேன்.

**नाभिः கொப்பூழ்**

नाभिस्समस्तजगतां निलयस्य वाण्याः
भर्तुर्विधेःप्रथमजस्य विभाति नाभि।
यो भासते भुविकलिन्दसुता प्रवाहे-
वावर्तवत् भुजगराजशयस्य निम्न॥ (८)

8. உலகனைத்துக்கும் உறைவிடமாயிருக்கக கூடிய ஸ்ரீகோவிந்தராஜனின் நாபியானது, வாக்தேவியின் கணவான ப்ரம்ஹதேவனுக்கு உறைவிடமாயும், இவ்வுலகில் நீர்ப்பெருக்குடன் கூடிய யமுனை நதியின் நீர்ச்சுழி போன்றும், ஆதி சேஷன் மீது பள்ளி கொண்ட நாராயணனுடையதாகி விளங்குகிறது.

पीताम्बरम् பட்டு வஸ்த்ரம்

पीताम्बरं मृदुलमञ्जुलमध्यभागभूषायितं कनकपत्रसमानवर्णम्।
कान्तं महेन्द्रमणिभूतमहीध्रमध्ये सौदामिनीव चिरभाविरुचिर्विभाति ॥ (९)

9. மென்மையானதும், அழகானதுமான இடைப்பகுதியின் (இடுப்பின்) ஆபரணம் போன்றதும், தங்கமயமான இலையைப் போன்ற நிறமுள்ளதும், இந்த்ர நீலக் கல்லாலான மலையின் நடுவில் பிரகாசிக்கிற மின்னல் போன்ற ஒளியுடையதான பீதகவாடை மிளிர்கின்றது.

उदरबन्धनम् அரைஞான் கயிறு

திருஉதாபந்தனம்

मत्स्यादिसंहननशोभितमध्यभागः
सत्यं चकास्ति कनकोदरबन्ध एषः।
कादम्बिनी वपुषि मानसवश्यकारी
चापो बिडौजस इव प्रविभिन्नकान्तिः ॥ (१०)

10. இந்தத் தங்கமயமான அரைஞான் கயிறானது மத்ஸ்யாவதாரம் முதலான அவதாரங்களில் இடைப்பகுதியை விளங்கச் செய்வதாயும், மேகக் கூட்டங்களின் உடம்பில் மனஸை வசப்படுத்தவதாயும், இந்த்ரதநுஸைப் போன்று பலவகை, சயான ஒளிகளில் மனதை வசப்படுத்துவதாயும் இருக்கிறது. இது முற்றிலும் உண்மை.

उदरम् திருவயிறு

दामोदरस्य सकलाण्डनिदानभूत
श्रीमत्पिचण्डममलं पृथुलं प्रशस्तम्।
संवर्तलब्धविपदां जगतां निसर्गात्
प्रासादतुल्यमहमेमि विशालकक्ष्यम्॥ (११)

11. உலகனைத்துக்கும் உற்பத்திக்குக் காரணபூதமாயுள்ளதும், அளவோடு பெரிதாக அமைந்ததும், சிறப்பானதும், குறைகளற்றதும், பிரளய காலத்தில் அடைந்த ஆபத்துக்களையுடைய லோகத்துக்கு (ரக்ஷிக்க) இயல்பான குணங்களை உடையதாயமைந்ததும் ஆன தாமோதரனின் உதரத்தை அரசர்களின் அரண்மனையைப் போன்றதாகக் கருதுகிறேன்.

वक्षस् திருமார்பு

क्षीराम्बुराशितनयाकृतविष्टरा सा
सर्वाङ्गसौष्ठवमदं विनिवर्तयन्ती।
विष्णोस्समुद्रमथनेऽतिविशालदेशा
वक्षस्थली विजयते विहगध्वजस्य॥ (१२)

12. திருப்பாற்கடலின் புதல்வியான ஸ்ரீமஹாலக்ஷ்மியால் உறைவிடமாகக் கொள்ளப்பட்டதும், உறுப்புகளனைத்துக்கும் ஏற்படுகிற (அழகு) செருக்கை மாற்றுவதும் பாற்கடலைக் கடையும்போது கருடத்வஜனான ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அகன்ற ப்ரதேசமாயுள்ள வக்ஷஸ்தலமானது (மார்பு பிரதேசம்) சிறந்து விளங்குகிறது.

वक्षस्थललक्ष्मीः (திருமார்பிலுறை திருமகள்)

लक्ष्मीरिय दृशिमतां जननान्तराप्त पुण्यप्रपञ्चनजुषामिह भाग्यलक्ष्मीः।,
विष्णोः कृपामृतस्सरस्य च मूर्तलक्ष्मीः पादाब्जभक्तनिचयस्य
शरण्यलक्ष्मीः ।। (१३)

13. திருமாலின் திருமார்பிலுறையும் இத்திருமகள் பல பிறவிகளில் தேர்ந்த புண்ணியங்களையுடைய மஹான்களின் கண்களுக்கு நற் பேறளிக்கும் பாக்யலக்ஷ்மியாயும், மஹாவிஷ்ணுவின் கருணாம்ருத ரசமாக வடிவெடுத்த மூர்த்த லக்ஷ்மியாயும், திருவடித்தாமரைகளில் பக்தி பூண்ட பக்த குழாங்களுக்கு அபயமளிக்க சரண்யலக்ஷ்மியாயும் விளங்குகிறாள்.

श्रीवत्सम् ஸ்ரீவத்ஸம்

श्रीवत्सचिह्नमभिरञ्जितविष्णुवक्षो लक्ष्मीगृहायितपदाप्तविशेषशोभम्।
देवेषु रुद्रविधिजिष्णुमुखेषु विष्णोः सर्वोन्नतत्वमिह सूचयति प्रकमम्।।
(१४)

14. ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திருமார்பை அலங்கரிக்கிற இந்த ஸ்ரீவத்ஸமானது, ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் வாஸஸ்தலமாக அவளது திருவடிகள் பதித்ததால் சிறப்பான சோபையை உடையதாயும் தேவர்களில் சிறந்த ருத்ரன், ப்ரஹ்மா இந்திரன் முதலானவர்களிலும் சிறந்த திருமாலின் உயர்ந்த தன்மையை மிகவும் நன்றாக்க் குறியிட்டுக் காட்டுவதாக இருக்கிறது.

श्रीकौस्तुभम् ஸ்ரீ கௌஸ்துபம்

श्रीकौस्तुभं प्रकटयत्यतिदिव्यशोभं विष्णोरुरस्स्थलमतीतमनोज्ञदीप्त्या।
श्रीनाभिजन्मभुवमप्यवतारयोगात्। जीवात्मनां समुदय च समष्टितत्वात्।।
(१५)

15. கோவிந்தன் தன் திருமார்பிலணிந்திருக்கும, அதிக சோபையுடன் கூடின கௌஸ்துப மணியானது, திருமாலின வக்ஷ ஸ்தலத்தில் மனதைக் கவரும்படி மிகுந்த பொலிவுடையதாயும், ஸ்ரீமந நாராயணனின் நாபிக்கமலத்தைப் பிறப்பிடமாகவுடைய ப்ரஹ்மதேவனை கீழ் நோக்கி பார்வையிறங்குமொளியாலும், ஜீவாத்மாக்களின் கூட்டத்தை ஒன்று சேர்ந்திருத்தலாலும் அதிக சோபையை ப்ரகடனம் செய்கிறது.

## श्रीवैजयन्ती ஸ்ரீவைஜயந்தீ

गोविन्दराजकमनीयसुभुजान्तराले निस्सीमवैभववती किल वैजयन्ती।
कान्त वपुः सकलजन्मवता जनन्याः नित्यं प्रकाशयति मङ्गलदेवतायाः ॥
(१६)

16. ஸ்ரீகோவிந்தராஜனின் மிக அழகான இரு கரங்களுக்கு இடையே எல்லையற்ற சோபையுடன் விளங்குகிற வைஜயந்தீ மாலையானது, ஸகல ஜீவராசிகளுக்கும் மாதாவாக இருக்கிறவளும், மங்களகரமாய் தெய்வத்தன்மை பொருந்தியவளுமான மஹாலக்ஷ்மியின் அழகான திருமேனியை எப்போதும் பொலிவுள்ளதாகச் செய்கிறது.

## श्रीवनमाला ஸ்ரீவனமாலை

श्रीचित्रकूटभुजगेन्द्रशयस्य विष्णोः वक्षस्युदभ्रकुसुमा वनमालिकेयम्।ok"
लक्ष्मीनिवासमधुरस्य पुरस्य चित्त प्रकरभित्तिरिव वक्षसि भाति विष्णोः ॥
(१७)

17. திருச்சித்ர கூடத்தில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட பெருமாள் கோவிந்தராஜனின் திருமார்பில் பலவகைப் பூக்களைக் கொண்ட இந்தவனமாலை, மகாலக்ஷ்மியின் உறைவிடமாக உள்ளதால் இனிமையான நகரத்துக்கு திருமாலின் உள்ளத்தைச் சுற்றியுள்ள மதிற் சுவர் போல விளங்குகிறது.

## तुलसीमाला திருத்துழாய் மாலை

सर्वेश्वरस्य जगदभ्युदयैकहेतोः सर्वाधिकत्वमिदमेव ददाति दाम।
यस्मिन्निवेशितदला तुलसी महार्हापि प्रीणयत्यसदृशं पतिमेव विष्णुम्॥
(१८)

*18. எந்த மாலை தன்னில் தொடுக்கப்பட்ட மிகப் பெருமை வாய்ந்த தளிர்களை (கொழுந்து இலைகளை) யுடையதாக உள்ளதோ, எந்த மாலை ஈடு இணையற்ற தலைனாக மஹாவிஷ்ணுவுக்குப் பிரியமாயுள்ளதோ, உலகின் உயர்வுக்கும், தனிச்சிறப்புக்கும் காரண பூதனும், ஜீவராசிகளனைத்துக்கும் தலைவனுமான கோவிந்த ராஜனுக்கு இந்த மாலையே அவன் எல்லோரிலும் உயர்ந்தவன் என்பதை எடுத்துக் காட்டுகிறது.*

## करौ இருதிருக்கரங்கள்

आर्थिव्रजे फलमितो ग्रहणाय युक्ते दातु क्लिव ववृधे स्पृहया पुमर्थान्।
आजानुलम्बिरुचिरं करपद्मजात कल्पद्रुमस्य विटपश्रियमादधाति॥
(१९)

*19. சரணடைந்தவர்கள் இவனிடமிருந்து பலனைப் பெற நேரும் காலத்தில், மிக்க விருப்பத்துடன் பக்தர்களுக்கான பலனை கொடுப்பதற்கு வளர்ச்சியுடையதும், மிக்க அழகுடன் முழுங்கால் வரை நீண்டுள்ளதும், ஆன தாமரை மலர் போன்ற கரங்கள் கற்பக வ்ருக்ஷத்தின் கிளைகளைப் போல சோபையைப் பெறுகின்றன.*

## वामकरः இடதுதிருக்கரம்

वामः करो विजयते कमलासखस्य दिव्योपधानकरणप्रणयप्रनुन्नः। णु
यः पूर्वमन्यपुरुषा सुलभं द्विजाय वृन्दं गवामयुतसंख्यमदात्प्रमोदात्॥
(२०)

20. கமலா நாதனான மஹாவிஷ்ணுவின எந்த இடது கையானது விருப்பத்துக்கேற்ற வகையில் நேசமுடன் தலையணையாகப் பயனுடையதாக ஆயிற்றோ, எந்த கரம் முன்னொரு ஸமயம் பசுக்களின் ஆயிரக்கணக்கான எண்ணிக்கை மிக்க மகிழ்ச்சியுடன் அந்தணன் ஒருவனுக்குக் கிடைக்க வகை செய்ததோ, அப்படிப்பட்ட கோவிந்தனின் இடது கை மிகச் சிறப்புற்று விளங்குகிறது.

**दक्षिणबाहु:** வலது திருக்கரம்

बाहु: प्रभो पतगराजपताकिनोऽस्य कट्या स्थित: कथयतीव कमप्युपायम्।
मत्पादपङ्कजपरिग्रहपावनाना जीवात्मनः भवति ससृतिपूर एवम्॥ (२१)

21 பறவைகளின் தலைவனான கருடப்புள்ளை த்வஜமாகக் கொண்ட ஸ்ரீமந்நாராயணனுடைய (மற்றொரு) கையானது, என்னுடைய திருவடிகளைப் பற்றுதலால் மிகவும் தூய்மையான ஜீவாத்மாக்களுக்குப் பிறவிப் பயன் இவ்வளவினாதாகும் என்னும உபாயத்தை சொல்லுமாப்போலே,அவனது இடுப்பில அமைந்துள்ளது.

**चक्रम्** சக்கரம்

श्रीगोविन्द तवाङ्गसङ्गि च शिरश्चक्रं प्रसिद्धं स्थितं
आज्ञाचक्रमपि त्वदीयमतुलं ह्यस्याहतं तिष्ठति।
तिष्ठस्याण्डकटाहपालनपटु. श्रीशिशुमारात्मना
सत्यप्येवमिद सुदर्शनमहो धत्से तुरीय करात्॥ (२२)

22. கோவிந்த ! உன் உடம்பின் மேல் பகுதியில் அமைந்துள்ள சிரஸ் சக்கரம் மிகவும் பிரஸித்தமாயுள்ளது. உன்னுடைய ஆக்ஞா (ஆணை) சக்கரமும், அதற்கு இணையாக குறைவொன்று மில்லாது இருக்கிறது. பிரஹ்மாண்டமாயுள்ள பெரிய வாணலியான

லோகத்தை ரக்ஷிக்க குழந்தை வடிவினனாக இருக்கிறாய். ஆனாலும் நான்காவதான கையினால் இந்தச் சக்கராயுதத்தை ஏந்தியிருக்கிறாய். இது மிக ஆச்சர்யம்!

## शङ्खम् சங்கு

श्रीपाञ्चजन्यममलं तव भूषणं वा किं वा ध्रुवादिषु धियः करणं प्रदातुम्।
साङ्केतितार्थविनिबोधनजागरूकं यन्त्र बिभर्षि किमु वा जयचिह्नमाहो॥ (२३)

23. மாசு (குறைகள்) அற்ற 'பாஞ்சஜன்யம்' எனும் சங்கு உனக்கு அலங்காரப் பொருளாக உள்ளதா? அல்லது துருவன் முதலான பக்தர்களுக்கு அறிவை அளித்தற்குக் கருவியாக உள்ளதா? அல்லது, ரகஸ்யமாயுள்ள சில உண்மைப் பொருள்களை உணர்த்தும் கருவியாகக் கொண்டிருக்கிறாயா? அல்லது உனது வெற்றிக்குக் கட்டியம் கூறும் அடையாளமா?

## केयूरयुग्मम् இரு திருத்தோள் வளைகள்

केयूरयुग्ममनवद्यमणिप्रणीतं गोविन्दराजभुजयोस्सततं विभाति।
भूषात्मनापि भुजयोरलमादिदित्सत् सत्यं समागतमिवाति महःस्वचक्रम्॥
(२४)

24. குறைகளற்ற மணி ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட இரு தோள்வளைகள் கோவிந்தராஜனின் இரண்டு கைகளிலும் எப்போதும் ப்ரகாசிக்கின்றன. மிகவும் ஒளி பொருந்திய சக்ராயுதமும் கோவிந்தராஜனின் கைகளில் ஆபரணமாக அமைய விரும்புவது போல பொருத்தமாக அமைந்திருக்கிறது. இது ஸத்யம்.

## पञ्चायुधानि ஐந்து ஆயுதங்கள்

पञ्चायुधानि परभागमनोहराणि भान्तीह वारिधरतुल्यसुजातदेहे।
यस्मादयं स्फटिकतुल्यवपुर्हि शेषः तस्मिन्महेन्द्रमणिरोचिषि तत्र तानि॥
(२५)

25. ஆதிசேஷன் ஸ்படிகம் போன்ற சரீரமுடையவன். அவன் மீது சயனித்திருக்கும் கோவிந்தனாம் மஹாவிஷ்ணு இந்த்ர நீலக் கல்லின் நிறமுடையவனாக ஒளி பொருந்தியவனாக இருக்கிறான். கார் மேனி நிறத்தான அவனது உடம்பில் மனோஹரமாயுள்ள பஞ்ச ஆயுதங்களும் ஒளி மிக்கவையாகப் பிரகாசிக்கின்றன.

## पाञ्चजन्यम् சங்கம்

ज्ञानप्रदानविधया स्वपदाश्रितानां मन्दस्वरप्रणयनाद्धरि भक्तिभाजाम्।
प्राणप्रयाणकरणेन सुरारिगोष्ट्याः जीवातुरेव भुवने वलतेऽस्य शङ्खम्॥
(२६)

26. 'பாஞ்சஜன்யம்' என்னும் சங்காயுதமானனது, தன்னை அண்டியவர்களுக்கு ஜ்ஞானமளிக்கும் திறமையுடையதாக இருப்பதாலும், பகவானிடம் பக்தி பூண்டவர்க்கு மிக இனிமையான குரலைத் தோற்றுவிப்பதாலும், தேவர்களின் சத்ருக்களான அஸுரர்களை (தனது முழக்கத்தாலேயே) அழிப்பதாலும், இவ்வுலகில் ஜீவராசிகளின் உயிர்களைக் காக்கக் கூடியதாக அமைந்துள்ளது.

## सुदर्शनम् சக்ரம்

सत्यं सहस्रशतधारममोघवीर्यं पाषण्डिनः प्रहरण विल भाति चक्रम्।
गोविन्दराजचरणाम्बुजसंश्रितानां बाभाति भूषणतया रुचिरं तदेव ॥(२७)

27 லக்ஷக்கணக்கான முனைகளை உடையதும், ஈடு இணையற்ற பலமுடையதுமான சக்ராயுதம் பாஷண்டிகளை (வேத நிந்தகர்களை) அழிப்பதில் திறனுடையதாக இருக்கிறது. ஆனாலும் கோவிந்தராஜனின் திருவடித்தாமரைகளை ஆச்ரயித்தவர்களுக்கு அதுவே மிகவும், பிடித்தமான ஆபரணமாக விளங்குகிறது.

गदा தண்டாயுதமென்னும் 'கதை'

कौमोदकी

गोविन्दराजभुजदण्डविभूषणं सा कौमोदकीति विदिता गिरिकल्पसारा।
विष्णोर्गदा विविधदानवयूथहन्त्री मां पातु पालितजगत्रयवर्ति जीवा॥ (२८)

28 கோவிந்தராஜனின் திருக்கைகளில் அலங்காரமாயுள்ள கௌமோதகீ கதாயுதமானது மலைகளனைத்தையும் பொடிப்பொடிக்கும் தன்மை வாய்ந்தது. மூவுலகத்து ஜீவராசிகளையும் ரக்ஷிக்கவல்ல மஹாவிஷ்ணுவின் கதாயுதமானது அசுரக் கூட்டங்களையும் அழிக்கவல்லது. அப்படிப் பட்ட இந்த கதாயுதம் என்னையும் ரக்ஷிப்பதாக.

नन्दकम् நந்தகம் எனும் கத்தி

खड्ग प्रभो. भुजगभोगशयस्य विष्णो श्रीपद्मनाभभुजदण्डविभूषण सन्।
आयोधनेषु परिपन्थिचयान् हिनस्ति ह्यन्या क्लायुधपराक्रमणा सहिष्णु.॥
(२९)

29. திரு ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட பெருமானான ஸ்ரீ கோவிந்த ராஜனின் 'நந்தகம்' எனும் கத்தி ஆயுதம் அந்த பத்மநாபனின் கைகளில் ஆபரணமாக இருந்து கொண்டு, போர்க்களத்தில் திருமாலின் மற்ற ஆயுதங்களிடம கொண்ட பொறாமையால் அவற்றைக் காட்டிலும் அதிகத்திறனுடையதாகப் பகைவர்களை அழிக்கிறது.

## शार्ङ्गम् வில்

श्रीशार्ङ्गमसक्लित भुजयोर्विभूषा किं वा करो वितनुते धनुषोऽथ भूषाम।
स्कन्धश्रिय न तनुते खलु शार्ङ्गहीन यस्मात्तथा धनुरपीति करतेरस्थम॥
(३०)

30. பகவானின் திருத் தோள்கள் சார்ஙகமென்னும் வில் இலலாமல் சோபையுடையதாக இல்லை. இதே போன்று இந்த வில் மஹாவிஷ்ணுவின் உடலில் வேறு இடஙகளில் இருந்தாலும் சோபையுடையதாக இல்லை. எனவே பகவானின் தோளில் வீற்றிருக்கும் 'வில' கைகளுக்கு அணிகலனா? அலலது அந்த கைகள் விலலுக்கு சோபையைத் தருகின்றனவா?

## कण्ठ: திருக்கழுத்து

शेषाहिभोगशयनस्य च कम्बुतुल्यः कण्ठः कृतादरविनिर्गतरक्षणोक्ति.।
नित्यानुषक्तकमलाभुजबन्धशीलः ब्रह्माण्डपाननिपुणस्सुभगो विभाति॥ (३१)

31. ஆதிசேஷன் உடம்பில் சயனத்திருக் கோலம் கொண்டுள்ள ஸ்ரீ கோவிந்தராஜனின் கழுத்து, சஙகுக்குத் துல்யமாயும், ஆதரவுடன் 'நான் உன்னை எல்லாப் பாபஙகளினின்றும் காப்பாற்றுகிறேன்' என்னும் வார்த்தையை வெளிப்படுத்துதலாலும், எப்போதும் கூடவே இருக்கிற மஹாலக்ஷ்மியின் கைகளால அணைக்கப்பட்டதாயும், ப்ரஹ்மாண்டத்தைப் பருகுவதில் திறமையுடயதாயும், மிக்க அழகுடையதாயுமிருக்கிறது.

## कण्ठाभरणम् திருக்கழுத்தணி

ग्रैवेयकं भगवतो नवरत्नजुष्टं भाभाति कण्ठवलये मृदुले मनोज्ञम्।
यस्य प्रभा हि लसते मुकुरायमाणे श्रीकौस्तुभे द्विगुणितं परिपूर्णदीप्ति.॥
(३२)

32. நவரத்னங்களால் கோர்க்கப்பட்ட பகவானுடைய கழுத்திலணிந்திருக்கும் மாலையானது, அந்தக் கழுத்தைச் சுற்றிலும் ம்ருதுவாகவும், மனோகரமாயும் அமைந்துள்ளது. இந்தக் கழுத்தணியின் ஒளியானது, கண்ணாடி போன்று தெளிவான கௌஸ்துபமணியின் காந்தியுடன் கூடி இரு மடங்கு அதிகமான ஒளியுடன் ப்ரகாசிக்கிறது.

33. தாமரை மலர்க்கண்களையுடைய பகவானின் மிக அழகானதும், ஒளி பொருந்தியவையும், கொடி போன்று வளைந்திருக்கக் கூடிய புருவஙகளிரண்டும், ஸ்ரீஹரியின் திருப்பாத கமலஙகளைப் பற்றினோரை அளவிடுகிறது. பிறது இம்மாந்தரைச் சிறப்பாக தன்வயப்படுத்துகிறது. அவர்களின் விசேஷதத்வஙகளை ஆராய்து அதில் ஈடுபட்டவர்களை ஆவலுடையவர்களாகச் செய்கிறது,

## फालम् நெற்றி

गोविन्दराजमहस. विततस्त्रिरेखः सामुद्रिकगमयुतस्त्वथ फालदेशः।
जेजीयतां भुवि मनोज्ञतमो विकासी श्वभ्रांशुबिम्बसदृशस्सुगृहीतचिह्नः॥
(३४)

34. ஸ்ரீ கோவிந்த ராஜனின் ஒளிமிகுந்ததும், மூன்று வரிகளைக் கொணடதும், ஸாமுத்ரிகாலக்ஷணப் பிரகாரம் அமைந்து மனதைக் கவரக்கூடியதாயும், சந்த்ர பிம்பம போன்று அழகாயிருக்கக் கூடிய நெற்றிப் பகுதி மிகவும் சிறப்பாக உள்ளது.

किरीटम् மணிமகுடம்

सर्वेश्वरत्वनियतंसकलाण्ड कोटि निर्माणरक्षणधुरंधरदेवयोग्यम्।
बध्द प्रशस्तनवरत्नचयैः किरीटं पट्टाभिषेकमथ भावयति त्रिलोक्याः ॥
(௩௫)

*35. எப்போதும் எல்லா தேவர்க்கும் தலைவன் என்பதைக் காட்டுவதும், அகில அண்டங்களை ஸ்ருஷ்டித்தும், அவற்றை ரக்ஷிக்கும் திறமையுள்ள தெய்வத்துக்கு உரியதும், ப்ரஸித்தமானன நவரத்னக் குவியல்களால் இழைக்கப் பெற்றதுமான பகவானின் சிரஸிலுள்ள கிரீடம் (ஸ்ரீ ஹரியே) மூவுலகத்துக்கும் தலைவன் என்றும், முடிசூட்டப் பெற்றதை அறிவுறுத்துகிறது.*

ऊर्ध्वपुण्ड्रतिलकम् திருமண் காப்பு

फाले विशालसुमनोहरलक्षणाढ्ये प्रागूर्ध्वपुण्ड्रतिलकं शुचिमृत्स्नयाऽत्तम्।
वक्तीव ससृति पयोनिधिमग्नजीवान् वैकुण्ठमेवमुपयात इति स्वपुण्ड्रः ॥
(௩௬)

*36. அகன்றும், அழகாயும், லக்ஷணமாயுமுள்ள ஸ்ரீ ஹரியின் நெற்றியில், தூய்மையான மேல் நோக்கி அமைந்துள்ள திருமண் காப்பு சுத்தமான திருமண்ணினால் ஆக்கப்பட்டது. அது ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கிய மக்களை நோக்கி தன் வடிவத்தின் மூலமாக 'ஸ்ரீ வைகுண்டத்திற்குச் செல்வீர்' என்று கூறுவது போல உள்ளது.*

केशचयः திருக்குழற்கற்றை

यस्मादह जगति केशवनामभाक् स्यां तत्तादृशे महति केशचये मनोज्ञे।
सर्वर्तुपुष्परचितानघमालिकया गन्धास्समे च निवसन्ति त एव वेदाः ॥
(௩௭)

*37.* எந்த காரணத்தால் அவன் இவ்வுலகில் கேசவன் என்ற பெயரைப் பெற்றானோ, அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த மனதைக் கவரும் குழற்கற்றையில் அனைத்துப் பருவத்து மலர்களும் தொகுக்கப்பட்டுள்ளன. அவையே வேதங்கள் எனப்படுகின்றன.

पादाम्बुज भवति पादसमाश्रितानां जीवातुरत्र जननादिनिरोधदक्षम्।
दक्षस्तथा भगवत. करुणाकटाक्षः तस्मात्पदादिचिकुरान्तनुति ह्यकर्षम्॥
(३८)

*38.* இவ்வுலகில் ஸ்ரீ கோவிந்தராஜனின் தாமரைத் தாள்களைச சரணடைந்தவர்களுக்குப் பிறப்பு முதலியவற்றை நீக்கவல்லதும், நல்வாழ்வினைத் தரக்கூடியதுமாக உள்ளது திருப்பாத கமலங்கள். அது போலவே பகவானின் கருணா கடாக்ஷமும் உள்ளது. அது போல 'திருவடி முதல் திருமுடி' வரையிலுளள இந்த ஸ்தோத்ரம் அமைந்தது.

वपुष सुषमा वचो विदूरां वनमालाभरणस्य पूर्वपुस ।
सुकृतैरुपवर्णयन्ति सन्त. स्मरणादेव पतन्ति पातकानि॥ (३९)

*39.* வனமாலாபரணம் அணிந்தவனும், ஆதி முதல்வனுமான ஸ்ரீமந் நாராயணனின், வாக்கினால் கூட வர்ணிக்க முடியாத, திருமேனியழகைப் பெரியோர்கள், தாஙகள் செய்தபுண்ணிய வசத்தால் வர்ணிக்கின்றனர். அந்தப் பரந்தாமனை மனதால் நினைத்தவுடனேயே நம்முடைய பாபஙகள் யாவும் அழிகின்றன.

कमलापतिदिव्यविग्रहाङ्ग कमलाया अपि मोहन क्लिाङ्गम्।
द्रवयत्यखिलात्मचित्तवृत्ति ननु पाषाणमयी हसत्स्वभूम्ना॥ (४०)

*40.* ஸ்ரீ லக்ஷ்மிபதியின் திவ்ய மஙகள விக்ரஹத்திற்கு (திருமேனிக்கு) உரியதான அடையாளமுடையதும், மஹாலக்ஷ்மியையும மயஙகவைக்கும் வலலமையுடயதுமான திருமேனி, கருங்கல்லைப் போன்று கடினமாயுள்ள ஜீவாத்மாக்களின் மனஸையும தன் மஹிமையால் வலியச் சென்று கரையக் கூடியதாகச் செய்கிறது.

भक्तप्रकण्ड इह भावितशेषशायी पादादिकेशनुतिमेव मुदा जहार।
आपादचूडमनुभूय स रङ्गधाम्नि तामेव दिव्यसुषमां हृदयस्य शुद्धौ॥
(४१)

41. ஆதிசேஷன் மீது துயில் கொண்ட ஸ்ரீ கோவிந்தனைத் துதிக்கும் பக்த ச்ரேஷ்டன், திருவரங்கனிடம் அமைந்துள்ள அந்த வடிவழகை (கோவிந்தராஜனிடமும்) திருவடி முதல் திருமுடி வரை நன்கு அனுபவித்துச் சித்த சுத்தியைப் பெறும் நோக்கத்துடன் துதி செய்கிறான்.

गोविन्दराजसुषमां कु लपालिकाभिः
प्रामाण्यतः प्रणयतश्च सुगीयमानाम्।
सत्य निशम्य भगवानपि विस्मयेत
दास. कथ धुरि निशम्य भवेन्नु जोषम् ॥(४२)

42. குல மகளிரால் தக்க சான்றுகளுடன் பொருந்துமாறு அன்புடன் பாடப்பெற்ற ஸ்ரீ கோவிந்தராஜனின் வடிவழகைச் செவி மடுத்த ஸ்ரீமந நாராயணனும் ஆச்சர்யமடைவது நிச்சயம். அவ்வாறாயின் மிக்க எளியவனான இந்த அடியவன் இந்த ஸ்தோத்ரங்களை நன்கு செவியுற்று வியப்படையாமல் மௌனமாய் இருப்பது என்பது எவ்வாறு இயலும்?

ஸ்ரீகோவிந்தபாதாதிகேசாந்தஸ்துதி முற்றுப் பெற்றது

ஸ்ரீ புண்டரீக வல்லித் தாயார் ஸமேத கோவிந்த ராஜப் பெருமாள் திருவடிகளே சரணம்

# பகுதி 5

|| श्री. ||

## श्रीमते रामानुजाय नमः

## श्री भविष्यत्पुराणे व्यास - जैमिनि संवादे

## श्री चित्रकूटमाहात्म्यम् ||

## ஸ்ரீ பவிஷ்யத் புராணத்தில் வ்யாஸ ஜைமினி ஸம்வாதத்தில் திருச்சித்ரகூட புராணம்

शुक्लाम्बरधर विष्णुं शशिवर्णं चतुर्भुजम्।
प्रसन्नवदन ध्यायेत्सर्वविघ्नोपशान्तये॥ (१)

*1. வெண்பட்டு வஸ்த்ரம் தரித்தவரும், சந்திரனைப் போன்ற ஒளி பொருந்திய வெண்ணிறமுடையவரும், நான்கு கைகளை உடையவரும். மலர்ந்தமுகத்துடனும் கூடிய ஸ்ரீமஹாவிஷ்ணுவை விக்னங்களனைத்தும் நீங்க ப்ரார்த்திப்போமாக.*

एतत्सर्गावनान्तादिकरण जगता पते ।
चित्रकूटे शयानस्य गोविन्देशस्य शासनम्॥ (२)

*2. ஸகல நாயகனாகவும், ஸகல ஸ்ருஷ்டிகளுக்கும், ரஷணத்துக்கும், ஸம்ஹாரத்திற்கும் காரணமாகவும் இருந்து திருச்சித்ரகூடத்தில் சயனித்திருக்கிறவனுமான கோவிந்தராஜப் பெருமானின் திருவாணை காரணமாக உத்தரவாக உள்ளது.*

यन्नाभिकमलोत्पन्नो विधिर्यस्माच्च शङ्कर ।
तस्मै गोविन्दराजाय नमः परमयोगिने॥ (३)

*3. தன்னுடைய நாபீகமலத்தினின்றும் ப்ரம்மதேவனை ஸ்ருஷ்டித்த, அந்த ப்ரம்மாவிடமிருந்து பரமேச்வரனை ஸ்ருஷ்டித்த ட மாத்மாவாயிருக்கிற கோவிந்தராஜனுக்கு நமஸ்காரம்.*

भगवन् मुनिशार्दूल वेदवेदान्तपारग।
परापरविवेकज्ञ धर्माधर्मप्रदर्शक ॥ (४)

4. ஹே பகவந் ! முனிவர்களில் சிறந்தவரே ! வேத வேதாந்தங்களை அறிந்தவரே ! சேதநர், அசேதநம், ஈச்வரன் இவர்கள் ஸ்வருபத்தை நன்கு அறிந்தவரே! தர்ம அதர்மங்களை விளக்கியவரே!

ऋग्यजुस्सामवेदानामथर्वणगिरामपि।
सेतिहासपुराणानामुत्पत्तिर्भवतो मुने ॥ (५)

5. ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வனவேதம் இதிஹாஸ புராணம் முதலானவற்றுக்குத் தாங்களே வெளிப்படுத்துதலுக்கும் பிறப்பிடமானவர்.

वेदमस्तकसूत्राणां यज्ञादीना च कर्मणाम्।
जनिस्त्वत्तो हि लोकनां नारायणदृढव्रत ॥ (६)

6. ஸ்ரீமந்நாராயணனிடத்தில் த்ருடமான பக்தியுடையவரே! வேதாந்தங்களுக்கான ஸூத்ரங்களும் யாகம் முதலானவற்றுக்கான முறைகளும் இந்த உலகத்தவருக்குத் தங்களிடமிருந்தே உண்டாயின.

अवतारो हि सफलो भवतामात्मकेविद।
अग्रेसराणां संसारभयकम्पविमोचन ॥ (७)

7. அறிவும் அனுஷ்டானமும் நிறைந்து மிகவும் ச்ரேஷ்டமானவர்களுக்கு ஸம்ஸார பயத்தை நீக்குபவரே! ஆத்ம ஞானந்தன்னை உணர்ந்தவரே! தங்களது அவதாரம் ஸபலமாயுள்ளது.

ज्ञानेनैव हि जन्तूनां मुक्तिस्तु समुदीरिता।
ऐश्वर्यं तादृशं ज्ञानं त्वदायत्तं मुनीश्वर ॥ (८)

8. உயிர்களுக்கு ஞானத்தினால் மட்டுமே மோக்ஷம் என்று சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட ஞானமாகிற ஐச்வர்யம் தங்களையே சார்ந்திருக்கிறது.

त्व हि नारायणस्यांशो व्दैपायनमुने! श्रुत: ।
अवतारो यदि न चेत् तावकश्शुध्दसात्विक: ।
मादृशास्तु कथं मुक्तिं लभेयुर्भक्तवत्सल ।। (९)

*9. த்வைபாயந முனிவரே ! தாங்களே ஸ்ரீமந் நாராயணனின் அம்சம் என்பதாக அறியப்படுகிறது. பக்தவத்ஸலரே! அப்படிப்பட்ட சுத்த ஸத்வமான தங்களது அவதாரம் இல்லையெனில் எங்களைப் போன்றவர்களுக்கு முக்தி எவ்வாறு கிடைக்கவல்லது?*

देवतिर्यङ्मनुष्याणां प्रलयोत्पत्तिकारणम् ।।
त्वमेव वेत्ता सर्वज्ञः त्वत्तो नान्यो हि भूतले ।। (१०)

*10. தேவர்கள், விலங்குகள், மனுஷ்யர்கள் இவர்களுக்கெல்லாம் ப்ரளயம் (அழிவு) உற்பத்தி (ஸ்ருஷ்டி) ஆகியவற்றுக்குக் காரணமதனைத் தாங்களே அறிவீர்கள். இந்த உலகில் தங்களைத் தவிர அனைத்தையும் அறிபவர் மற்றெவருமில்லை.*

भवत्प्रणीतवेदान्तसूत्राण्यालोडय सर्वदा ।
त्वदग्रे वर्तमानस्य त्वत्पादाम्बुजसेविनः ।
शिष्यस्य भवति स्वान्त तत्वबुध्द्या तु निश्चितम् ।। (११)

*11. தங்களால் இயற்றப்பட்ட வேதாந்த ஸூத்ரங்களை, எப்போதும் ஆலோசித்துப் பிறந்த உண்மை அறிவால். தங்களுக்கு முன்பாக தங்களுடன் கூடியும், தங்களது பாத கமலங்களை ஸேவித்துக் கொண்டும் இருக்கிற சிஷ்யனுக்கு மனது நிச்சயம் ஞானம் நிறைந்ததாகவுள்ளது.*

धर्माधर्मौ श्रुतौ संयक् त्वत्प्रसादान्महामुने ।
प्रधानपुसोर्भेदश्च व्दैपायनमुने! श्रुत: ।। (१२)

*12. முனிச்ரேஷ்டரே! தங்களநுக்ரஹத்தால் தர்மமும், அதர்மமும் நன்றாகக் கேட்டு அறியப்பட்டது. துவைபாயந முனிவரே ச்ரேஷ்டமான மூலப்ரக்ருதி புருஷர்கள் பேதமும் அறிந்து கொள்ளப்பட்டது.*

स्वरूपं च त्वया ज्ञातं जगत्सर्गादिकारणम् ।
परापरात्मनोर्भेदो जन्मभेदश्च विश्रुत: ।। (१३)

*13.* ஜகத் ஸ்ருஷ்டிக்கான காரணஸ்வரூபம தங்களால சொல்லப்பெற்று அறியப்பட்டது. ஜீவாத்மா, பரமாத்மா இவர்களின் பேதமும், பிறப்பின் பேதமும் நன்கு கேட்கப்பட்டது.

गुणत्रयविभागश्च भवता कथितो मम।
देवतिर्यङ्मनुष्याणामुत्पत्तिश्चापि विश्रुता॥ (१४)

*14.* ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் பேதமும் தங்களால் எனக்கு சொல்லப்பட்டது. தேவர்கள், விலங்குகள், மனுஷ்யர்களின் பிறப்புகளும் என்னால் கேட்கப்பட்டன.

लोकभेदाश्च विख्याताः वर्षभेदाश्च विश्रुताः।
जम्बादिव्दीपभेदाश्च कृपया तव सुव्रत!॥ (१५)

*15.* பிரஸித்தமாயிருக்கிற லோக பேதங்களும், வர்ஷபேதங்களும் ஜம்பூத்வீபம் முதலான த்வீப பேதங்களும் க்ருபையுடன் சொல்லப்பட்டு அறியப்பட்டன.

लोके याः सरित. पुण्याः गङ्गासह्यभवादय.।
गोदावरी नर्मदा च तुङ्गभद्रा सरस्वती।
कृष्णवेणी ताम्रपर्णी प्रख्याताः सरित. श्रुताः॥ (१६)

*16.* இந்த உலகில் புண்ணியமான நதிகளான கங்கை, கோதாவரி, நர்மதை, துங்கபத்ரா, ஸரஸ்வதி, க்ருஷ்ணவேணி, தாம்ரபரணி முதலான ஸுப்ரஸித்தமான நதிகள் யாவும் கேட்கப்பட்டு அறியப்பட்டன.

सेतोरपि च माहात्म्य विश्रुतं पापनाशनम्।
यानि चान्यानि तीर्थानि लोके पुण्यतमानि च॥
तानि व्यक्तानि सर्वाणि कृपया तव मे मुने॥ (१७)

*17.* பாபங்களையெல்லாம் நாசம் செய்கிற ஸேதுவின் மாஹாத்மியமும், மேலும் இந்த உலகில் அதிக புண்யம் நிறைந்த எல்லா தீர்த்தங்களும் விஸ்தாரமாகத் தங்களால் சொல்லப்பட்டன.

मन्त्राश्च बहवो ज्ञाताः भुक्तिमुक्तिफलप्रदाः।
सौदर्शनं नारसिंहं श्रीमदष्टाक्षरं तथा॥ (१८)

शैवं पञ्चाक्षरं चैव त्रैयंबकमनुत्तमम्।
श्रीरामतारकं चापि शारदं चाप्यघोरकम्॥ (१९)

तारातारानुताराश्च गारूडं ब्रह्मगारूडम् ।
विष्वक्सेनमहामन्त्रं नामत्रयषडक्षरी ।। (२०)
व्यापकाऽव्यापकाश्चान्याः ये शैवा ये च वैष्णवाः ।
ते मन्त्रास्त्वतिगुण्याश्च विश्रुता भुवि दुर्लभाः ।। (२१)

*18-21.* *இந்த உலகில் பக்தி (இறைவாழ்வு) முக்தி (மோக்ஷம்) முதலான பலன்களைத் தரக்கூடியதும், பிரஸித்தமானதும், அப்ரஸித்தமாயுள்ளதும், கிடைப்பதற்கு மிகவும் அரிதாயிருக்கிறதும், அதிக குணங்களுடன் கூடியதுமான மந்த்ரங்கள் ஸ்ரீஸுதர்சனம், ஸ்ரீந்ருஸிம்ஹம், ஸ்ரீமதஷ்டாக்ஷரம், சைவ ஸம்பந்தமான பஞ்சாக்ஷரம், ஈடு இணையற்ற த்ரியம்பகம், ஸ்ரீராமதாரகம், சாரதம் (அம்பிகை, ஸரஸ்வதி ஸம்பந்தமானது) அகோரகம் (ருத்ரன்). காருடம், ப்ரம்ஹகாருடம் விஷ்வக்ஸேன மஹாமந்த்ரம், நாமத்ரயம், விஷ்ணு ஷடக்ஷரீ, மேலும் சைவர்களும், வைஷ்ணவர்களும் அநுஷ்டிக்கக் கூடிய சீரியதும், மிகச் சீரியதுமான பலவிதமானன மந்த்ரங்களும் தங்களால் உபதேசிக்கப்பட்டன.*

कृष्णक्षेत्रादिमुख्यानि पुण्यानि विविधानि च ।
नगराणि च सर्वाणि कथितानि विशेषतः ।। (२२)
कथितान्यविशेषतः

*22. ஸ்ரீகிருஷ்ண க்ஷேத்ரம் முதலான அதிமுக்யமான புண்ணியம் நிறைந்த பலவிதமான எல்லா நகரங்களும் விசேஷமாகச் சொல்லப்பட்டன.*

पर्वतानाञ्च माहात्म्यं मेर्वादीनां विशेषतः ।
आश्रमाणाञ्च सर्वेषां वनानां च पृथक् पृथक् ।
वर्णाश्रमाणां चरितं तपसां विश्रुतं फलम् ।। (२३)

*23. விசேஷமாக மேரு முதலான பர்வதங்களின் மஹிமைகள் சொல்லப்பட்டன. தனித்தனியாக காடுகளில் உள்ள எல்லா ஆச்ரமங்களினுடையவும் வர்ணாச்ரமங்களை அநுஷ்டிப்பவர்களின் சரிதமும் தபஸ் செய்வதால் உண்டாகும் பலன்களும் உம்மிடமிருந்து எங்களால் கேட்டு அறியப்பட்டன.*

श्रीरंगं कुम्भकोणं च श्रीनिवासबृषाचलम्।
गयाक्षेत्रं कुरुक्षेत्रं तथा बदरिकाश्रमम्॥ (२४)
सालग्रामं चित्रकूटं अनन्तशयनस्थलम्।
क्षेत्रं सत्यव्रतं ख्यातं प्रख्यातं नौमिशं वरम्॥ (२५)
पुष्करक्षेत्रमतुलमुत्पलापथकं तथा।
वैष्णवानि च शैवानि मुने भक्तानुकम्पया।
योगभेदस्तपोभेदो भेदश्च विदितो मया॥ (२६)

24-26. ஸ்ரீரங்கம், திருக்குடந்தை, திருவேங்கடம், வ்ருஷாசலம், கயை, குருக்ஷேத்ரம், பத்ரிகாச்ரமம், சாளக்ராமம், திருச்சித்ரகூடம், அனந்தசயனம், பிரஸித்தமான ஸத்யவ்ரதக்ஷேத்ரம், அதிகப் புகழ்வாய்ந்த நைமிசாரண்யம், ஈடு இணையற்ற, தாமரைகள் நிரம்பிய புஷ்கரக்ஷேத்ரம், உத்பலாபதக விமானமுள்ள திருக்கண்ணபுரம், வைஷ்ணவ, சைவ ஸம்பந்தமானதும், பக்தர்களால் அநுஷ்டிக்கப்படுகிறதுமான யோகபேதம், தபோபேதம் முதலான பேதங்களும் என்னால் அறிந்து கொள்ளப்பட்டன.

अयोध्यादीनि मुख्यानि सर्वाणि नगराणि च।
इत्येवमाद्या बहवो विख्याता भुवि दुर्लभाः॥ (२७)
त्वन्तो मयाऽमलस्वान्त! श्रुताः कारुण्यसागर!।
कृतार्थोऽस्मि प्रसादार्थे चित्त मे निर्मलीकृतम्॥ (२८)

27. அயோத்தி முதலான முக்யமான எல்லா நகரங்களும இவ்வுலகில் இது போன்ற பிரஸித்தமானதும், அப்ரஸித்தமாயுமுள்ள அநேக நகரங்களும் தங்களிடமிருந்து என்னால் அறிந்து கொள்ளப்பட்டன.

28. நிர்மலமான மனமுள்ளவரே ! கருணைக் கடலே தங்களது அநுக்ரஹத்தால் நான் மிகவும் க்ருதார்த்தனானேன். என் மனமும் நிர்மலமாக்கப்பட்டது.

अध्यात्मतर्कवेलायां छिन्नो मे सर्वसंशयः।
मच्चित्तकं तथा वक्तुं त्वन्तोऽन्ये मम दुर्लभाः॥ (२९)

29. ஜீவாத்ம பரமாத்ம விசாரத்தில் என்னுடைய எல்லா சந்தேகங்களும் சிதறடிக்கப்பட்டன. என்னுடைய மனத அவ்வாறு தெளிவு பெற்றது எனச் சொல்வதற்கு காரணம் தங்களைத் தவிர வேறு யாருமில்லை.

त्वमेवादिगुरुस्साक्षात् जगन्नाथाम्शभाक् पुमान्।
तथापि वाक्सुधाधारां पीत्वा पीत्वा पुनःपुनः ।। (३०)

30. தாங்களே ஆதிகுருவான ஜகந்நாதனின் ஸாக்ஷாத் அம்சமானவராகவும், மனிதர்களில் சிறந்தவராகவும் இருக்கிறீர்கள். ஸம்ஸார துக்கங்களை அழிக்கிறவரே ! தங்களது வாக்காகிற அமிர்த தாரையை பருகப்பருகத் தெவிட்டவே இல்லை. (30)

मुनयश्चोपवासन्तो यान्ति विष्णोः पर पदम्।

முனிவர்களும் உமது ஸமீபத்தில் வாஸமிருந்து மகாவிஷ்ணுவின் உயர்ந்த பதமான ஸ்ரீவைகுண்டத்தைச் சென்றடைகின்றனர்.

पुण्डरीकपुरे कृष्णक्षेत्रे पुण्ये तथा शुभे।
पुण्डरीकसरस्तीरे विमाने सात्विकाह्वये ।। (३१)
तिल्लीवनसमाकीर्णे चित्रकूटे मनोहरे।
कण्वस्य वरदानार्थमागच्छत्पुरुषोत्तमः ।। (३२)

31-32. மிகவும் புண்ணியம் நிறைந்ததும், மங்களகரமாகவும் உள்ள புண்டரீகபுரம் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்ரம் என்பதாகச் சொல்லப்படுகிறது. இங்கு புண்டரீகம் எனும் குளக்கரையில் 'ஸாத்வீகம்' என்கிற விமானம் உள்ள ஆலயம் உள்ளது. 'தில்லீவனம்' (தில்லைச் செடிகள் நிறைந்த வனம் - தில்லை மரம் சிறு மரங்களின் வகையைச் சேர்ந்தது. ஈரகம் கொண்ட குறுஞ்செடியாகும். பால் உள்ளது. இலைகள் 2, 3அங்குலம் அகலத்தில் கோலவடிவிலானவை சதுப்பு உப்பங்கழிகளில் வளரும் தாவரம் ஹிந்தியில் கங்குவா, தெலுங்கில் தில்லீ, மலையாளத்தில் கோமதி என்றும் பெயர். வெள்ளை, லோத்திரக செடி நிறைந்த காடு) நிறைந்த மனோஹரமான 'திருச்சித்ரகூடம்' என்கிற இந்த க்ஷேத்திரத்தில் கண்வ முநிவருக்கு வரமளிப்பதற்காக பகவானான புருஷோத்தமன் வந்து சேர்ந்தார்.

गोविन्दराजो भगवान्पुराणो भक्तवत्सल.।
इन्द्राद्यैर्देवबृन्दैश्च पितामहपुरातनैः ॥ (३३)
सिध्दचारणगन्धर्वैः सनकादिमुनीश्वरैः ।
संस्तूयमानः श्रीभूमिनीलानाथः परात्परः ।
प्रमोदार्थं मुनेस्तस्य शेते शेषे परः पुमान् ॥ (३४)

*33-34.* கோவிந்தராஜனான இந்த பகவான் புராணபுருஷன். பக்தவத்ஸலன், இந்திரன், ப்ரம்மா முதலான தேவர்களாலும், ஸித்த, சாரண கந்தர்வர்களாலும் ஸனகாதி முனிவர்களாலும், துதிக்கப்படுகிறவனாக, ஸ்ரீபூமிநீளாஸமேதனாக அந்தக் கண்வ முநிவருக்கு அநுக்ரஹம் செய்வதற்காக இங்கு ஆதிசேஷன் மீது சயனித்திருக்கிறான். *(34)*

उमापतिश्च तत्रैव हरिदर्शनलालस.।
गोविन्दराजपादाग्रे स्थित्वा ताण्डवमाचरत् ॥ (३५)

*35.* உமாபதியான பரமேச்வரனும் பகவானைத் தரிசிக்கும் ஆவலுடன் இங்கேயே கோவிந்தராஜனின் பாதங்களின் அருகில் இருந்து கொண்டு நடனமாடுகிறான்.

करोति तस्य पादाग्रे वसन्स्तत्प्रीतये हर.।
गोविन्दराजसेवार्थमद्यापयानन्दताण्डवम् ॥ (३६)

*36.* கோவிந்த ராஜனின் திருவடிவாரத்தில் வஸித்துக் கொண்டிருக்கிற பரமேச்வரன், அவரை ப்ரீதி செய்வதற்காகவும் அவருக்குத் தொண்டு செய்வதற்காகவும் எப்போதும் ஆனந்த தாண்டவம் செய்கிறான்.

स्तुत्वाऽऽस्ते सततं शम्भुः पार्वत्या सह कौतुकात्।
नन्दीसिंहमुखैर्मुख्यैः गणनाथैश्च सेवितः।
स्वभक्तैश्च भृत्यैश्च नित्यं भक्तिसमन्वितः ॥ (३७)

*37.* நந்தி பகவானாலும், ஸிம்ஹ முகத்துடன் கூடின கணங்கள்ாலும் ஸேவிக்கப்படுகிற பரமேச்வரன் தன்னுடைய

பக்தர்களுடனும், தன்ஸேவகர்களுடனும் எப்போதும் பார்வதியுடன் கூட ஸந்தோஷத்தினால் பக்தியுடன் கோவிந்தராஜனை ஸ்தோத்ரம் செய்து கொண்டிருக்கிறான்.

नारदप्रमुखैश्चापि मुनिभि· परिवारितः।
लोकनाथो विरिञ्चस्तु तत्रास्ते मुनिपुंगवः ॥ (३८)

*38* முனிவர்களில் சிறந்த நாரதர் முதலான முனிவர்களாலே சூழப்பட்டிருக்கிற ப்ரஹ்மதேவனும் அங்கு இருக்கிறார்.

इत्येव सग्रहेणोक्त क्षेत्राणामुत्तम शुभम्।
कृष्णक्षेत्र महापुण्यमस्तीति मुनिपुगव ॥ (३६)

*39.* முனிவர்களில் சிறந்தவரே ! இவ்வாறாக க்ஷேத்ரங்களில் மிக உன்னதமானதும், மிகவும் புண்ணியம் நிறைந்ததுமான இந்த க்ருஷ்ணக்ஷேத்ரம் உள்ளது என்று தேவரீரால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

तदद्य विस्तरेणैव ब्रूहि मे भक्तवत्सल।
शिष्यस्प पृच्छतो मे त्वं दयया वदता वर ॥ (४०)

*40.* பக்தரிடம் கருணை நிரம்பியவரே' புராணங்களையும் வேத வேதாந்தப் பொருள்களையும், விளக்குபவரே ! தஙகளது சிஷ்யனான எனக்குத் தயை கூர்ந்து இந்த க்ஷேத்ரத்தைப் பற்றி விஸ்தாரமாகச் சொல்லி வேண்டும்.

कृष्णक्षेत्र महापुण्यं विशुध्दं पापनाशनम्।
क्षेत्रस्यास्य कुतो नाम कृष्णक्षेत्रमिति श्रुतम् ॥ (४१)

*41.* இந்த க்ஷேத்திரத்துக்கு மிகவும் புண்ணியம் நிறைந்ததும் பரிசுத்தமானதும், பாபங்களை, நாசம் செய்கிறதுமான க்ருஷ்ணக்ஷேத்ரம் என்கிற பெயர் ஏன் ஏற்பட்டது.

अतपत्कि न्निमित्त हि कण्वः कुत्र स्थितोऽमलः।
रुद्रादिदेव बृन्दैश्च कि न्निमित्तमभिष्टुतः ॥ (४२)

*42.* குற்றமற்றவரான கண்வ முனிவர் எதற்காக இங்கு வந்து எங்கு இருந்து தவம் செய்தார்? ருத்ரன் முதலான தேவர்களாலே இந்த க்ஷேத்ரம் ஏன் புகழ்ந்து விவாதிக்கப்படுகிறது.

गोविन्दराजो भगवान् आगतः कथमीश्वरः।
उमासहायो नटनं किमर्थं कुरुते सदा॥ (४३)

*43. பகவான் கோவிந்தராஜன் இங்கு எதற்காக எழுந்தருளியிருக்கிறார்? உமையோடு கூடின ஈச்வரன் இங்கு எப்போதும் ஏன் நடனம் செய்கிறான்?*

तीर्थानि कति वा सन्ति तेषां स्थानानि कुत्र वै।
ब्राह्मणाः क्षत्रियाः वैश्याः शूद्रा ये चान्यजातयः।
गोविन्दराजकैंकर्य निरता मोक्षकामिनः॥ (४४)

*44. புண்ணியம் நிறைந்த தீர்த்தங்கள் இங்கு எத்தனை உள்ளன? அவை உள்ள இடங்கள் யாவை? பிராமணர்களும், க்ஷத்தியர்களும், வைச்யர்களும், மற்றவர்களும், இன்னும் மோக்ஷத்தை அடைய விரும்புகிற மற்ற ஜாதியினர்களும் கோவிந்தராஜனின் கைங்கர்யத்தில் ஏன் ஈடுபட்டிருக்கிறார்கள்.*

के मुक्ताः परमं यान्ति क्षेत्रेऽस्मिन् विमलात्मनः।
एतत्सर्वं ममाचक्ष्व श्रोतुकामस्य वै मुने॥ (४५)

*45. சரணமடைந்தவர்களின் வினை தீர்க்கும் பிரானுடைய இந்த க்ஷேத்திரத்தில் முக்தி அடைந்தவர்கள் யார்? முநிச்ரேஷ்டரே! இவையனைத்தையும், அறிய விரும்புகிற எனக்கு விபரமாகச் சொல்ல ப்ரார்திக்கிறேன்.*

श्रीव्यास : *வ்யாஸர் கூறுகிறார்*

उक्तं जैमिनिना वाक्यं आकर्ण्य तपता वरः।
एतत्सर्वं महद्गुह्यं भवता जैमिने! श्रुतम्॥ (४६)

*46. தவச்ரேஷ்டரான வ்யாஸர், ஜைமினி முனிவரால் சொல்லப்பட்ட இந்த வாக்கியத்தை கேட்டுக் கூறுகிறா. ஜைமினியே! மிகவும் ரஹஸ்யமான இவையனைத்தும் தங்களால் கேட்கப்பட்டது*

शिष्याणां मामकानां च त्वं वरिष्ठस्तपोधन।
अस्य क्षेत्रस्य माहात्म्यं विस्तरेणैव वर्णितुम्॥ (४७)

47. தவச்ரேஷ்டரே ! இந்த க்ஷேத்திரத்தின் மாஹாத்மியத்தை என்னைப் போன்றவர்களுக்கும், மற்ற சிஷ்யர்களுக்கும் விஸ்தாரமாக வர்ணிப்பதற்கு நீரே மிகச் சிறந்தவர்.

ज्ञानतो मे यथाशक्ति तथा विप्र वदामि ते।
शृणु तत्क्षेत्रमाहात्म्यमप्रमत्तेन चेतसा।। (४८)
इत्युक्त्वा तस्य माहात्म्यं प्रवक्तुमुपचक्रमे।

48. பிராமணோத்தமரே ! "எனக்குத் தெரிந்தவரையில் தங்களுக்குச் சொல்கிறேன். இந்த க்ஷேத்திரமாஹாத்மியத்தை வேறு சிந்தையற்றமனதேத்தோடு கேட்பீராக." என்பதாகச் சொல்லி அவருக்கு இந்த மாஹாத்மியத்தை சொல்ல ஆரம்பித்தார்.

दशयोजनविस्तीर्णे स षड् योजनमात्रके।
कावेर्याश्चोत्तरतटे योजनद्वितयावधौ।
एकयोजनमात्रेण पूर्वांभोधेस्तु पश्चिमे।
श्वेताया सरितः क्रोशद्वितये दक्षिणापथे।
पुण्डरीकाख्यनगर वेधसा निर्मित पुरा।। (४६)

49. பத்து யோஜனை விஸ்தீர்ணமும் (நீளமும்), ஆறுயோஜனை அகலமும் கொண்ட பிரதேசத்தில், காவேரி நதியின் வடக்குக் கரை பக்கம் இரண்டு யோஜனை தொலைவிலும், கிழக்கு ஸமுத்திரத்தின் மேற்குத் திசையில் ஒரு யோஜனை தொலைவிலும், வெண்ணிற நீரையுடைய ஆற்றின் (வெண்ணாறு) தென் திசையில் இரண்டு க்ரோச தொலைவிலும், புண்டரீகம் என்று பிரஸித்தமான நகரம் முன்னொரு சமயம் ப்ரம்மாவால் நிர்மாணிக்கப்பட்டது. (ஒரு யோஜனை என்பத 8 மைல் தொலைவு என்றும், ஒரு க்ரோசம் என்பது 2 மைல் தொலைவு என்றும் கணக்கிடப்படுகிறது)

समानममरावत्या. सर्वसेव्यमनोहरम्।
क्षेत्राणामुत्तम क्षेत्र पुण्यसञ्चयकारणम्।। (५०)

50. எல்லோராலும் போற்றப்பட்டு அதிமனோஹரமானதும், புண்ணியங்கள் நிறைந்து இருக்கக் காரணமானதும், மற்ற க்ஷேத்திரங்களனைத்திலும் சிறந்ததான இந்த க்ஷேத்திரம் தேவலோகமான அமராவதிக்கு ஈடாக விளங்குகிறது.

अस्मिन् क्षेत्रे निज वैरं पुरुषाः पुण्यभाजनाः।
मुञ्चन्ति स्थलमाहात्म्यात् प्राप्नुवन्ति नराः शुभम्॥ (५१)

*51. இந்த ஸ்தலத்தின் மஹிமையால் இந்த க்ஷேத்திரத்தில் புண்ணியம் செய்கிற மனிதர்கள் தங்களுக்குள் விரோதங்களை விட்டு விடுகிறார்கள். மனிதர்கள் அனைவரும் நன்மையைப் பெறுகின்றனர்.*

अस्मिन् प्रदेशं तत्क्षेत्रमिति जानीहि जैमिने!।
तपोनिष्ठस्य कण्वस्य वक्ष्यामि शृणु सुव्रत!॥ (५२)

*52. ஜைமினியே! விரதத்தை உடையவரே! இந்த பிரதேசத்தில் கோவிந்தராஜக்ஷேத்தரம இவ்வாறாக அமைந்துள்ளது என்பதை தெரிந்து கொள்வீராக. இனி, தவம் செய்வதில் உறுதி கொண்ட கண்வமுனிவரைப் பற்றி சொல்லப் போகிறேன். கேட்பீராக.*

कण्व. पुरा कृतयुगे संसारोच्छित्तये पुनः।
मेरुशृग समासाद्य तपस्तेपे सुदुष्करम्॥ (५३)

*53. முன்னொரு சமயம் க்ருதயுகத்தில் கண்வமுனிவர் மறுபடியும் தனக்கு ஸம்ஸாரபந்தம் ஏற்படாமல் தடுப்பதற்கு மேரு பர்வதத்தை அடைந்து மிகவும் கடுமையான தவம் செய்தார்.*

वैकुण्ठाराधनपरो मुनिर्भागवतोत्तमः।
एव तपस्यतस्तस्य बहवो वत्सरा गताः॥ (५४)

*54. ஸ்ரீமந்நாராயணனை ஆராதிப்பவரும், பாகவதோத்தமருமான அந்தக் கண்வமுனிவர் இவ்வாறு தவம் செய்கையில் பலவருஷங்கள் சென்று விட்டன.*

तत. प्रीतोऽस्य तपसा भगवान् भूतभावनः।
सन्निधत्तेऽग्रतस्तस्य पन्नगारातिवाहन.॥ (५५)

*55. கருடவாஹனாரூடனாய், முக்காலத்திலும் உள்ளவை அனைத்தையும் உணரக்கூடிய பகவான் ஸ்ரீமந் நாராயணன், முனிவருடைய தபஸால் ப்ரீதியடைந்து அவருக்கு எதிரில் காட்சி கொடுத்தார்.*

इन्द्रनीलदलश्यामं कुंकुमारुणवाससम्।
कुन्दकुड्मलसंकाशं दन्तपंक्तिविराजितम्॥ (५६)

56. அல்லிப்பூவின் இதழின் நீல நிறம் கொண்ட திருமேனி உடையவரும், குங்குமம் போன்ற சிவந்த ஆடையணிந்தவரும், முல்லை புஷ்பத்தின் மொக்குகள் போல் பிரகாசிக்கிற பற்களின் வரிசை உடையவரும்,

प्रफुल्लकमलोल्लासिवदनश्रीविराजितम्।
नानारत्नमयीजुष्टमकुटोज्वलमस्तकम्॥ (५७)

57. மலர்ந்த தாமரை போன்ற முகத்தோற்றமுடையவரும, பலவித ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டு, கிரீடம் அணிந்த சிரஸை உடையவரும்.

दयार्द्रीभूतनयन प्रस्फुरद्गण्ड मडलम्।
दीर्घबाहु बृहत्स्कन्च कंबुकण्ठोपशोभितम्॥ (५८)

58. கருணை நிரம்பிய கண்களை உடையவரும், களை உடையவரும் பிரகாசிக்கிற கன்னங்களை உடையவரும், நீண்ட கைகளை உடையவரும், பெருத்த தோள்களை உடையவரும், பல நிறமுள்ள மாலைகளை அணிவதால் சோபையுடைய கழுத்தை உடையவ்ரும்.

श्रीनिवासस्थलीभूतविशालोद्दामवक्षसम्।
कौस्तुभालकृत दिव्यवनमालाविराजितम्॥ (५९)

59. ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாக உடைய அகன்ற மார்பை உடையவரும், கௌஸ்துப மணிமாலை அணிந்தவரும், திவ்யமான வனமாலையை அணிந்து விளங்குபவரும்.

श्रीवत्सलक्षणोपेतं दिव्याभरणभूषितम्।
दिव्यगन्धानुलिप्ताग तुलसीदामवेष्टितम्॥ (६०)

60. ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை உடையவரும், உயர்ந்த ஆபரணங்களை அணிந்தவரும், நல்ல வாசனை நிரம்பிய சந்தனம் பூசியவரும், மணம் நிறைந்த துளஸீ மாலை அணிந்தவரும்,

विनतानन्दनारूढं प्रणतार्तिहरं हरिम्।
तत्रालोक्य मुनिश्रेष्ठः कण्वो विमलमानसः॥ (६१)

*61. கருடன் மீது அமர்நதிருப்பவரும், பக்தர்களுக்குத் தீஙகை நீக்கி அருள்புரிபவருமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நிர்மலமான மனமுடைய கண்வமுனிவர் அவ்விடத்தில் பார்த்து,*

प्रदक्षिणनमस्कारैः स्तोत्रैः स्तुत्वा जगत्पतिम्।
आनन्दनिर्भरमनाः जोष तस्थौ कृताञ्जलिः॥ (६२)

*62. லோக நாயகனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை பரதக்ஷிண நமஸ்காரஙகள் செய்து, பலவிதமாக ஸ்தோத்திரஙகள் செய்து புகழ்நது மகிழ்ச்சி பொஙகி மௌனமாக நிறைந்த மனத்தராய் கூப்பியகைகளை உடையவராக இருந்தார்.*

भगवान् பகவான் சொன்னார்-

त्वदीयतपसा तुष्टो भवाम्यद्याक्षिगोचरः।
अह वरप्रदानार्थं भवतः समुपागत.॥ (६३)

*63. உம்முடைய தபஸ்ஸால் சந்தோஷமடைந்து உம்முடைய கண்களுக்குத் தோற்றமளிக்கிறேன் உமக்கு வரவேண்டிய வரஙகளை கொடுப்பதற்காக நான் உம்மிடம் வந்திருக்கிறேன்.*

मम सन्दर्शनं पुंसां दुर्लभं मुनिसत्तम।
वर वृणीष्व भद्रं ते यदभीष्टं ददाम्यहम्॥ (६४)

*64. முனிச்ரேஷ்டரே! மனிதர்களுக்கு என்னுடைய தர்சனம் கிடைப்பது மிகவும் அரிது. உமக்கு மஙகளம் உண்டாகட்டும். உமக்கு வேண்டிய வரத்தைக் கேளுஙகள். நீர் விரும்பும் வரத்தை அளிக்கிறேன்.*

एवं ब्रुवाण त वीक्ष्य श्रीपति लोकनायकम्।
समयाचत कैवल्यं ऋषिः संयमिनां वरः ।। (६५)

65. இவ்வாறு சொல்லும் லோகநாயகனான அந்த லக்ஷ்மீ நாராயணனைக் கண்டு முனிவர்களில் சிறந்த கண்வமுனிவர் தமக்கு மோக்ஷத்தை யாசித்தார்.

प्रत्युवाच दिजश्रेष्ठं कर्मबन्धोऽस्ति तेऽनघ।
तत्कर्म बन्धनाशार्थं पर्यटन् पृथिवीतले ।। (६६)

66. பிராமணோத்தமரைப் பார்த்து பகவான் சொன்னார். குற்றமற்றவரே ! உமக்கு முற்பிறப்பு வினைகள் இருக்கின்றன. அந்த வினைகள் அழிவதற்காக இந்த பூமியில் யாத்திரை செய்ய வேண்டும்.

तीर्थानि यानि मुख्यानि लोके पूतानि सर्वश.।
तानि सञ्चर शुध्दात्मा भविष्यसि ततो मुने ।। (६७)

67. முனிவரே ! இந்த உலகம் முழுவதிலும் உள்ள முக்கியமான பரிசுத்தமான புண்ணிய தீர்த்தங்கள் அனைத்துக்கும் யாத்திரையாகச் செல்வீராக. அதனால் பரிசுத்தமான ஆத்மாவை உடையவராவீர்.

पुण्डरीकाख्यनगर पुण्डरीकासनेन वै।
विश्वकर्माणमाहूय यज्ञार्थं निर्मित पुरा ।। (६८)

68. முன்னொரு சமயம் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மாவால் யாகம செய்வதற்காக விச்வகர்மாவை அழைத்துப் புண்டரீகமென்னும் நகரம் ஸ்ருஷ்டிக்கப்பட்டது.

तत्पुण्डरीक सदृश पुण्डरीकमिति स्मृतम्।
तत्र यज्ञान् बहून् कृत्वा मदाराधनतत्परः ।। (६९)

69. அந்த நகரம் தாமரை மலர் போலிருந்ததால் புண்டரீக நகரம் என்பதாக அழைக்கப்பட்டது. ப்ரம்மாவும் அங்கு அநேக யாகங்களைச் செய்து கொண்டு என்னை ஆராதித்துக் கொண்டிருந்தார்.

प्रजापतिश्चिरं कालमुवास मुनिपुंगव।
ब्रह्मणो यज्ञवाटत्वात् तत्क्षेत्रं पुण्यवर्धनम्॥ (७०)

70. பிரம்ம தேவனும் அநேக வருஷங்கள் அங்கு வஸித்தார். முனிவர்களில் சிறந்தவரே ! ப்ரம்மாவின் யாகசாலை அமைந்ததால் இந்த க்ஷேத்திரம் புண்ணியம் நிறைந்ததாயும் புண்ணியத்தை வளர்ப்பதாயுமுள்ளது.

तादृश पुण्डरीकाख्यनगर प्राप्य सुव्रत।
तत्र तिल्लीवनान्तस्था शुद्धा पुष्करिणी वरा॥ (७१)

71. தவச்ரேஷ்டரே ! அப்படிப்பட்ட புண்டரீகமென்னும் நகரத்தை அடைந்து, அங்கு உள்ள தில்லீவனம என்கிற இடத்தில் ச்ரேஷ்டமான புஷ்கரணியை அடைந்து,

पुष्करिण्याः जले शुद्धे स्नात्वा देवान् ऋषीन् पितॄन्।
सन्तर्प्य मनसा ध्यायन् मामेवाहर्निशं पुनः॥ (७२)

72. அந்த புஷ்கரிணியின் சுத்தமான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, தேவ, ரிஷி பித்ருக்களுக்கான தர்ப்பணம் முதலானவற்றைச் செய்து மறுபடியும் இரவும் பகலும் மனஸால் என்னையே நினைத்துக் கொண்டு,

मदाराधनशुध्दात्मा तपश्चर महामुने।
ब्रह्मेशेन्द्रादिमुख्यैश्च सर्वदेवैरनुवृतः॥ (७३)

73. என்னுடைய ஆராதனத்தால் பரிசுத்தமான ஆத்மாவோடு ப்ரம்மா,. ஈச்வரன், இந்திரன் முதலான சிறந்த தேவர்களைப் பின்பற்றித் தவம் செய்வீராக !

प्रत्यक्षीभूय तत्रैव त्वदभीष्ट ददाम्यहम्। (७४)
आविर्भावेन वेलायां मम नीलमणिद्युतिः॥

74. அவ்விடத்திலேயே உம்முன் தோன்றி நான் உம் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்.

मम ज्योतिर्मण्डल तु यावत् व्याप्तं पृथ्वीतले। मही
तावत्पृथ्वीतल कृष्णक्षेत्रमित्यभिधीयते॥ (७५)

75. நான் தோன்றுகிற போது எனது நீல மணியின் ஒளி, என்னுடைய காந்தி மண்டலம் இந்த பூமியில் எது வரை பரவியுள்ளதோ, அது வரை உள்ள இந்த ப்ரதேசம் பூராவும் க்ருஷ்ண க்ஷேத்திரம் என்று சொல்லப்படுகிறது.

ममापि नित्यवासोऽत्र प्रीत्यर्थं भवतो मुने।
भविता नित्यभक्तिस्त्वं मामेव स्मर निश्चल :॥
मामेवाराधयाजस्र श्रध्दाभक्तिसमन्वित॥ (७६)

76. முனி புஙகவரே ! நான் உம்முடைய ப்ரீதிக்காக இஙகு நித்யவாஸம் செய்யப் போகிறேன். நீயும் கலக்கமற்றவராய் ஸ்திரபக்தியுடையவராய, என்னையே எப்போதும் நினைப்பீராக. எப்போதும ச்ரத்தையுடனும் பக்தியுடனும் என்னையே ஆராதிப்பீராக.

इत्येवमुक्त्वा मुनिपुगव तं
कृताञ्जलि नेत्रपुटेन वीक्ष्य।
तिरोदधे श्रीपतिरग्रतोऽस्य
महानुभावः प्रणतार्तिहारी॥ (७७)

77. இவ்வாறாகச் சொல்லி, மஹாநுபாவனான, தன்னை அண்டியவர்களின் குறை நீக்கி ரக்ஷிக்கிற ச்ரிய:பதியான மஹாவிஷ்ணு, கூப்பிய கையரான முனிவரை அழகிய கண்களால் கடாக்ஷித்து, அவருடைய எதிரிலிருந்து மறைந்து விட்டார்.

முதல் அத்யாயம் நிறைவுற்றது.

# இரண்டாம் அத்யாயம்

जैमिनि उवाच ஜைமினி கூறினார்.

मुनिना कि कृत पश्चादिन्द्रियागोचरे करौ।
ब्रूहि मे कृपया स्वामिन् शिष्यवात्सल्यगौरवात्॥ (१)

1 ஸ்வாமியே! ஸ்ரீ மஹா விஷ்ணு மறைந்த பிறகு (கண்வ) முனிவரால என்ன செய்யப்படடது? சிஷ்யனான அடியேனிடம் உள்ள மிகுந்த வாத்ஸல்யத்தால கருபை கூர்ந்து எனக்குச் சொலவீராக.

व्यासः उवाच வ்யாஸர் சொன்னார்

ऋषिरुन्मील्य नयने कूलकषमुदान्वितः।
श्रुत्वा लक्ष्मीपतेर्वाक्य रोमाञ्चितवपुर्भृशम्॥ (२)

2. கரைபுரண்ட ஸந்தோஷமடைந்த (கண்வ) முனிவர் கணகளைத் திறந்தவராக லக்ஷ்மீகாந்தனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் வார்த்தையை கேட்டு மயிர்க்கூச்சல் ஏற்பட்ட சரீரமுடையவராக ஆனாா

अवतीर्य महामेरो· शृगात् सञ्चरितु भुवि।
प्रतस्थे तीर्थयात्रा तु वैकुण्ठेशप्रसादत·॥ (३)

3. ஸ்ரீ வைகுண்டாதிபதியின் அனுக்ரஹத்தால் மஹா மேருபர்வதத்தின் மேலிருந்து இறங்கி, பூமியில் ஸஞ்சரிபபதற்காக, தீர்த்த யாத்திரை செயவதற்காகப் புறப்பட்டார்.

यानि तीर्थानि पुण्यानि क्षेत्राणि विविधानि च।
तानि तानि समासाद्य वैष्णवानि विशेषत·॥ (४)

4. பலவிதமான புண்ணிய தீர்த்தங்களையும் (நதிகளையும்) விசேஷமாக அமைந்துள்ள விஷ்ணு க்ஷேத்திரஙகளையும் அடைந்து,

प्रतिक्षेत्रं जगन्नाथं नमस्कृत्वा तु शार्ङ्गिणम्।
उपोष्य त्रिदिनं क्षेत्रवासं कृत्वात्मशुध्दये ॥ (५)

5. ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் எழுந்தருளியிருக்கிற சார்ஙகபாணியான ஜகந்நாதனை ஸேவித்துக் கொண்டும், ஆத்ம சுத்திக்காக ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் மூன்று தினங்கள் உண்ணா நோன்பு வஸித்துக் கொண்டும்

क्षेत्रपिण्डादिकं सर्वमाचरन् श्रुतिचोदनात्।
मेरोर्दक्षिणदिग्भागे विन्ध्याचलमुखानि च ॥ (६)

6. ச்ருதியில் சொல்லியபடி ஆஙகாஙகேயுள்ள க்ஷேத்திரஙகளில் தேவ ரிஷி பித்ருக்களுக்கான தர்ப்பணாதிகளைச் செய்தும், மேரு பர்வதத்தின் தென் திசையில் விந்திய பர்வதம் முதலாகவுள்ள

पर्वताश्चापि मुख्यानि नगराणि क्रमेण वै।
आसाद्य तानि सर्वाणि स्नात्वोषित्वा त्रिरात्रकम् ॥ (७)

7. முக்கியமான நகரஙகளையும், பர்வதஙகளையும், நதிகளையும தாண்டி, தென் திசையில் ஸஞ்சாரம் செய்த, கண்வ முனிவர் ச்ரேஷ்டமான திலலைச் செடி கள் நிறைந்த பிரதேசத்தைப் பார்த்தார்.

'उक्तान्येतान्यतिक्रम्य पर्यटन् दक्षिणापथम्।
[illegible] ॥ (८).

8. கீழ்ச் சொல்லப்பட்ட இந்த க்ஷேத்ரஙகளையும், நதிகளையும் தாணடி, தென் திசையில் ஸஞசாரம் செய்து, கணவ முனிவர் ச்ரேஷ்டமான தில்லைச்செடி கள் நிறைந்த பிரதேசத்தைப் பார்த்தார்.

नं नानालताकीर्णं सर्वपुष्पमनोहरम्।
ड्भिश्च ऋतुभि.सेव्य फलकन्दकदम्बकम् ॥ (९)

9. அந்தவனம் அநேக கொடிகள் நிரம்பியதாயும், மனோஹரமான எலலாவித புஷ்பஙகளை உடையதாயும் ஆறுவித ருதுக்களால் நிறைந்து போற்றத்தக்கதாயும், நிறைய பழஙகளும், கிழங்குகளும் நிரம்பியதாயும்,

उद्यान्तपल्लवान्तैश्च मञ्जरीपुञ्जपत्रकैः ।
अगारसदृशप्रायपरागच्छन्नदिङ्मुखै ॥ (१०)

10 சக்தி வாயநத தளிாகள் உடையதாயும, கொத்துக கொத்தான இளந் துளிர் இலைகளை உடையதாயும், நெருப்பைப போன்று சிவநத மகரந்த தூள்களால மறைக்கப்படட திசைகளை உடையதாயும்,

धावभ्रान्तिक रोल्लासी पल्लवद्युतिरञ्जितै. ।
आशाच्छत्रावलीभूत विलसत्पुष्परेणुभि. ॥ (११)

11 ஒளி வீசுகிற தளிாகளை உடையதாயும குடைபோனறு எலலா திககுகளிலும வட்ட வடடமாக படிந்துள்ள மகரந்த தூள்களை உதிாக்கும புஷ்பஙகளை உடையதாயும

शलाटुफल सस्पृष्ट परिपक्क -फलावहै. ।
आयामविस्तराविष्टै पातालगतशुध्दकै . ॥ (१२)

12 நன்கு பழுத்த பழஙகளைக் கொண்டதாயும, காயகள நிரமபியதாயும, நீண்ட, அகலமான, பாதாளம் வரை செலலக்கூடிய வேர்களையுடையதாயும் (முனிவர்கள் வசிக்கும குகைகளை உடையதாயும்)

[illegible]न्तुभि ।
बलाहकपथातीतस्कन्धमूलप्रदेशकै ॥ (१३) १७

13. (குயில் போன்ற ஒருவகை) பறவைகளுடன், பலவகையான உயரமான கோபுரஙகளில் பொந்துகளில வஸிக்கிற பிராணிகளை உடையதாயும, கொக்குகள் பறக்கும வானவெளிவரை வளர்ந்த கிளைகளையுடையதாயும்,

तिल्लीतरुमुखैर्वृक्षैर्विपिनैर्निबिडं शुभम् ।
अश्वत्थैश्च कपित्थैश्च पनसैरसनैरपि ॥ (१४)

*14. தில்லி வ்ருக்ஷங்கள் நிறைந்து மங்களமாயும் நெருங்கியுள்ள காடுகளையும், அரசு, விளா, பலா, அன்னாசி மரங்களை உடையதாயும்,*

वकुलै . विकुलैः किचित् प्रवालैर्वञ्जुलैरपि।
चूतैः प्रभूतैर्मन्दारैः कोविदारैश्च संकुलम्॥ (१५)

*15. மகிழ மரங்களாலும், சிறிய இலைகளை உடைய வகுள (மகிழம்பூ) மரங்களாலும, பிரம்புக் கொடிகளாலும், மா மரங்களாலும், நிறைந்த தேவலோகத்து மந்தார (பாரிஜாத) வ்ருக்ஷங்களாலும், மலை அத்தி மரங்களாலும் நிரம்பியதாயும்*

न्यग्रोधोदुम्बरप्लक्षरुषैर्दाडिमकैरपि।
नाळिकेरैश्च पुन्नागैः चाम्पेयैश्चम्पकैरपि॥ (१६)

*16. ஆல், அத்தி, இருளி, (கரடு முரடான ஒரு வகை மரம்) மாதுளை, தென்னை, புன்னாகம், நாககேஸரம், சம்பகம் முதலிய வ்ருக்ஷங்கள் நிறைந்ததாயும்.*

खर्जूरमालतीभिश्च शमीभिः कुटजैरपि।
पाटलैश्च पलाशैश्च जम्बूभिरपि पूरितम्॥ (१७)

*17. பேரீச்சை, குடமல்லிகை, கொடிகளாலும், சமீ (நெருப்புள்ள மரம்) அலலது அரணி வ்ருக்ஷங்களாலும், குடஜம் என்னும் மலர்களாலும் நிரம்பியதாயும், பலாசம், நாகை மரங்கள் நிறைந்ததாயும்,*

उपारिथतैर्मल्लिकाभि. यूथिकाभिश्च वासितम्।
तुलसीकाननोपेत केतकीतरुशोभितम्॥ (१८)

*18. பூஜைக்கு தகுதியான மணம் நிரம்பிய மல்லிகைகளாலும், துளஸீ வனங்கள், தாழை (தாழம்பூ) மரங்களால் சோபிக்கிறதாயும்,*

क्वचिच्छ्यामं क्वचिद्रक्तं क्वचित्कनकभासुरम्।
क्वचित् पिंगलवर्णाभ क्वचित्कर्बुरवर्णकम्॥ (१९)

19 சில இடங்களில் கருப்பு நிறமுள்ளதாயும், சில இடங்களில் சிவப்பு நிறமுள்ளதாயும், சில இடங்களில் பொன்னிற பிரகாசமுள்ளதாயும், சில இடங்களில் மங்கிய செந்நிறமுள்ளதாயும், சில இடங்களில் பல நிறங்களை உடையதாயும்,

क्वचिच्छुक्ल क्वचिन्नीलं क्वचिद्धूसरवर्णकम्।
क्वचित्पीत क्वचिच्छुभ्र क्वचिदुन्नतभूतलम्॥ (२०)

20. சில இடங்களில் வெளுப்பு நிறமுள்ளதாயும், சில இடங்களில் நீல நிறமுள்ளதாயும், சில இடங்களில சாம்பல் நிறமுள்ளதாயும், சில இடங்களில மஞ்சள் நிறமுள்ளதாயும், சில இடங்களில் பள்ளமாயும், சில இடங்களில் மேடாகவும் உள்ள பிரதேசங்களை உடையதாயும்,

क्वचित्सकण्टक शुष्क क्वचिन्निष्कण्टकस्थलम्।
क्वचित् ग्राह्यफलोपेत क्वचित्त्याज्यफलैर्युतम्॥ (२१)

21. சில இடங்களில முட்களை உடையதாயும், சில இடங்கள் முள் இல்லாத பிரதேசங்களாகவும், சில இடங்கள் எடுத்து உபயோகிக்கத் தக்க பழங்கள் நிறைந்த இடமாகவும், சில இடங்கள் உபயோகிக்காமல் விட்டு விடத்தக்க பழங்கள் நிறைந்த இடமாகவும்,

नानागन्धसमायुक्त दुर्गमं सुगम क्वचित्।
क्वचिदुष्ण क्वचिच्छीत क्वचिच्छीतोष्णसुन्दरम्॥ (२२)

22. சில இடங்கள் பலவித வாசனைகள் நிறைந்ததாயும், சில இடங்கள் அடைய முடியாததாயும், சில இடங்கள் அடையத் தகுந்ததாயும், சில உஷ்ணம் நிறைந்த பிரதேசங்களாயும், சில குளுமை நிறைந்த பிரதேசங்களாகவும், சில இடங்கள் உஷ்ணம, குளிர்ச்சி கலந்த அழகிய பிரதேசங்களை உடையதாயும்,

क्वचिदाश्रमजालैश्च पूरितं मुनिसेवितम्।
प्रसन्नसल्लिस्फीतसरोवरमनोहरम्॥ (२३)

23. சில இடங்கள் முனிவர்களால ஸேவிக்கத்தக்க ஆச்ரமங்கள் நிறைந்ததாயும், சில இடங்கள் பெரிய மனோஹரமான, தெளிந்த நீர் நிறைந்த நிலைகளை உடையனவாயும்,

शान्तदावानलं सौम्य नीरोग निरुपद्रवम्।
मकरन्दरसास्वाद मत्तभृङ्गोद्भटस्वनम्॥ (२४)

24. சாந்தமான (அடங்கிய) காட்டுத் தீயை உடையதாயும், அழகானதும் , நோயற்றதாயும், இடையூறுகள் இல்லாததாயும், பூக்களினின்றும் இனிப்பான மகரந்தத் துகள்களை உண்டதால் மதங் கொண்ட வண்டுகளின் மிக உன்னதமான (ரீங்கார) சப்தத்தை உடையதாயும்,

मधुरैः कोकिलालापैः केकालापै. कलापितम्।
वायुपूरितवेणूना मधुरै. सुस्वरैरपि॥ (२५)

25. குயில்களின் இனிமையான கூவுதல்களாலும், கூட்டமான மயில்களின் கேகா சப்தங்களாலும், காற்று நிரம்பிய மூங்கில் துவாரங்களின் இனிமையான ஸ்வரங்களாலும்,

शुकानां सारिकाणां च निनदैः बहुसुन्दरम्।
नानापक्षिसमाकीर्णं नानामृगसमाकुलम्॥ (२६)

26. கிளி, ஸாரிகா முதலான பறவைகளின் சப்தங்களாலே மிக அழகானதாயும், அநேக பறவைகளின் சேர்தலாலும் அநேக மிருகங்களின் கூட்டங்களாலும் நிரம்பியதாயும்,

सर्वपुष्पफलोपेतं सदा पूर्णमनोहरम्।
नित्यानन्दकरं तिल्लीवनं तिर्यक् क्रमाद्ययौ॥ (२७)

27. எல்லா புஷ்பங்களும், பழங்களும் நிறைந்ததும், எப்போதும் மனதுக்கு இனிமையைத் தரக் கூடியதும், எப்போதும் சந்தோஷத்தை தரக்கூடியதுமான தில்லைவன ப்ரதேசத்தைக் கடந்து விரைவாக சென்றடைந்தார்.

तत्र तिल्लीवनान्तस्थं पुण्डरीकपुरं महत्।
व्यालक्षयन्मुनिश्रेष्ठस्तपस्वी वाग्विदां वरः॥ (२८)

28. பேச்சாளிகளில் சிறந்தவரும், தபோநிஷ்டரும், முனிவர்களில் சிறந்தவருமான கண்வ முனிவர் அங்கு தில்லைவனத்தின் நடுவே உள்ள மஹத்தான புண்டரீகபுர க்ஷேத்திரத்தைச் சுற்றிக் கண்டறிந்தார்.

पुण्डरीकाख्यनगर सर्वलोकोत्तम शुभम्।
इन्द्रादिलोक पालैश्च सनकादिमुनीश्वरैः॥ (२९)

29. புண்டரீகம் என்னும் இந்த நகரமானது எல்லா உலகங்களிலும் சிறந்ததும், மங்களகரமானதும் ஆகும். இந்திரன் முதலான லோக பாலகர்களாலும், ஸனகாதி முனிவர்களாலும்,

अप्सरो निवहैश्चैव पितृभिर्हव्यवाहनै.।
आदित्यैरष्टवसुभिः रुद्रैरेकादशैरपि॥ (३०)

30. அப்ஸரஸ்களின் கூட்டங்களாலும், பித்ருக்களாலும், அக்னி முதலான தேவர்களாலும், ஆதித்யர்களாலும், அஷ்டவஸுக்களாலும், ஏகாதச ருத்ரர்களாலும்,

सिद्धैः कि पुरुषैश्चैव यक्षगन्धर्वकिन्नरैः।
अश्विनीदेवताभ्या च ब्राह्मणैर्वेदपारगै॥ (३१)

31. ஸித்தர்களாலும், கிம்புருஷர்களாலும், யக்ஷர், கந்தர்வர் கின்னரர்களாலும், அச்சினீதேவதைகளாலும், வேதவிற் பன்னரான அந்தணர்களாலும்,

वेदान्तशास्त्रनिपुणैस्तर्कशास्त्रविशारदैः।
साहित्यपदविद्वद्भिश्चायुर्वेदविचक्षणैः॥ (३२)

32. வேதாந்த சாஸ்த்ர நிபுணர்களாலும், தர்க்க சாஸ்த்ர வித்வான்களாலும், ஸாஹித்யமறிந்த மஹான்களாலும், வியாகரண சாஸ்த்ரம் கற்றவர்களாலும், ஆயுர்வேதம் அறிந்தவர்களாலும்,

अद्वैतवादरसिकैः द्वैतवादाभिमानिभिः।
कविभिः प्रश्नशास्त्रज्ञैः धनुर्वेदसुशालिभिः॥ (३३) श्री

33. அத்வைதவாத ரஸிகர்களாலும், த்வைத வாத அபிமானிகளாலும், கவிகளாலும், ப்ரச்ந சாஸ்த்ரசோதிடம் அறிந்தவர்களாலும், தநுர் (வில்) வித்தையில் சிறந்து விளங்குபவர்களாலும்,

पुराणपाठकै रन्यवेदशास्त्रादिपाठकै ।
साहित्याभ्यासकै कैश्चिद् गणितासक्तमानसै: ॥ (३४)

34. புராணங்கள் படிப்பவர்களாலும், (பௌராணிகர்களாலும்) மேலும் வேத சாஸ்த்ரங்கள் கற்பிப்பவர்களாலும், ஸாஹித்யம் அப்யஸிப்பிக்கிறவர்களாலும், கணித சாஸ்த்ரம் பற்று உள்ளவர்களாலும்,

उक्तैरेतैस्समायुक्तं सर्वाभीष्टफलप्रदम् ।
यमादिनियमोपेतैश्चतुष्षष्टिकलाधरै: ॥ (३५)

35. சொல்லப்பட்ட இவர்களால் ஒன்று சேர்க்கப்பட்டதும், எல்லாவித பலன்களைத் தரக் கூடியதும், அடக்கம் முதலான யோகாப்யாஸ நியமங்களை உடையவர்களாலும், அறுபத்தி நான்கு கலைகளை அறிந்த ச்ரேஷ்டர்களாலும்,

षट्कर्मनिरतैश्शुध्दै आतिथेयैश्च संयुतम् ।
देवताराधनपरै: गृहस्थैरुपशोभितम् ॥ (३६)

36. ஜீவனத்துக்கு வேத யக்ஞ தானங்கள் வாங்கவும், கொடுக்கவும், அதிகாரிகளான பரிசுத்தமான அந்தணர்களாலும், அதிதி பூஜை செய்பவர்களோடு கூடியதும், பகவதாராதனையில் மூழ்கி இருக்கும் க்ருஹஸ்தர்களாலே சோபையுடையதும்,

पुण्यपुरुषसंयुक्तैश्चातुर्वर्ण्यैस्समाश्रितम् ।
वीणावेणुमृदंगादिवादकै र्गायकै रपि ॥ (३७)

37. புண்ணிய புருஷர்கள் சேர்க்கையாலும், விளங்கும் நால்வகை சமுதாயத்தவர்களால் ஒன்று கூடியதாயும், வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலான வாத்யங்கள் வாசிப்பவர்களாலும், கானம் செய்பவர்களாலும் நிறைந்ததும்.

भरतैः कर्मविज्ञानैः नाटकै र्नर्तकै रपि ।
नटज्ञैश्च मिलितैः वेश्यास्त्रीभिश्च मण्डितम् ॥ (३८)

38 பரதா (ஒரு வகை பாடகர்) களாலும, நாடகக கலை அறிநதவாகளாலும நாடகஙகளாலும, நடனம ஆடுகினறவாகளாலும, நாடகத்தில முதிர்நத அறிவு உள்ளவாகளாலும, நடிககிற மாதர்களாலும் நிறைநததும

याजकैः पाचकैस्सूदैः परिचारचयाकुलम्।
धनिकैश्च वदान्यैश्च श्रीमद्भिश्च समाकुलम्॥ (३९)

39 யாகம செயபவரும, செய்விப்பவருமான யஜமானாகளாலும சமையல செயபவர்களாலும, விருந்தினரை உபசரிப்பவர்களாலும் தனிகாகளாலும, கொடையாளிகளாலும், பிறவிச செலவமும, கீாத்தியுமுடையவாகளாலும் நிறைந்ததும்,

सन्तुष्टभूपनिलयं नानाजातिसमाकुलम्।
नानावृक्षसमाक्रान्तं ऋषिभिः समुपासितम्॥ (४०)

40 ஸநதோஷமான அரண்மனைகளை உடையதும, பல சமுதாயத்தவர் நிறைநததும, அநேக வ்ருக்ஷஙகளை உடையதும, முனிவாகளின் வாசஸ்தலஙகளைக கொணடதும,

वापीकूपतडागैश्च सस्पृष्टं परमाद्भुतम्।
नानासस्यफलोपेतं धनधान्यादिपूरितम्॥ (४१)

41 நடைபாவி எனனும, அகன்ற கிணறுகள், சாதாரண கிணறுகள், குளஙகள முதலியவறறால் சிறந்த தோற்றமுடையதும், அநேகவித பயிாகளும, பழமரஙகள் நிறைந்ததும, தன, தான்யாதி பணம பொருளகள் இவைகளால நிரமபியதும்,

अभ्रलिहपुरद्वारहैमप्राकारशोभितम्।
अनेकतोरणाक्रान्तविशिखाभिरलंकृतम्॥ (४२)

42 வானைத்தொடுகினற அளவிறகு மிக உயரமான கோடடைக கதவுகளை உடையதும, தஙகமபோல பிரகாசிக்கிற பிராகாரஙகளை உடையதும, பலவித அழகிய தோரணஙகளால அலஙகாிககபபடடதும,

वारिवाह-पथातीत-हर्म्यस्थल-समुज्ज्वलम्।
शालाभेदैश्च संयुक्तं चन्द्रशाला-विराजितम्॥ (४३)

43. மந்தாகினீ என்ற கங்கையை எட்டக் கூடிய அளவிற்கு உயர்ந்த அடுக்கடுக்கான மாளிகைகளால் சோபையுடையதும், புஷ்ப சாலை, சந்தன சாலை, பரிமள சாலை முதலிய அறைகள் உள்ளதும், சந்த்ரசாலை முதலிய குளியல் அறைகள் நிரம்பியதும், ஜன்னல்களாலும் மாடியறைகளாலும் பிரகாசிக்கிறதும்,

सवस्तिकै स्सर्वतोभद्रैः रत्नकुट्टिमशोभितम्।
चारिभिर्गृह-भेदैश्च सर्वतः समलंकृतम्॥ (४४)

44. மங்களகரமான நான்கு வாசல்களை உடைய வீடுகளாலும், ரத்னங்கள் பதித்த சுவர், தரைகளால் சோபையுடையதும், நான்கு பக்கங்களிலும் வரிசையான அழகான வீடுகளால் அலங்கரிக்கப்பட்டதும்,

सर्ववस्तुसमूहाढ्यं सदा नानाजनावृतम्।
सर्वलोकवरिष्ठं तत् प्रविवेश तपोधनः॥ (४६)

45. ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என்னும் மூன்று வித தாபங்களை நீக்குகிறதாயும், மனோவேதனைகளையும், நோய் நொடிகளையும் நாசம் செய்கிறதாயும் ஸர்வலோகோத்தரமான, போற்றத்தக்க விமானங்களாலே சோபையோடு கூடியதும்.

तापत्रयार्तिहरणमाधिव्याधिविनाशनम्।
सर्वलोकोत्तरैर्दिव्य-विमानैरुपशोभितम्॥ (४५)

46. தேவைக்குத் திரட்டப்பட்ட எல்லா பொருள்களையும் உடையதாயும், எப்போதும் பலவகையான ஜனங்களால் சூழப்பட்டிருப்பதாயும், உலகம் யாவற்றிலும் மிகச் சிறந்ததாயுமுள்ள அந்த புண்டரீகபுரம் என்றும் க்ஷேத்திரத்தை மிகுந்த தவமுள்ள கன்வ முனிவர் சென்றடைந்தார்.

प्रसिद्धं पुण्डरीकाख्यनगरं पापनाशनम्।
कण्वो निर्मलचित्तस्तदपश्यन्मुनिसेवितम्॥ (४७)

47. முனிவர்களால் ஸேவிக்கத்தக்கதும், பிரஸித்தமானதும், பாபங்களைப் போக்குகிறதுமான அந்த புண்டரீகபுர க்ஷேத்திரத்தை, நிர்மலமான சித்தத்துடன் கூடின கண்வ முனிவர் பார்த்தார்.

तन्मध्ये शोभित दिव्य पुण्डरीक सरोवरम्।
तत्तीरमगमत्क ण्वः पुण्यकृत्प्रवरोत्तम ॥ (४८)

48. அந்த க்ஷேத்திரத்தின் நடுவில் சோபையுடன் கூடியதும் திவ்யமயமானதுமான தாமரைத் தடாகம் ஒன்று இருந்தது. எப்போதம் புண்ணியமான அந்தத் தடாகத்தின் கரையை அடைந்தார்.

विधिचोदनया स्नात्वा वैध कर्म समाप्य च।
प्रसन्नहृदयो धीमान् पश्चात्तप्तुमियेष सः॥ (४९)

49. வேதத்தில் விதித்துள்ளபடி புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து, நித்ய கர்மாநுஷ்டானஙகளையும் முடித்துக் கொண்டு, ஸந்தோஷம் நிறைந்த தெளிந்த உள்ளத்துடன் மனஉறுதி மிக்க அந்த முனிவர் அதன் பிறகு தவம் செய்வதற்குச் சென்றார்.

एव तपसि तिष्ठन्त द्विजेन्द्र-अतिदुष्करम्।
सवीक्ष्य कम्पितस्वान्ता. पुरोडाशाशिनोऽभवन्॥ (५०)

50. இவ்வாறாக மிகவும் கடினமான தவம் செயது கொண்டிருக்கிற அந்தப் பிராமணோத்தமரான கண்வரைப் பார்த்து தேவர்கள் நடுங்கிய உள்ளம் கொண்டவர்களாக ஆனார்கள்

सम्भूय गत्वा ते सर्वे सहस्राक्षस्य सन्निधौ।
स्वामिनो विप्रचरितं विज्ञापय सकल क्रमात्॥ (५१)

51. அந்தத் தேவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, தேவேந்திரனின் இருப்பிடம் சேர்ந்து, மிக உயர்ந்தவரான கண்வ முனிவரின் சரித்திரம் முழுவதையும் தேவர்களின் தலைவனான இந்திரனுக்கு விரிவாக அறிவித்து,

तूष्णीं तस्थुः प्राञ्जलयः चिन्ताकुलितमानसाः।
विप्रस्य चरितं घोरं स्मृत्वा स्मृत्वा पुनः पुन॥ (५२)

52 மேலும், அந்த பிராமணோத்தமருடைய கடினமான தவச் செயலை திரும்பத்திரும்ப எண்ணி, கவலை மிகுந்தவர்களாயும், கை கூப்பியவர்களாயும் மௌனமாக நின்றனர்.

इत्थ कृत्वात्मबुद्धि मधुरिपुवचनात् पर्यटन् भूमिभागे
स्नात्वा पुण्ये जलेऽस्मिन् विधिनियमवशाच्चीरवासा मुनीन्द्र ।

धृत्वा चर्मोर्ध्वपुण्ड्रानचलितहृदयः प्राङ्मुखः कायशोष
कृत्वा तेपे कुदाल चपलमपि तनु बन्धयन्नात्मभागे ॥ (५४)

53-54 இவ்வாறாக கண்வமுனிவர் ஸ்ரீமந்நாராயணனின் வார்த்தையின் பேரில் இந்தப் பூமியில் ஸஞ்சாரம் செய்து கொண்டும், பரமாத்மாவினிடத்தில் புத்தியைச் செலுத்தியும், புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தும், சாஸ்த்ர விதிப்படி நியமங்களை அநுஷ்டித்தும், திருமேனியில் திருமண் காப்புகளை அணிந்தும், சஞ்சலமற்ற இதயத்தோடு கிழக்கு முகமாக அமர்ந்து, காயக்லேசம் செய்து இடையூறுகளை அகற்றி, சரீரத்தைக் கட்டுப்படுத்திப் பகவானைக் குறித்துத் தவம் செய்ய ஆரம்பித்தார்.

இரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது

# மூன்றாம் அத்தியாயம்

श्री व्यासः ஸ்ரீ வ்யாஸர் கூறுகிறார்

देवैरुक्त वचः श्रुत्वा पुरुहूतो महेश्वरः।
नानाविधकृतोपायैरक्षोभ्येन्द्रियमालकम् ॥ (१)

1. தேவர்களால் இவ்வாறு சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டு மஹேச்வரனான இந்திரன் பலவித உபாயங்களாலே அசைக்க முடியாத கண், காது, மூக்கு முதலான புலன்களை அடக்கிய (ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களின் செயலற்ற),

तपो निर्वर्तितु विप्र ब्रह्मणस्तु सभा ययौ।
प्रणम्य पद्मसभूत तुष्टाव च पुरन्दर ॥ (२)

2. பிராம்மணோத்தமரான கண்வரை தபஸ் செய்வதினின்றும் நிறுத்தவதற்கு (ஆலோசனை கேட்க) ப்ரம்ம தேவனின் சபையை அடைந்தார் அங்குத் தாமரையில் வீற்றிருக்கும் ப்ரம்மாவைப் பார்த்து வணங்கித் துதித்தார்.

भगवन्! पद्मसभूत! प्रभूतमहसा निधे।
गुणत्रयकृताकार त्रयसर्गादिकारण ॥ (३)

3. தாமரையில் பிறந்து தாமரையில் வீற்றிருக்கும் பகவானே! அதிக ஒளி பொருந்தியவரே! ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற மூன்று குணங்களால உருவானவரே! மூன்று உலகத்துக்கும் ஸ்ருஷ்டிக்குக் காரணமானவரே!

चराचराणि भूतानि संकल्पादेव केवलम्।
सृजस्यात्मज! सर्गादौ तत्तत्कर्म वशानुगः ॥ (४)

4. நாராயணன் உந்தியில் தானாகத் தோன்றின ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரம்மதேவனே! செய்யப்படுகிற பூமி முதலான மூலவஸ்துக்கள் அனைத்தும் ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் அவை அவை செய்கிற கர்ம வினையை அநுஸரித்து தேவரீரது ஸங்கல்பத்தினால் மட்டுமே உண்டாக்கப்படுகின்றன.

एवं सृष्ट्वा पुनस्तानि पालयस्यपि लीलया।
संहरस्यथ कल्पान्ते योगनिद्रावशंगतः॥ (५)

5. இவ்வாறு ஸ்ருஷ்டித்த பிறகு மறுபடியும் அவற்றை விளையாட்டாகவே காப்பாற்றுகின்றாய். பிறகு பிரளயத்தின் முடிவில் ஜாக்ரதஸ்வப்ன மத்யாவஸ்தையை உடையவனாக எல்லாவற்றையும் அடக்கிக் கொள்ளப் போகிறாய்.

आदिमध्यान्तरहितं करणागोचरं विभुम्।
त्वां पश्यन्ति महात्मानो दिव्येन ज्ञानचक्षुषा॥ (६)

6. ஆதி இடை அந்தம் இல்லாத, ஐம்புலன்களால் அறியக் கூடாதவனாய், ஸர்வவ்யாபியான உன்னை மஹான்கள் தங்களுடைய சிறந்த ஞானக் கண்களால் பார்க்கின்றனர்.

त्वामामनन्ति मुनयः प्रकृतेस्तद्विलक्षणम्।
स्वमायाकलृप्तभेदं च त्वामेकं सात्विकं विभुम्॥ (७)

7. பகவத் ஸங்கல்பமாக ஸ்ருஷ்டிப்பதில் விநோதமான போக்கை உடைய, தன்னுடைய மாயையால் ஆச்சரிய குணசேஷ்டிதங்களால் மூலப்ரக்ருதியிலிருந்து வேறாகவும், அசித்தை சரீரமாகக் கொண்டு விளங்குபவனாயும் மத்ஸ்யாதி வேறுபாடுகளை (வித்தியாஸங்களை) உடைய ஸாத்விகமான ஸர்வவ்யாபியாக உன் ஒருவனையே முனிவர்கள் காண்கின்றனர், சொல்கின்றனர்.

सर्वाधिष्ठानभूतं च विहाराम्नायशालिनः।
स्वरूपं ते परिज्ञातुं+अशक्ता मुनिसत्तमाः॥ (८)

8. ஆ! எல்லா ஜீவராசிகளுக்கும் இடமாயும், அந்தர்யாமியாயும அனைத்தையும் உள்ளும் புறமும் பரவி நிரம்பியிருப்பதாயும் ரக்ஷகனாயிருக்கிற உன்னுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ள வேதம் முதலானவற்றைக் கற்றறிருந்த, ஸம்ப்ரதாயப் பழக்கங்களை அநுஸரிக்கிற முனிச்ரேஷ்டர்கள் சக்தியற்றவர்களாயிருக்கிறார்கள்.

परिभ्रमन्ति तास्सर्वा वयं किमुत जन्तवः।
त्वदाज्ञावशगास्सर्वे वसुदिक्पालका हि वै॥ (९)

9. அஷ்டவஸுக்கள், திக்பாலகர்கள், எல்லோரும் தேவரீரது ஆஜ்ஞைக்கு கட்டுப்பட்டவர்கள். அவர்கள் அனைவருமே தேரீரைப் புரிந்து ஆணைப்படி அவரவர் நிலையில் நிற்கிறார்கள். நாஙகள் எம்மாத்திரம் உம்மை அறிந்து கொள்ள !

प्रसीद जगतां नाथ! प्रसीद करुणानिधे।
पश्यागतानिमान् सर्वान् धर्मराजमुखान् सुरान्॥ (१०)

10. லோக நாயகரே, கருணாநிதியே ! எங்களைப் பொறுத்தருள்வீராக. தர்மராஜனை முன்னிட்டு இங்கு வந்திருக்கிற இந்தத் தேவர்களனைவரையும் கடாக்ஷிப்பீராக !

इत्येवमाद्यैर्बहुभिः स्तुत्वा वै चतुराननम्।
विज्ञापयामासुरत्र चात्मकार्यं यथाक्रमम्॥ (११)

11. இவ்வாறாக பலவிதமான சதுர்முகனை ஸ்தோத்திரம் செய்து, க்ரமமாக அவரிடத்தில் தாங்கள் வந்த காரியத்தைத் தெரிவித்தனர்.

पुरुहूतमुखान् दृष्ट्वा विश्वसृक् सुरपुङ्गवान्।
अवोचदिन्द्रप्रमुखान् कृपामधुरया गिरा॥ (१२)

12. அனைத்து லோகஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரம்மா இந்திரனை முன்னிட்டு வந்திருக்கிற அனைத்து தேவர்களையும் பார்த்து, க்ருபையுடன் இனிமையான வார்த்தைகளால் பேசினார்.

सुत्रामप्रमुखानां वः कुशलं किं सुरोत्तमाः।
कार्यान्तरकृतापेक्षस्तपश्चरति सयमी॥ (१३)

13. ஹே தேவர்களே ! இந்திரன் முதலான நீங்களனைவரும் க்ஷேமமா ! யோகியான கண்வமுனிவர் வேறு காரியத்தை விரும்பி தவம் செய்கிறார்.

न तर्कितव्यं युष्माभिरन्यथाऽस्ति द्विजोत्तमे।

அந்தக் கண்வமுனிவருடைய செய்கையை நீங்கள் தவறாக நினைக்க வேண்டாம்.

एवमुक्त्वा सुरैस्साकं पुरुहूतपुरोगमैः।
कैलासाद्रिं ययौ ब्रह्मा कारुण्यामृतसागरः॥ (१४)

14 கருணைக் கடலான ப்ரம்மா இவ்வாறு சொல்லிவிட்டு, இந்திரன் முதரான தேவர்களோடு கூட கைலாஸ பர்வதத்தைச் சென்றடைந்தார்.

तत्र कैलासशिखरे वसन्तं पार्वतीपतिम्।
स्कन्दनन्दिमुखैस्सेव्यं सगणं सगणाधिपम्॥ (१५)

15 அங்கு கைலாஸ பர்வதத்தில் வஸிப்பவரும், முருகன், நந்திகேச்வரர் முதலானவர்களாலே ஸேவிக்கப்படுபவரும், ப்ரமத கணங்களோடு இருப்பவரும், கணங்களின் தலைவருமான விநாயகரோடு இருக்கிற பார்வதியான பரமேச்வரனை,

भस्मोद्धूलितसर्वाङ्गैः जटावलकलधारिभिः।
रुद्राक्षमालाविलसत्कण्ठमस्तकबाहुभिः॥ (१६)

16. உடம்பு முழுவதும் விபூதியணிந்து ஜடை, மர உரி அணிந்திருப்பவர்களாலும, ருத்ராக்ஷமாலை அணிந்ததால் கழுத்து, தலை, கைகளுடன் பிரகாசிக்கிற

पञ्चाक्षरमहामन्त्रैश्शङ्करस्तुतिपूर्वकैः।
अक्षमालाकरैर्ध्यानपरैर्मुनिभिरर्चितम्॥ (१७)

17. பஞ்சாக்ஷர மஹாமந்ரங்களால் சங்கரனை ஸ்தோத்ரம் செய்கிற அக்ஷமாலை தரித்த கைகளை உடைய எப்போதும் பகவத் குணானுபவங்களிலேயே ஈடுபட்டிருக்கிற முனிவர்களால் பூஜிக்கப்பட்டவரும்,

जटाजूटाच्चलच्चन्द्रकलाज्योत्स्नादिपाण्डुरम्।
कपर्दकुहरभ्राम्यत्तरंगितसुरापगम्॥ (१८)

18. அங்கு திரிக்கப்பட்ட ஜடாமுடியில் ஒளி வீசுகிற சந்திரகலையின் பிரகாசத்தினால் வெளுத்து இருக்கிற சடைமுடியின் நடுவில் பிரகாசிக்கிற அலைகளை உடைய கங்கையை ணிந்திருக்கும் ஞானியை

विस्फूर्जत् वहि कणिका ज्वलत्पावकलोचनम्।
प्रसन्नवदनं तत्र मन्दहास मनोहरम्॥ (१६)

*19. கொழுந்து விட்டெரிகிற நெருப்புப் போலப்போல பிரகாசிக்கிற கண்கைள உடைய, மலர்ந்த முகமுடைய, மனோஹரமான புன்சிரிப்பு உடைய,*

नीलमाणिक्यसदृशगरलोदारकन्धरम्। (कुन्थरम्)
वासुकिप्रमुखैर्नागैः कृतयज्ञोपवीतिनम्॥ (२०)

*20. தேவர்களுக்காக நீல நிற மாணிக்கம் போன்ற விஷத்தைப் பருகி அதன் பெருமை பொருந்திய கழுத்தையுடையவரும், வாஸுகி முதலான நாகஙகளால் ஆக்கப்பட்ட யஜ்ஞோபவீத மணிந்திருப்பவரும்,*

करीन्द्रचर्मवसन नागाभरणभूषितम्।
अष्टमूर्ति हर दृष्ट्वा साष्टाङ्गप्रणतो विधिः॥ (२१)

*21. யானைத்தோலாடை அணிந்திருப்பவரும், ஸர்ப்ப ஆபரணம் பூண்டிருப்பவரும, அஷ்டமூர்த்தியானவருமான ஹரனைப் பார்த்து, சாஸ்த்ரப்படி ஸாஷ்டாஙக ப்ரணாமம் செய்தார்.*

इत्येव बहुभि स्तुत्वा देवदेव पिनाकिनम्।
विरिञ्चि. प्राजलिर्भूत्वा विनीतो वाक्यब्रवीत्॥ (२२)

*22. இவ்வாறாக, ப்ரமமா தேவதேவனான பரமேச்வரரைப பலவாறாக துதித்து அஞ்ஜலிஹஸ்தராக வினயத்துடன பேச ஆரம்பித்தார்.*

दासान्पश्य महाभाग। एतान्नष्टसुखान् सुरान्।
आधिपीडितदेहाश्च विवर्णानतिकर्शितान्॥ (२३)

*23. ஹே! மஹாபாக! நஷ்டமடைந்த ஸுகஙகளை உடைய இந்தத் தேவர்களான அடியவர்களக் காண்பீராக. இவர்கள் மனோ வேதனையால் பீடிக்கப்பட்டு, களை இழந்து இளைத்த சரீரமுடையவர்களாக இருக்கின்றனர். பார்த்தருளும்.*

पुण्डरीकाख्यनगरे तिल्लीकाननमध्यगे।
तपश्चशति विप्रेन्द्रो महाघोरं महाघोरं सुदुष्करम्॥(२४)

24. தில்லைவனத்தின் நடுவே அமைந்துள்ள புண்டரீக க்ஷேத்திரத்தில் ஒரு சிறந்த அந்தணர் மிகவும் கடினமான, கடுமையான தவத்தைத் செய்து கொண்டிருக்கிறார்.

अनेन तस्य तपसा पीडितं भुवनत्रयम्।
तस्मादमी सुरास्सर्वे भवन्तं शरणं गताः॥(२५)

25. அவருடைய இந்தத் தவத்தால் மூன்று உலகமும் பீடிக்கப்பட்டுள்ளது. ஆகையால் இந்தத் தேவர்களெல்லோரும் தேவரீரைச் சரணம் அடைந்துள்ளனர்.

पाहि मां देववृन्दांश्च प्रसीद द्विजपुंगवे।
इत्येवं विधिना प्रोक्तं वाक्यं कात्यायनीपतिः॥(२६)

26. என்னையும் இந்தத் தேவர்களையும் ரக்ஷிப்பீராக. அந்தணர் விஷயத்தில் அருள் புரிய வேண்டும். இவ்வாறு ப்ரம்மாவால் சொல்லப்பட்ட வார்த்தைகளை உமாபதியான பரமேச்வரன் கேட்டு,

(श्रुत्वोवाच) प्रत्युवाच सुरश्रेष्ठं प्राञ्जलिं विनयान्वितम्॥

கூப்பியகையரானவரும் விநயமுள்ளவருமான ப்ரம்மாவைப் பார்த்து பதில் சொன்னார்.

भो पितामह! विप्रेन्द्रो न वाञ्छति विनश्वरम्।
ऐन्द्र पदमथान्यद्वा ब्रह्मण. पदमव्ययम्॥(२७)

27. ப்ரம்மதேவனே ! பிராமணோத்தமரான கண்வர் இந்திர பதவியையோ அல்லது ப்ரம்ம பதவியையோ விரும்பவில்லை.

28. ப்ரஹ்மதேவ ! என்னுடைய ஸ்தானத்தையோ அல்லது மிக உயர்ந்த திக்பாலகர்களின் பதவியையோ அவர் விரும்பவில்லை. ஸ்ரீமந்நாராயணன் திருவடித்தாமரைகளில் லயித்த மனமுடையவராக, மோக்ஷத்தை விரும்பித் தபஸ் செய்கிறார். இதைப்பற்றிய விசாரம் (கவலை) ஏதும் வேண்டாம்.

मोक्षदानाधिकारोऽद्य न मे तव कदाचन।
तस्माद्देवैस्समस्तैश्च साकं क्षीरोदधिं वयम्॥ (२९)

29. மோக்ஷமளிப்பதற்கான அதிகாரம் ஒரு போதும் உமக்கோ அல்லது எனக்கோ கிடையாது. ஆகையால் தேவர்களோடு கூட நாமெல்லோரும் திருப்பாற்கடலைச் சென்றடைவோமாக.

गच्छामश्शरणं विष्णुं श्रीपतिं पुरुषोत्तमम्।
लोकनाथं दयासिन्धु शरणागतवत्सलम्॥ (३०)

30. ஸ்ரீயப்பதியும், புருஷோத்தமனும், லோகநாதனும், கருணைக்கடலும், சரணமடைந்தவர்களை மிக விரும்புபவனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நாம் சென்று சரணடைவோமாக.

एवमुक्त्वा विधीन्द्राद्यैर्देवैस्सार्धमुमापतिः।
ययौ क्षीरार्णवं दिव्यं श्रीनिवासनिकेतनम्॥ (३१)

31. இவ்வாறு உமாபதியானவர் சொல்லி ப்ரம்மா, இந்திரன் முதலான தேவர்களோடு கூட ஸ்ரீலக்ஷ்மீகாந்தனின் இருப்பிடமான திவ்யமான திருப்பாற்கடலை அடைந்தார்.

तत्र शीतांशुसाहस्रविमले मृदुलोन्नते।
दिव्यज्ञानमये शब्दमूलकन्देऽतिविस्तरे॥ (३२)

32. அங்கு ஆயிரஞ் சந்திரனின் ஒளி வெள்ளம் போன்று மிக வெண்மையும் குளிர்ச்சியும் உடையதும், சிறப்புற்றதாயும், மென்மையானதும், உன்னதமானதும், திவ்யஜ்ஞானமயமானதும், மிகுந்த பரப்புள்ளதும், வேத சாஸ்திர சப்தங்களுக்கெல்லாம் ஆணிவேர் போன்றதும்,

कौस्तुभाख्यमणे. कान्तिभासिताशेषदिङ्मुखे।
अनन्तभोगिपर्यङ्के सहस्रफणशोभिते।। (३३)

33. அனைதது திசைகளிலும ஒளி வீசுகிற கௌஸ்துப மணிமாலையை அணிந்திருப்பவரும், ஆயிரம் தலைகளை உடைய அநந்தன் எனறும ஆதிசேஷனாகிற படுக்கையில்

देव्यासह समासीन श्रीपति लोकनायकम्।
अतसीपुष्पसकाशमीषत्सुप्तमुखाम्बुजम्।। (३४)

34. ஸ்ரீபூமி நீளா என்னும் தேவிமாரோடு வீற்றிருப்பவரும், திருமார்பில் உள்ள பிராட்டியுடன் கூடியிருப்பவரும், லோகநாயகனும், காயாமபூ நிறம போல் நீலநிற மேனியனாக ஒளி வீசகிறவரும், யோக நித்திரையில் மலர்ந்த தாமரை போன்ற முகம உடையவரும,

प्रातरुद्यत्सहस्राशुनिकराङ्गविराजितम्।
सुस्निग्धनीलकुटिलकुन्तलैरुपशोभितम्।। (३५)

35. காலை நேரத்தில உதிக்கிற ஆயிரக்கணக்கான கிரணஙகள் கொணட உதய சூரியன் போல் விளஙகுபவரும் மிக அடர்த்தியான கரியநிறஙகொண்ட, நெளிந்த கேசஙகளின் சோபையடையவரும்,

कन्दर्पकोटिलावण्यधिक्काराद्भुतविग्रहम्।

கோடிக்கணக்கான மன்மதர்களின் அழகினையும் தோறகச் செயயும உருவமுடையவரும,

प्रवालस्निग्धचरणद्वन्द्वमाश्रितरक्षकम्।
कस्तूरीतिलकोपेतं सुभ्रूयुगसमन्वितमो।। (३६)

36. பவழம் (இளந்துளிா) போன்று அழகான சிவந்த தாமரையோடொத்த பாதஙகளையுடையவரும், கஸ்தூரிதிலகம் அணிந்தவரும், ஆச்ரயித்தவரை (தன்னை அடைந்தவரை) ரக்ஷிப்பவரும, அழகான இரண்டு புருவஙகளை உடையவரும்,

मन्दस्मितमुखाद्भासि विद्रमाधरपल्लवम्।।

புன் சிரிப்பான முகத்தோற்றத்தால பிரகாசிக்கிற பவளம போன்ற சிவந்த துளிரான உதடுகளை உடையவரும்,

कृपापूर्णाक्षियुगलं मन्दस्मितमनोहरम्।
पुष्प समं प्रख्य कर पल्लवशोभितम्॥ (३७)

37. கருணை நிரம்பிய இரண்டு கண்களை உடையவரும், புன்சிரிப்பால இனிமையானவரும், செம்பருத்திக் பூவைப் போன்று அழகிய விரல்களை உடையவரும்,

अकलकित चन्द्राभ मुख मण्ड मण्डितम्।
दिव्य मोगल युक्तागं दिव्याभरण भूषितम्॥ (३८)

38. களங்கமற்ற சந்திரனின் ஒளியைப் போனற ஒளியுடைய திருமுகமணடலத்தை உடையவரும் திவ்யமங்களஸ்வரூபமான திருமேனியையுடையவரும, திவ்ய ஆபரணங்களால அலங்கரிக்கப்பட்டவரும்,

दिव्यगन्धानुलिपताग दिव्यमालानुलेपनम्।
विशाव वक्षस दिव्य पीतांबर घरम विभुम्॥ (३९)

39. நல்ல மணம் மிகுந்த சந்தனம் பூசியவரும், அழகிய மாலைகளை அணிந்தவரும், அகன்ற மார்பையுடையவரும, அழகிய பீதாம்பரம தரித்தவரும், எங்கும் நிறைந்து உள்ளவரும்,

आदिमध्यान्तरहित दुग्धसागरनायकम्।
दृष्ट्वा रुद्रादयस्सर्वे केशवं सुरपुङ्गवा :॥ (४०)

40. ஆதி மத்யம் அந்த மில்லாதவரும், திருப்பாறகடல நாயகனுமான கேசவனை ருத்ரன் முதலான அனைத்து தேவர்களும பார்த்து,

विस्मयादिष्टसुहृदः स्तुवन्ति च नमन्ति च।
हस्ततालक्रमायुक्ताः गायन्ति च नटन्ति च॥ (४१) समा

41. மனதில் ஆச்சரியமும், நட்பும் மிகுந்தவர்களாக ஸ்தோத்ரம செய்தனர்- வணங்கினர். கையினால் தாளமிட்டுக் கொண்டு பாடினர்-கூத்தாடினர்.

आनन्दसागरे मग्नाः नः कार्य फलमेव हि।

நம்முடைய கார்யம் நாம் வந்ததின் நோக்கம், பலனுடையதாக ஆயிற்று என்று எண்ணினார்.

तथा तिष्ठत्सु देवेषु स्तोतुमीशः प्रचक्रमे।

அவ்வாறு நின்று கொண்டிருக்கிற தேவர்களில் ஒருவரான பரமேச்வரன் பகவான் ஸ்ரீமந்நாராயணனை ஸ்தோத்ரம் செய்யத் தொடங்கினார்.

रुद्र : ருத்ர :

ஈச்வரன் துதிக்கிறார்

देव देव! जगन्नाथ! पाहि नः शरणागतान्।
आधारस्त्वं हि जगतामन्तर्यामी सनातनः॥ (४२)

42. தேவர்களுக்கெல்லாம் தேவனான ஜகந்நாதனே! உன்னைச் சரணமடைந்திருக்கிற எங்களை ரக்ஷிப்பாயாக! நீயே உலகத்துக்கெல்லாம் ஆதாரமானவன். நீயே அந்தர்யாமி (அனைத்து ஜீவராசிகளின் உள்ளிருப்பவன்) நீயே அழிவற்றவன்.

त्वन्नाभिकमलोत्पन्नो ब्रह्मा लोकपितामहः।
त्वल्ललाटोद्भवश्चाहं तामसोद्भटवृत्तिकः॥ (४३)

43. உனது நாபீகமலத்தினின்றும் தோன்றிய ப்ரம்மா லோகபிதாமஹராய் (படைப்பவராய்) இருக்கிறார். உனது நெற்றியிலிருந்து உண்டான நான் அழித்தலில் தாமஸ கார்யத்தில் (மிகுந்த) காரியம் செய்பவனாக இருக்கிறேன்.

त्वदाननभवश्शक्रो देवास्त्वद्देहसभवाः।
अग्निर्वायुश्च सूर्यश्च चन्द्रमाश्च द्विजातयः।
भवदङ्ग समुद्भूताः प्राण्यनुग्रहकारणात्॥ (४४)

44. உன்னுடைய முகத்திலிருந்து உண்டானவன் இந்திரன். தேவர்கள் உன்னுடைய சரீரத்திலிருந்து உண்டானவர்கள் ஜீவராசிகளான பிராணிகளுக்கு அநுக்ரஹம் செய்ய வேண்டியதன் நிமித்தமாக அக்னி, சூரியன், சந்திரன், ப்ராமணர்கள் முதலானவர்கள் உன் திருமேனியிலிருந்து உண்டானவர்கள்.

लोकैश्च सागरैर्द्वीपैर्भूतलैर्भूतजातिभिः।
परिपूर्ण मनोरम्य प्रकृत्या सृजसि प्रभो॥ (४५)

பீஜகோசமாயிருக்கிற இந்த உலகமானது உமக்கு பந்து விளையாட்டுக் (உருண்டையான அண்டமாய்) உரிய ஸ்தானமாக விசேஷமாகச் செய்யப்பட்டது.

त्वत्क्रीडाकन्दुकस्थानविकृताण्डमिदं जगत्।

45. ப்ரபுவே ! லோகங்களினாலும், ஸமுத்ரங்களாலும், த்வீபங்களாலும், பூதலங்களாலும், ப்ருதிவ்யாதி மூலவஸ்துக்களாலும், உனது ஸங்கல்ப மூலமாக பரிபூர்ணமாயும், மனோரம்யமாயும் அனைத்து ஜீவராசிகளையும் ஸ்ருஷ்டித்திருக்கிறாய்.

प्रलये सर्वलोकांश्च धृत्वा तु जठरे पुनः।
त्वं मायावशगः शेषे शिशुः कल्पान्तसागरे॥ (४६)

46. மாயாஸ்வரூபனாக தேவரீர் பிரளய காலத்தில் உலகம் முழுவதையும் தனது வயிற்றினுள்ளேயே தாங்கி, பிரளயத்தின் முடிவில் ஸாகரத்தில் குழந்தையாக ஆலிலையில் படுத்துத் தோற்றமளிக்கிறாய்.

त्वन्माया वैभवं वक्तुं त्वमेव प्रभुरक्षरः।
उद्वेलाम्बुधि कल्पान्ते त्वमेवैको नु जीवसि। (४७)

*47.* தேவரீரது மாயா வைபவத்தைச் சொல்வதற்கு பரமாத்மாவான தேவரீரே தகுதி உள்ளவராக ஆகிறீர். கரை கடந்து பொஙகி எழுந்திருக்கிற பிரளயத்தின் முடிவில் தேவரீர் மட்டுமே ஜீவித்திருக்கிறீர்.

दासभूता वय सर्वे तव लीलाविकारिणः।
त्वन्नामतारकं जप्त्वा कृतकृत्यो ह्यहं प्रभो॥ (४८)

*48.* ப்ரபுவே! தேவரீரது விளையாட்டினால் மாறுபாடு அடைந்துள்ள நாஙகள் எல்லோரும் தேவரீரது அடியவர்கள். கடைத்தேற்றி வைக்கும் தங்களது நாமமாகிற தாரக மந்திரத்தை ஜபித்து என்னுடைய காரியங்களை செய்தவனாகிறேன். (நன்றி உடையவனாகிறேன்). (178)

नामत्रयजपाद्ब्रह्मन् तापत्रयमहार्णवम्।
भवरोगविनिर्मुक्ता. तरन्ति सनकादयः॥ (४९)

*49.* ஹேப்ரம்மன்! தேவரீரது அச்யுத. அநந்த கோவிந்த என்னும் மூன்று நாமஙகளை ஜபித்தால், போகம், ராசம், சோகம் என்னும் மூன்று வித தாபங்களாகிற ஸமுத்ரத்தை, ஸநகாதி முனிவர்கள் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபட்டவர்களாகக் கடக்கிறார்கள்.

निरुपाधीश्वरत्वं च तवैव परमात्मनः।
त्वदपाङ्गाश्रितं सर्वं जगत्स्थावरजङ्गमम्॥ (५०)

*50.* எல்லை, குறை வஞ்சனையற்ற ஈச்வரத்வம் (உமையவனாயிருக்கை என்பது பரமாத்மாவான தேவரீருக்கே உரியது. இந்த உலகத்திலுள்ள எல்லாவிதமான ஸ்தாவர, ஜங்கமப் (அசைவுள்ள, அசைவற்ற) பொருள்களும் உமது கடைக்கண் பார்வைக்கு உட்பட்டவையே.

ब्रह्मादयो वयं सर्वे त्वत्कटाक्षाभिलाषिणः।
त्वमेव मूलं सर्वेषां त्वमेव परमा गतिः॥ (५१)

51. ப்ரம்மா முதலான நாங்களனைவரும் தேவரீரது கடாக்ஷத்தையே அடைய விரும்புகிறோம். நீரே எல்லாவற்றுக்கும் மூலாதாரமாக இருக்கிறீர். நீரே மோக்ஷத்தைத் தரும் அதிகாரியாகவும் இருக்கிறீர்.

त्वं माता त्वं पिता भ्राता त्वं गुरुस्त्वं प्रियः सखा।
चराचरस्य विश्वस्य ममापि पुरुषोत्तम।। (५२)

52. இந்த உலகத்தில் உள்ள அசைவுள்ள, அசைவற்ற எல்லாப் பொருட்களுக்கும், முக்கியமாக அடியேனுக்கும், புருஷோத்தமரான தேவரீரே தாயாகவும், தந்தையாகவும், சகோதரனாகவும், ஆசார்யனாகவும், அன்பான தோழனாவும் இருக்கிறீர்.

त्वमेवादिगुरुस्साक्षात् नारायणपदेरितः।
प्रवृत्तिर्देव राशीनां नियन्ता सर्वदेहिनाम्।। (५३)

53. நீரே ஸாக்ஷாத் ஆதி குருவானவர், ஸ்ரீமந்நாராயணன் என்று வேண்டி அடையப்பட்டிருப்பவரும், அடைவிப்பவரும் நீரே. தேவராசிகளை உண்டாக்குவதும் நீரே. சரீரமுள்ள அனைத்தையும் ஆண்டு அளித்து வாழ வைப்பவரும் நீரே.

नाथोऽपि सर्वभूतानां त्वं नाथः त्वं परात्परः।
त्वमेव साक्षी सर्वेषां अन्तर्यामी परात्प्रभुः।। (५४)

54. ப்ருதிவீ முதலான ஸமஸ்தவஸ்துக்களுக்கும் தலைவனாக இருப்பவரும் நீரே. எல்லாவற்றுக்கும் மேலானவரும் சேஷியானவரும் நீரே. எல்லாவற்றுக்கும் நீரே ஸாக்ஷியாக இருக்கிறீர். எல்லாருடைய உள்ளத்திலும் இருந்து இயக்குபவரும் நீரே. தலைவருக்கெல்லாம் தலைவராக இருப்பவரும் நீரே.

त्वत्पादसंभवद्गङ्गासलिलोद्वहनादहम्।
लोके शिव इति ख्यातः पूतात्माऽप्तमनोरथः। (५५)

55. தேவரீரது திருவடிகளிலிருந்து உண்டான கங்கை நீரை (நதியை) நான் தாங்கியதால் இவ்வுலகில் மங்களம் தரக்கூடிய சொல்லாகிய 'சிவ' என்னும் நாமத்தால் பிரஸித்தி பெற்று, பரிசுத்தமானன ஆத்மாவை உடையவனாயும். ஆசைகள் நிறைவேறிய மனஸை உடையவனாயும் இருக்கிறேன்.

त्वं विश्वमूर्तिर्भगवन्! चातुर्यात्कुरुषे जगत्।
परित्राणाय लोकानामवस्था वै भवादयः॥ (५६)

56. ஹேபகவந், தங்களது ஸாமர்த்யத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது இந்த உலகம். தாங்களே இங்வுலகம் பூராவும் வ்யாபித்திருக்கிறீர். இவ்வுலகத்தை ரக்ஷிக்கக் கூடிய ஆச்சர்ய குண சேஷ்டிதங்கள் அவதரிக்க தேவரீரால் மட்டுமே முடிகிறது.

तव सर्वात्मनः पूर्णतनोर्नास्ति समः क्वचित्।
इत्येवं बहुभिः स्तोत्रैस्स्तुत्वा देव जनार्दनम्॥ (५७)

57. எல்லாப் பிராணிகளிடத்தும் அந்தர்யாமியாகவும், மற்றும் உள்ளும், புறமும் நிறைந்து இருக்கிற தேவரீருக்கு ஸமமாக நிறைவு பெற்றவன் எங்கும் எவனும் கிடையாது.

இவ்வாறாக பகவான் ஜநார்த்தனனைப் பலவிதமாக ஸ்தோத்ரங்களால் துதித்து

जोषमास्ते विरूपाक्षः श्रीपतिध्यानतत्परः।
अथ नारायणः श्रीशो योगादभ्युत्थितो हरिः॥ (५८)

58. ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந்நாரயணனையே எப்போதும் எண்ணிக் கொண்டு முக்கண்ணன் மௌனமாக இருந்தார். உடனே ஸ்ரீநிவாஸனான பகவான் நாராயணனும் யோக நித்திரையினின்றும் எழுந்தார்.

उवाच रुद्रप्रमुखान् सुधामधुरया गिरा।

ருத்ரன் முதலான தேவர்களைப் பார்த்து அமிர்தம் போன்ற இனிமையான சொற்களால் பேசினார்.

ஸ்ரீமந்நாராயணன் பேசுகிறார்.

रुद्राजेन्द्रमुखानां वः कुशलं किं सुरोत्तमाः।
युष्माकमन्तःकरणे यत्कार्यं परिवर्तते।
तदत्र तु मया ज्ञातं अचिरात्करवाण्यहम्॥ (५९)

59. ருத்ரன், பிரம்மா, இந்திரன் முதலான தேவர்களாகிய நீங்களெல்லோரும் ஸுகமா? உங்களது உள்ளங்களில் ஏற்பட்டிருக்கும் கவலையின் காரணத்தை நான் அறிவேன். சீக்கிரத்திலேயே நான் அந்தக் காரியத்தைச் செய்து முடிக்கிறேன்.

पुण्डरीकाख्यनगरे तुभ्यं दास्याम्यह वरम्।
इति कण्वाय मुनये मेरुकूटे पुरा मया॥ (६०)

60. முன்னொருஸமயம் கண்வமுனிவருக்கு மேருபர்வதத்தில, 'உனக்கு புண்டரீக புரத்தில் வரமளிக்கிறேன்' என்பதாக என்னால் சொல்லப்பட்டிருக்கிறது.

वरदानाय तत्रैव नित्यवासः प्रतिश्रुतः।
तस्मै वरप्रदानाय दैत्यसंहरणाय च॥ (६१)

61. வரமளிப்பதற்காக (மற்றவர்களுக்கும்) அங்கேயே நித்யவாஸம் செய்வதாயும் வாக்கு அளித்திருக்கிறேன். அவருக்கு வரம் அளிப்பதற்காகவும், ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்வதற்காகவும்,

गच्छामस्तां पुरीं यूयमपि गच्छथ निर्मलाम्।
देवानां दानवानां च नराणां सर्वदेहिनाम्॥ (६२)

62. நாம் அந்த நகரத்துக்ச் செல்லுகிறோம். நீங்களும் நிம்மதியாக குறைவற்ற அந்த ஊருக்குச் செல்லுங்கள். தேவர்களுக்கும், அஸீரர்களுக்கும், மனிதர்களுக்கும், இன்னும் மற்றப் பிராணிகளுக்கும்

सेवार्थ नगरे वासं करिष्याम्यहमादरात्॥

ஸேவை ஸாதிப்பதற்காக (அருள் புரிவதற்காக) விரும்பி நான் அந்த நகரத்தில் நித்ய வாஸம் செய்யப் போகிறேன்.

तस्मिन्नेव पुरे रम्यं विचित्रस्तभमण्डितम्।
चित्रकूटमिति ख्यातं शयनस्थलमण्डपम्॥ (६३)

*63. அந்த புண்டரீகபுரத்தில் மிக அழகான பலவித விசித்திரமான கம்பங்கள் நிறைந்த 'சித்ரகூடம்' எனப் போற்றப்படுகிற ஶயன மண்டபம் ஒன்றை*

कुरुध्वं मम चित्राढ्यं पूर्वं गत्वा सुरोत्तमाः।
युष्माकमखिलाना च स्थानानि रुचिराणि चः।
निकेतनानि सौधानि कुरुध्वमचिरेण वै॥ (६४)

*64. பலவித சித்ரங்கள் நிறைந்ததாக, தேவர்களே! நீங்கள் முன்னதாகவே சென்று நிர்மாணிப்பீர்களாக ! உங்களனைவருக்காகவும் மிகவும் பிடித்தமான இடங்களைத் தேர்ந்தெடுத்து உப்பரிகைகள் நிறைந்த மாளிகைகளை சீக்கிரமாகவே நிர்மானம் செய்வீராக.* एव नियम्य सुरपुङ्गव यूथमुख्यान्।
कात्यायनीपतिमुखाननघान् दयालुः॥
अन्तर्दधे मुनिवराय वर प्रदातु
तिल्लीवनं प्रति ययौ मधुकैटभारिः॥ (६५)

*65. இவ்வாறு கருணாநிதியான, மதுகைடபர்களை அழித்த, ஸ்ரீமந் நாராயணன் பரமேஶ்வரனை முன்னிட்ட தேவர்களைப் பார்த்து கட்டளையிட்டு மறைந்தார். முனிஶ்ரேஷ்டரான கண்வருக்கு வரமளிப்பதற்காக தில்லீவனம் - தில்லை திருச்சித்ரக் கூடம் நோக்கிச் சென்றார்.*

## மூன்றாம் அத்யாயம் முற்றிற்று

# நான்காம் அத்யாம்

व्यास : -     வ்யாஸர் சொல்கிறார்

पुण्डरिकसरस्तीरे तदा स्नात्वा मुनीश्वरः।
चीरवस्त्रघरो भूत्वा धृत्वाऽऽचम्योर्ध्वपुण्ड्रकम्॥ (१)

1. புண்டரீக குளக்கரையில் அப்போது முனிச்ரேஷ்டரான கண்வர் மரஉரி ஆடை தரித்து, திருமண் காப்புதரித்து ஆசமனம் செய்து,

`बाह्येभ्यो विषयेभ्यश्च नियम्याक्षिणी संयमी। णि
मनः श्रीपद्मनाभस्य पदाम्भोजे नियुज्य च॥ (२)

2. தவ்ரேஷ்டரான முனிவர் வெளியில் புலப்படும் காட்சிகளை காணாமல் கண்களை மூடிக்கொண்டு மனஸை ஸ்ரீபத்மநாபனின் தாமரைத் திருவடிகளில் நிலைநிறுத்தி,

पद्मासनसमासीनः प्राङ्मुखोऽनशनो मुनिः।

அந்த முனிவர் பத்மாஸனத்தில், உண்ணாமல் விரதத்துடன் கிழக்கு முகமாக அமர்ந்து,

कृत्वा सुयामः शुद्धात्मा पुण्डरीकसरोजले। त/ता
अभिषिच्य रमानाथं मूलमन्त्रेण मन्त्रवित्॥ (३)

3. மந்த்ரஸித்தி பெற்றவரான அந்த முனிவர், பரிசுத்தமான இதயத்தோடு ப்ராணாயாமம் செய்து புண்டரீக குளத்தின் ஜலத்தால் மூலமந்த்ரத்தால் ஸ்ரீமந்நாராயணனுக்கு அபிஷேகாதிகளைச் செய்து

पुसूक्तैर्वैष्णवैरन्यैः श्रीसूक्तैर्द्वयमनूत्तमैः।
उद्दामतुलसीपत्रैर्मल्लिकाम्बुजसंयुतैः॥ (४)

4. ஈடு இணையற்ற புருஷ, இன்னும் மற்ற விஸேஷ ஸூக்தத்தாலும், ஸ்ரீஸூக்தம், த்வயம் முதலியவற்றாலும், மல்லிகை, தாமரை முதலியவற்றோடு கூடிய செழிப்பு நிறைந்த துளசி பத்ரங்களாலும்,

जातिके तकि क ल्हारैर्माधवीकु सुमैश्शुभैः ॥

*சுபகரமான ஜாதி மல்லி, தாழை, வெண்ணிற (அல்லி) குவளை, வாஸந்தீ என்னும் புஷ்பங்களாலும்,*

गन्धैर्धूपैश्च दीपैश्च सम्यगभ्यर्च्य केशवम् ।
दध्यन्नैः पायसान्नैश्च शुद्धान्नैः घृतसंयुतैः ॥ (५)

*5. வாஸனையுடைய தூபங்களாலும், தீபங்களாலும், எம்பெருமான் கேசவனை நன்கு ஆராதித்து, தத்யன்னம் (தத்யோதனம் (அ) தயிர் ஸாதம்), பாயஸான்னம் (திருக்கண்ணமுது), ஆஜ்ய (நெய்)ம் கலந்த சுத்தான்னங்களாலும்,*

नानारूपफ लोपेतैः सूपजुष्टैः मधुप्लुतै. ।
रसायनवरोपेतैरन्नसूक्ताभिमन्त्रितैः ॥ (६)

*6. அன்னஸூக்தங்களால் அபிமந்த்ரணம் செல்லப்பட்டும் பலவித பழங்களாலும், பிரியமான பருப்பு வகையறாக்கள் கூடியதாயும் தேன் கலந்ததாயும், இப்படித் தயாரிக்கப்பட்ட ச்ரேஷ்டமான ரஸாயனங்களாலும்,*

कर्पूरवासवीटीभिस्सन्तर्प्य प्रत्यह हरिम् । सन्तर्प्याऽस्तेऽन्वह
श्रियःपतिपदाम्भोजयुगलाश्लिष्टचेतसः ॥ (७)

*7. கற்பூர மணம் நிறைந்த (பாக்கு) தாம்பூலங்களாலும், பிரதிதினமும் ஸ்ரீ ஹரியை த்ருப்தி செய்வித்துக் கொண்டு இருந்தார். ஸ்ரீபதியான எம்பெருமானின் பாதகமலங்களில் லயித்த மனமுடையவரான,*

श्रीमदष्टाक्षरं मन्त्रं जपतोऽस्य महामुनेः ।
पुरतो मण्डलीभूतप्रभूताद्भुतदर्शना । (८)

*8. எப்போதும் ஸ்ரீமதஷ்டாக்ஷரமந்த்ரத்தை ஜபித்துக் கொண்டிருக்கிற இந்த மஹாமுனிவருடைய எதிரில் மண்டலாகாரமான அத்புதமான தர்சனத்தை உண்டாக்கி*

शतकोट्यर्कसदृशा विद्योतितदिगन्तरा।
योजनद्वितयव्याप्ता नीलीभूतकृतस्थला।। (९)

9. நூறுகோடி ஸூர்யர்களுக்கு ஸமானமாயும் எட்டு திக்குகளிலும் பரவிய சோபையுடனும், இரண்டு யோஜனை தூரம் வியாபித்து, நீலநிறமாக்கப்பட்ட பிரதேசங்களுடனும், கூடினதாயும்

काचिन्नीलप्रभा प्रादुरासीन्नेत्रकुतूहला।
ता प्रभां मुनिशार्दूलः पश्यन् पश्यन् पुनःपुनः।। (१०)

10. கண்களுக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடிய ஒரு நீலநிற சோபையானது வெளிப்படையகாத் தோன்றியது. முனிவர்களில் ச்ரேஷ்டரான கண்வர் அந்தச் சோபையைத் திரும்பத் திரும்பப் பார்த்துப் பார்த்து

अदृष्टपूर्वा दृष्टेय किमेतदिति चिन्तयन्।
चिन्तयाविष्टहृदग. पश्यंस्तस्थौ समाहित.।। (११)

11. இதற்கு முன் காணப்படாத அதிர்ஷ்டவசமாக கிடைத்திருக்கும் இந்த காக்ஷி என்னவாக இருக்கும்? என்றெண்ணி, சிந்தனையால் சூழப்பட்ட ஹ்ருதயமுடையவராக அந்தக் காக்ஷியைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

ततो नीलघनान्तस्थतडिद्दामविराजितम्।
कपिलाक्ष गरुत्मन्तं काञ्चनाद्रि समप्रभम्।। (१२)

12. பிறகு கறுத்த மேகத்தினிடையே தோன்றுகிற மின்னல் கொடி போன்று பிரகாசமானவரும், (தாமரை போன்ற சிவந்த) பொன்னிறக் கண்களை உடையவரும், ஸவர்ணமலைக்கு ஈடான காந்தியுடைய கருடப் புள்ளரசனை,

गायत्रीचक्षुषं सामतन्तुं स्तोमशरीरिणम्।
पातालगतपादाग्रं ब्रह्माण्डगतमौलिकम्।। (१३)

13. காயத்ரீயை கண்களாகவும், ஸாம வேதத்தை யக்ஞோபவீதமாகவும், யாகத்தைச் சரீரமாகவும், பாதாளம் வரை

சென்றுள்ள திருவடிகளை உடையவராகவும், ப்ரம்மலோகம் வரைச் சென்றிருக்கும் சிரஸை உடையவராகவும் உள்ளவரை,

छन्दोमय त्रिवृच्छीर्ष छन्दोग सामगायकम्।
सूक्ष्मरूपं बृहद्रूप भीमकाय त्रिलोचनम्॥ (१४)

14. வேதஸ்வரூபனாகவும், மூன்று தலைகளை உடையவரும், ஸாம வேதகானம் செய்து கொண்டிருப்பவரும், சிறுத்த சரீரமுற்றவராயும், அணுரூபராயும், ப்ருஹத் (ரூப) உருவராயும், பயங்கரத் தோற்றமுள்ளவராயும் உள்ள முக்கண் மூர்த்தியானவரையும்,

अमृताशिनमानन्दनिधिं निगमरूपिणम्।
दीर्घबाहु बृहत्स्कन्धं नानाभरणभूषितम्॥ (१५)

15.அமிர்தமுண்டவரும், ஆனந்த நிதியாயும், வேதஸ்வரூபனாகவும், நீண்ட கைகளையும், பருத்த தோள்களையும் உடையவரும், பலவகையான ஆபரணங்களை அணிந்தவரும்,

वासुकि प्रमुखैर्नागैः कृतयज्ञोपवीतिनम्।
शङ्खचक्रे सुधाकुम्भं पन्नगौघपरं विभुम्॥ (१६)

16. வாஸுகி முதலான ஸர்ப்பங்களால் செய்யப்பட்ட யக்ஞோபவீதமணிந்தவரும், சங்கம், சக்ராதிகளைத்தரித்தவரும், தேவாம்ருதம் நிரம்பிய குடத்தை ஏந்தியவரும், ஸர்ப்பஙகளின் எதிரியும், ஸர்வ வ்யாபியானவரும்,

वक्रनासं महोत्साहं पुण्डरीकनिभाननम्।
विष्णुपादाङ्कितकरं जरामरणवर्जितम्॥ (१७)

17. வளைந்த மூக்கு உள்ளவரும், அதிக ஸந்தோஷத்துடனிருப்பவரும், தாமரை மலருக்கு ஸமமான முகத்தை உடையவரும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாதங்களை ஏந்திய கைகளை உடையவரும் மூப்பு, மரணாதிகளைத் தவிர்த்தவரும்,

पक्षघातसमुद्भूतनागवंशकदम्बकम्।
नानारूपधर भक्तकामप्रदमजं विभुम्॥ (१८)

*18. தன் சிறகால் அடித்த காற்றினாலேயே பாம்பினக் கூடங்களை அழிப்பவரும், பலவித உருவஙகளை தரிப்பவரும், பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றுபவரும் பிறவியற்றவரும் ஸர்வ வ்யாபியானவரும்,*

स्वर्णवर्णं कृपापूर्णं तेजोराशिं मनोज्वलम्।
रुद्ररूपं महाकायं सर्वमङ्गलदायकम्॥ (१९)

*19. பொன்னிறமானவரும், கருணை நிரம்பியவரும், ஒளி பொருந்தியவரும், அறிவுக்கூர்மை நிரம்பியவரும், பயப்படத்தக்க உருவமுள்ளவரும், பெரிய சரீரமுள்ளவரும், எல்லா மங்களமும் அளிப்பவரும்,*

देवासुरनरव्रातवन्दितं क्षेमकारिणम्।
वैनतेय समारुह्य नीलमाणिक्यसन्निभः॥ (२०)

20. தேவர்கள், அஸுரர்கள், மனிதர் ஆகியவர்களால் ஸேவிக்கப்படுகிற க்ஷேமத்தைக்கொடுக்கிற, வாகனமான கருடன் தோள் மீதேறி, நீலரத்தினம் போல் பிரகாசிக்கிறவரும்,

तुलसीकुन्दमन्दारपारिजातसमुज्ज्वलः।
वैनतेयकरद्वन्द्वविन्यस्ताङ्घ्रिसरोरुहः॥ (२१)

*21. துளஸி, முல்லை, மந்தாரை, பாரிஜாத மலர்களை அணிந்து பிரகாசிப்பவரும், கருடனின் இரண்டு கைகளிலும் வைக்கப்பட்ட தாமரை மலர் போன்ற பாதங்களை உடையவரும்,*

शङ्खचक्रगदापद्मशार्ङ्गनन्दकभृत्करः।
सौदामिनीसमानश्रीहेमयज्ञोपवीतवान्॥ (२२)

*22. சஙகம், சக்ரம், கதை, சார்ஙகம், பத்மம், நந்தகம், முதலியவற்றைக் கைகளில் ஏந்தி இருப்பவரும், மின்னலுக்கு ஸமமான ஒளியுடைய ஸ்வர்ணமயமான யக்ஞோபவீதம் அணிந்திருப்பவரும்,*

नानाविचित्ररत्नाढ्यकुण्डलाभ्यां विराजितः।
पीताम्बरधरःश्रीमान्कस्तूरी तिलकान्वित.॥ (२३)

23. பலவித விசித்ரமான ரத்னங்களாலான குண்டலங்களால் சோபையுடையவரும் கஸ்தூரி திலகமணிந்து, பீதாம்பரம் தரித்து மஹாலக்ஷ்மியுடன் கூடியிருப்பவரும்,

मुक्ताहारपरिच्छिन्नकम्बुकण्ठोपशोभितः ।
दिव्याभरणसंयुक्तवनमालाविराजितः ।। (२४)

24. பலவித லக்ஷணங்களுடன் கூடிய முத்து மாலைகளை அணிந்திருப்பதான சங்கொத்த கழுத்தின் சோபைகளோடு கூடியவரும், திவ்ய ஆபரணங்களோடு கூடிய வனமாலை (வைஜயந்தி - கதம்ப துளவி மாலை) யின் சோபையையும் உடையவரும்,

केयूरसङ्गसंराजच्चतुर्भुजविराजितः ।
स्फुरद्रत्नकिरीटश्रीनिर्धूततरुणारुणः ।। (२५)

25. தோள்வளைகளணிந்து நான்கு கைகளுடன் சோபிக்கின்றவரும், பிரகாசத்தின் பேரொளியால் உதயகாலத்தருணனின் நிறத்தை மங்கவைக்கும் ரத்ன கிரீடத்தின் ஒளியால் விளங்குபவரும்,

अनेककोटिकन्दर्पलावण्यनिलयः शुभः ।
अनन्तरूपी भगवान् सौन्दर्यनिधिरच्युतः ।। (२६)

26. அநேக கோடி மன்மதர்களின் அழகு சேர்ந்த அழகுக்கு இருப்பிடமானவரும், சுபமானவரும், அழகுக்குவியலாயும், ஆத்யந்தம் இல்லாதவருமான, அண்டியவரை கைவிடாத அச்யுதனான ஸ்ரீமந்நாராயணன் -

हिरण्यवर्णामीशानां सौवर्णरजतस्रजाम् ।
सर्वलक्षणसंपन्नां यौवनारम्भविग्रहाम् ।। (२७)

27. ஸ்வர்ண நிறமுடையவளும், அனைத்து தேவதைகளுக்கும் அதி தேவதையாக இருப்பவளும், தங்கம், வெள்ளியாலான நகைகளை அணிந்திருப்பவளும், எல்லா லக்ஷணங்கள் பொருந்தியவளும், யௌவன ஆரம்பமே உருவனாவளும்,

पादरागसमुद्भूतपद्मरागमणिप्रभाम् ।
शीतांशुमण्डलाकारनखपङ्क्तिभिरुज्ज्वलाम् ।। (२८)

28. பாதங்களின் சிவந்த நிறத்தால் மங்க வைக்கப்பட்ட பத்மராக ரத்னஙகளின் சோபையை உடையவளும், சந்திரனின் மண்டலாகாரம் போன்ற நகஙகளின் சோபையோடு கூடியவளும்,

सौवर्णकदलीकाण्डशीतलोरुद्वयश्रियम् ।
ज्योत्स्नावदातकौशेयवसनोद्दामभासुराम् ।। (२९)

29. ஸ்வர்ண நிறமுள்ள, வாழைத் தண்டு போன்றிருக்கும் குளிர்ச்சியான துடைகளின் சோபையை உடையவளும் அழகான நிலவொளி போன்ற வெண்பட்டு வஸ்த்ரத்தின் செழிப்பான காந்தி உள்ளவளும்,

कृशमध्यां वरोत्तुङ्गस्तनकुंभोपशोभिताम् । कृ
मङ्गलाभरणोद्दामकम्बुकण्ठमनोहराम् ।। (३०)

30. மிக மெலிந்த இடையையுடையவளும், ஒரு தர்ப்பப் புல்லின் இடைவெளியுடன் சிறப்பாக நிமிர்ந்த ஸ்தனங்களால் சோபிக்கிறவளும், மங்களகரமான ஆபரணங்களால் நிறைந்த மனோஹரமான சங்கு போன்ற கழுத்தின் அழகைப் பெற்றவளும்,

दयारसार्द्रनयनां प्रसन्नवदनाम्बुजाम् ।
मन्दारकेतकीजातिकुसुमाञ्चितकुन्तलाम् ।। (३१)

31. தயை நிரம்பிய குளிர்ந்த (ஈரமான) கண்களைப் பெற்றவளும், மலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தோற்றமுடையவளும், மந்தாரை, தாழம்பூ, மல்லிகை, ஜாதி புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட தலைமுடியுடையவளும்,

मकरन्दरसास्वादपतितालिद्वयाम्बुजाम् ।
कराम्बुजाभ्यां बिभ्राणा जगन्मातरमीश्वरीम् ।। (३२)

*32. மகரந்தத் துகள்களின் இனிமையைப் பருக வந்து விழும் வண்டுகள் மொய்த்தத் தாமரை மலர்களை ஏந்திய தாமரை போன்ற புஜத்வயங்களை உடையவளுமான ஸர்வேச்வரியான லோகமாதாவை -*

नित्यानपायिनीं देवीमद्वहन् लोकनायक:।
इन्द्रादिलोकपालैश्च सनकादिमुनीश्वरै:॥ (३३)

*33. என்றும் பிரியாமல் கூடியிருக்கும், ஸ்ரீ தேவியான மஹாலக்ஷ்மியை (வக்ஷஸ்தலத்தில்) தாங்கியிருக்கிற அனைத்துலகங்களுக்கும் நாயகனான பகவான், இந்திரன் முதலான லோக பாலர்களாலும் ஸநகாதி முனிவர்களாலும்,*

शुद्धैरागमदेवैश्च शास्त्रदेवैस्तथैव च।
अश्विनीदेवताभ्यां च प्रजापतिगणैरपि॥ (३४)

*34. பரிசுத்தமான ஆகம தேவதைகளாலும், சாஸ்த்ர தேவதைகளாலும், அவ்வாறே அச்விநி தேவதைகளாலும், ப்ரஜாபதி கணங்களாலும், (ப்ரஹ்மா, சிவன் முதலானோராலும்)*

भूम्यन्तरिक्षस्वर्गैश्च शैलभेदैर्नरैरपि।
पञ्चपञ्चविधै:सत्वैस्सूरिभि:प्राकृतैरपि॥ (३५)

*35. பூமியில் வஸிப்பவர்களாலும், ஆகாசத்தில் வஸிப்பவர்களாலும், ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களாலும், வெவ்வேறான மலைகளாலும், மனிதர்களாலும், ஐந்துவித இயற்கைப் (ப்ருத்வீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாஶம்) பொருட்களாலும், அறிவு மிகுந்தவர்களாலும், அறிவு குறைந்தவர்களாலும்,*

चण्डादिद्वारपालैश्च मणिकादिगणैरपि।
पादसंवाहिनीभिश्च कूर्माद्याधारशक्तिभि:॥ (३६)

*36. சண்டன் முதலான த்வார பாலகர்களாலும், மணிகன் முதலான கணங்களாலும், பாதஸேவை செய்பவர்களான அப்ஸரஸ் ஸ்த்ரீகளாலும், கூர்மம் முதலான ஆதார சக்திகளாலும்,*

धर्मज्ञानादिपीठैश्च हेतिभिश्च विभूतिभि:।
विभूषानन्तगरुडविष्वक्सेनादिभिर्गणै:॥ (३७)

37. தர்மம், ஞானம், வைராக்யம், ஐஶ்வர்யம், முதலான பீடங்களாலும், ஐந்து ஆயுதங்களாலும், (சங்கம், சக்ரம், கதை, கட்கம், வில்) நித்யலீலாவிபூதிகளாலும், அநேக திவ்யாபரணங்களாலும், அனந்த கருட, விஷ்வக்ஸேனாதி நித்யஸூரி திவ்யஸூரி. முக்த கணங்களாலும்,

दिव्यापसरोगणैर्दिव्यचित्रचामरहस्तकै:।
धूपैर्दीपैश्च संपूज्य: पुष्पवर्षैश्च वर्षित:॥ (३८)

38. திவ்யமான, சித்ரமான பலவகை சாமராதிகளை பகவான் முகமலர்ச்சிக்காக பகவத்கைங்கர்யஸ்வரூபமாக கையில் ஏந்தியிருக்கிற திவ்ய அப்ஸரஸ்களின் கணங்களாலும், தூப தீபங்களால் ஆராதிக்கத் தக்கவரும், புஷ்பவர்ஷங்களால் வர்ஷிக்கப்படுபவரும்,

आसेव्यमानो भगवान् श्रीपति: पुरुषोत्तम:।
फाल्गुने मासि राकया उत्तरर्क्षेन्दुवासरे॥ (३९)

39. இவ்வாறு எப்போதும் எல்லோராலும் ஸேவிக்கப்படுகிற பகவான் புருஷோத்தமன் ஶ்ரிய : பதியான புருஷோத்தமன் ஸ்ரீமந்நாராயணன் பங்குனி மாதம் பௌர்ணமி திதி உத்தர (பல்குனி) நக்ஷத்திரம் கூடிய சுபதினமான திங்கட்கிழமை நன்னாளில்,

प्रादुरासीन्मुनेरग्रे कृपया भक्तवत्सल:।
सस्तूयमानो मुनिभि· श्रीपतिर्गरुडोपरि॥ (४०)

40. பக்தவத்ஸலனான எம்பெருமான் ஸ்ரீநிவாஸன் கருடவாஹனாரூடனாகவும், முனிவர்களால் துதிக்கப் படுகிறவனாகவும், கருணையோடு கண்வமுனிவர் எதிரில் தோன்றினான்.

ब्रह्मेशेन्द्रादिदेवैश्च नित्यमुक्तैश्च पूजित:।

ப்ரம்மா, மஹேச்வரன், இந்திரன் முதலான தேவர்களாலும், நித்யமுக்தர்களாலும் ஆராதிக்கப்படுகிற பகவான் தோன்றினான்.

ततो मुनि: पुण्यकृतां वरिष्ठो नीलप्रभामण्डलमध्यभागे।
प्रालक्षयद्विष्णुरथे मुकुन्दं इवाञ्जनाद्रि कनकाद्रिशृङ्गे॥ (४१)

*41. பிறகு புண்ணிய சீலர்களில் சிறந்தவரான கண்வமுனிவர் நீலநிறமுள்ள ஒளி மண்டலத்தின் நடுவில் ஸ்வர்ணமயமான மலையுச்சியில் பிரகாசிக்கிற அஞ்சனாத்ரி (கரிய மலை) யைப் போல் ஒளிர்கின்ற ஸ்ரீகருடன் தோளில் இருக்கிற முகுந்தனின் திருமேனியை தர்சித்தார்.*

दृष्ट्वा मुकुन्दमतिमोहवशान्महर्षिः।
मूर्ध्ना पुनः पुनरमुष्यपदारविन्दे।
नत्वा मुकुन्दकृपया भवबन्धमुक्तः
तस्थौ समाश्रितमनाश्च पदाग्रवर्ती॥ (४२)

*42. கண்வ மஹர்ஷி ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்து, அதிக மோஹவசத்தால் அவனுடைய பாதாரவிந்தங்களில்திரும்பத் திரும்ப மூழ்கி எழுந்து, தலைவணங்கி, அவனது க்ருபையால் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபட்டு தெளிந்த பற்றிய மனமுடையவராக எம்பிரானது காலடியிலேயே இருந்தார்.*

तुष्टाव रोमाञ्चितसर्वगात्रः।
श्रियःपतिं विष्णुरथाधिरूढम्॥ (४३)

*43. கருடன் மீது ஆரோஹணித்திருக்கிற ஶ்ரிய · பதியான ஸ்ரீநிவாஸனை தரிசனம் செய்த முனிவர் உடல் முழுவதும் மயிர்க்கூச் செறிந்தவராக மிகவும் ஸந்தோஷமடைந்து துதித்தார்.*

गोविन्दराजाय नमो नमस्ते
प्रपन्न संरक्षण दीक्षिताय।
मद्भागधेयाय नमो नमस्ते
अपार संसारविमोचनाय॥ (४४)

*44. தன்னை ஶரணாகதியாக அடைந்தவனைக் காப்பாற்றுவேன் என்று ஶபதம் செய்து கொண்டிருப்பவனும், எல்லையற்ற ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிப்பவனும், எனக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுக்கிறவனுமான கோவிந்தராஜனுக்கு நமஸ்காரங்கள்.*

नमस्ते नमस्ते जगत्तापहर्त्रे
पवित्रादिमानन्दकन्दैककर्त्रे।
नमस्तेऽखिलाधारधात्रे निहन्त्रे
रिपून् विश्वमूर्ते नमस्तेजजेत्रे॥ (४५)

45. இந்த லோகத்தில் ஏற்படக்கூடிய தாபங்களை அழிக்கிறவனே! பரிசுத்தமான, ப்ரஹ்மானந்தத்தைத் தர முக்கியமாயிருப்பவனே அகில லோகத்தையும் தாங்கியிருப்பவனே! ஶத்ருக்களை அழிப்பவனே ! லோக நாதனே ! ஒளிமயமானவனே ! தான் பிறப்பிலியாய் அனைத்தையும் வெல்பவனே ! உனக்கு அநேக நமஸ்காரங்கள்

नमस्ते निरस्तप्रपन्ना.... स्ता
मरेशादिवन्द्यास्सुरेन्दादिनन्द्याः। (४६)

46. இந்திரன் முதலிய தேவர்களால் ஶரணமடையப்பட்டு, அவர்களால் துதிக்கத்தகுந்தவரே ! உமக்கு வணக்கம்

नमस्ते सुपर्णस्य जातार्तिहारिन्।
समस्तापराधान् क्षमस्व क्षमस्व॥ (४७)

47. நல்ல இறக்கைகளையுடைய ஜடாயுவின் துன்பங்களைப் போக்கியவனே! என்னுடைய அபாரதங்களைப் பொறுத்தருள்வீராக.

नमस्ते कलानाथबिम्बाननेश नमो दिव्यमायाविलासाखिलेश
प्रजेश प्रजेश प्रभो विध्यधीश॥ स्फुरन्मन्दहासादिभाषिन् रमेश॥ (४८)

48. பதினாறு கலைகள் நிரம்பிய பூர்ண சந்திரன் போன்ற குளிர்ந்த மகிழ்ச்சி தரும் முகமுடையவரே ! எல்லா உயிர்க்கும் தலைவரே ! ப்ரஜாபதியான ப்ரஹ்மாவைக் கொண்டு படைத்தலை நடத்துபவனே ! சிவனைக் கொண்டு ஸம்ஹாரத் தொழிலைச் செய்பவனே ! (உந்தியில் நான்முகனைப் படைத்து அவனால் அரனைப் பெற வைத்தவனே) உனக்கு அநேக நமஸ்காரங்கள். திவ்யமாயாவிலாஸத்தால் ஆன அகிலாண்டகோடி ப்ரம்மாண்ட நாயகனே ! மந்தஹாஸத்தோடு கூடின பேச்சுக்களை உடையவனே! லக்ஷ்மீகாந்தனே ! அநேக நமஸ்காரங்கள்.

नमस्ते कुक्षिकोणैकदेशभ्रमल्लोकजालावमोद्बुद्धबुध्दे।
नमस्ते श्रिया नीलया भूमिदेव्या मुहुर्मोहसंभोगलीलादिशीला॥
(४९)

49. (ப்ரளய காலத்தில் உண்ணப்பட்டு) வயிற்றின் ஒரு பாகத்தில் வைக்கப்பட்டு சுழன்று கொண்டிருக்கிற அனைத்துலகையும் பாங்காகக் காக்கும் நினைவுடையவனே! மஹாலக்ஷ்மி, பூதேவி, நீளா தேவியுடன் அடிக்கடி கூடி மகிழ்வித்து மகிழ்வதான தன்மையுள்ள உம்மை வணங்குகிறேன்.

नमस्ते नमस्ते विभो चक्रपाणे
नमस्ते नमस्ते धराधार देव ।
नमस्ते नमस्ते समस्तान्तरात्मन्
नमस्ते नमस्ते समास्ताधिनाथ ।। (५०)

50. ஸர்வ வ்யாபியான சக்ரபாணியை ஸேவிக்கிறேன். இந்த பூமியைத் தாங்கியிருக்கும் தேவனை ஸேவிக்கிறேன். ஸமஸ்த ஜீவராசிகளிடத்தும் அந்தராத்மாவாயிருக்கிற பகவானை ஸேவிக்கிறேன். எப்பொருட்கும் நாதனான எம்பெருமானை ஸேவிக்கிறேன்.

नमस्तेंबरादित्यहृत्पुण्डरीका।
न्तरस्थैक वीरप्रबुध्यातिधीर।
नमस्ते तपस्सिध्दरूपाय पुंसे
परस्मै स्वभक्तानुकूलाभिलाषिन् ।। (५१)

51. ஆகாசத்திலிருக்கும் ஸூர்ய மண்டலத்தின் நடுவில் உள்ள பகவானே! மனிதரின் ஹ்ருதயகமலத்தில் வீற்றிருக்கும் விரனே! வல்லவர்களுக்கெல்லாம் வல்லவரே! தேவரீரை ஸேவிக்கிறேன். தவம் செய்கிறவர்களின் தபஸ்ஸுக்கு உகந்து காட்சியளிக்கும் புருஷ ச்ரேஷ்டரே! பரம்பொருளே! பக்தர்களின் அபிலாஷையைப் பூர்த்தி செய்கிறவரே! ஸேவிக்கிறேன்.

नमस्ते भुजङ्गेशशायिन्ननेका-
वतारादिमूर्ते सदानन्दपूर्ते।

ஆதிசேஷன் மீது சயனித்திருப்பவரே! அநேக அவதாரங்கள் எடுத்தவரே! ஆதிமூர்த்தியே! எப்போதும் ஆனந்தத்தோடு மகிழ்வித்துக் கொண்டு இருப்பவரே! ஸேவிக்கிறேன்.

नमस्ते जगन्नाथ मां पाहि विष्णो!
प्रसीद प्रसीद प्रसीद प्रसीद ।। (५२)

52. அனைத்து லோகங்களுக்கும் நாதனே ! மஹாவிஷ்ணுவே ! உம்மை ஸேவிக்கிறேன். (எம்மை) ரக்ஷிப்பீராக ! எனது பிழைகளைப் பொருத்தருள்வீராக !

इति स्तुत्वा नाथं पदकमलमीशस्य सरसः
पयोभिः पुंसूक्तैः प्रियवदभिषिञ्चन्मुनिवरः ।
प्रपन्नश्शुध्दात्मा सरसिजदलैः.....
..........................................

இவ்வாறாக பகவானை ஸ்தோத்ரம் செய்து பகவானின் திருப்பாதகமலங்களை குளத்தின் நீரால் புருஷஸூக்தாதிகளைச் சொல்லி மிகவும் பிரியத்தோடு முனிச்ரேஷ்டர் திருமஞ்ஜனம் செய்து கொண்டு பகவானையே முற்றும் சரண் அடைந்த தூயமனத்தரான அந்த முனிவர் தாமரை இதழ்களாலே அர்ச்சனை செய்தவராக இருந்தார்.

ततः प्रसन्नो भगवानवादीन्मुनिसत्तमम् ।
वर वृणीष्व भद्रं त्वं चित्ते यद्वर्तते तु तत् ।। (५३)

53. பிறகு பகவான் மஹாவிஷ்ணு மிகவும் ஸந்தோஷமடைந்தவராக முனிச்ரேஷ்டரைப் பார்த்துக் கூறுகிறார். உனக்கு மங்களம் உண்டாகட்டும். உன்னுடைய மனதில் என்ன இருக்கிறதோ அந்த வரத்தைக் கேட்பாயாக.

त्वया यत्प्रार्थितं सर्वं त्वदर्थं दातुमादरात् ।
इत्युक्तं वच आकर्ण्य ऋषिर्भागवतोत्तमः ।। (५४)

54. உன்னால் கேட்கப்படுகிற எல்லாவற்றையும் உனக்காகக் கருணையோடு கொடுப்பதற்கு இருக்கிறேன் என்று சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டு பாகவதோத்தமரான முனிவர்

ययाचे लोकतुष्ट्यर्थं स्वार्थं वरचतुष्टयम्।
पुण्डरीकसरस्तीरे विमाने सात्विकाह्वये॥ (५५)

55. இஹலோக ஜனங்களின் ஸந்தோஷத்துக்காகவும், நனக்காகவும், நான்கு வரங்களை பகவானிடம் யாசித்தார். 'புண்டரீக நள்க்கரையில்' ஸாத்வீகம் எனப்படும் விமானத்தோடு கூடியதும்

ब्रह्मणा निर्मिते ज्ञानमये किल्बिषनाशने।
साक्षाद्वेदमये पुण्ये दर्शनान्मुक्तिदायके॥ (५६)

56. ப்ரம்மதேவனால் நிர்மாணிக்கப்பட்டதும், ஜ்ஞான ஸ்வரூபமானதும், பாவங்களைப் போக்கக் கூடியதும், ஸாக்ஷாத் வேதமயமானதும், புண்ணியம் நிறைந்ததும், தர்சனம் செய்த மாத்ரத்திலேயே மோக்ஷத்தைத் தரக்கூடியதும்,

तप्तजाम्बूनदमये स्वर्णस्तम्भशताकुले।
नानाप्रियमनोहारिचित्राढ्ये सुमनोहरे॥ (५७)

57. சுத்தீகரிக்கப்பட்ட ஸ்வர்ணமயமானதும், நூற்றுக் கணக்கான நங்கமயமான ஸ்தம்பங்களை உடையதும் அநேகவிதமானவர்களுடைய மனதைக் கவரக்கூடிய அழகுடையதும், சித்ர வேலைப்பாடுகளை உடையதும்,

सर्वरत्नैश्च खचिते चित्रकूटाख्यमण्डपे।
अनन्तभोगपर्यङ्के योगनिद्रावशंगतः॥ (५८)

58. எல்லா ரத்னங்களாலும் பதிக்கப்பட்டட சித்ரகூட மண்டபத்தில் (படம் விரித்த) ஆதிசேஷன் என்ற இனிய படுக்கையில் மடியில்) யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கிற

सेवितोऽद्य श्रिया भूम्या नीलया च हरिः स्वयम्।
सद्वारपालकैर्भृत्यैस्समग्रैः परिचारकैः॥ (५९)

59. ஸ்ரீ மஹாவிஷ்ணு இப்போது தானாகவே ஸ்ரீபூமிநீளா ஸமேதராக ஸேவிக்கத்தக்கவராக இருக்கிறீர். த்வாரபாலகர்களாலும் ஸேவக கணங்களாலும், பரிசாரகர்களாலும்,

पादसंवाहिनीभिश्च सूरिभिश्च मुनीश्वरः।
समस्तदेवताभिश्च ऋषिभिस्सनकादिभिः ॥ (६०)

60. பாதஸேவை செய்பவர்களாலும், நித்யஸூரிகளாலும், முனிவர்களாலும், எல்லாத் தேவதைகளாலும், ஸநகர் முதலான ரிஷிகளாலும்,

इन्द्रादिलोकपालैश्च ब्रह्मरुद्रपुरोगमैः।
सेव्यमाने सदा कृष्णक्षेत्रे सर्वफलप्रदे ॥ (६१)

61. இந்திரன் முதலான லோக பாலகர்களாலும், ப்ரம்மா, ருத்ரன் முதலான தலைவர்களாலும், பலன்களனைத்தையும் தரக்கூடிய ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தில் எப்போதும் ஸேவிக்கத்தக்கவராக

मत्प्रीतये नित्यवासं कुरु भक्तानुकम्पया।
एतत्क्षेत्रगतानां तु पुरुषार्थचतुष्टयम् ॥ (६२)

62. பக்தர்களுக்கு அநுக்ரஹம் புரிபவராக அடியேனின் ப்ரீதிக்காக இங்கு நித்யவாஸம் செய்வீராக. இந்த க்ஷேத்ரத்தை அடைபவர்களுக்கு தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்கு வித புருஷார்த்தங்களும்,

जन्तूना भविता सर्वं तत्तदाशानुसारतः।
कृष्णक्षेत्रे मृता ये च पशुपक्षिमृगादयः ॥ (६३)

63. அவரவர்களின் தர்மாநுஷ்டானங்களுக்கு ஏற்றபடி ஏற்பட வேண்டும். அந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் மரணமடையக் கூடிய பசுக்கள், பறவைகள், மிருகங்கள் முதலான

जन्तवश्छिन्नपापास्ते यान्तु निर्वाणपद्धतिम्।
ममापि तव पादाब्जे विलयो भवतादिति ॥ (६४)

64. பிராணிகள் எல்லம் தத்தம் பாபங்கள் அழிந்தவையாக மோக்ஷத்தை அடைய வேண்டும். அடியேனுக்கும் தேவரீரது பாதகமலங்களில் ஈடுபாடு ஏற்பட வேண்டும். (261)

पश्यताममरेशानां ऋषीणामग्रतःपरम्।

इत्येवं कण्वमुनिना प्रार्थितोऽसौ जनार्दनः ॥ (६५)

65. தேவரீரைக் கண்டு களிக்கிற அமரர்களுக்கும், ரிஷிகளுக்கும், முன்னால் இவ்வாறாக கண்வ மகரிஷியால் ஜனார்த்தன ரூபியான பகவான், மிகவும் ப்ரார்த்திக்கப்பட்டார்.

त्वया यत्प्रार्थितं सर्वं तथैवास्त्विति चाब्रवीत्।
तस्याभीष्टं ददौ शीघ्रं मुनेर्मुक्तिं हरिः स्वयम् ॥ (६६)

66. ஸ்ரீமந் நாராயணனும் 'உம்மால் ப்ரார்த்திக்கப்பட்ட எல்லா வரங்களும் அப்படியே ஆகட்டும்' என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே முனிவரது விருப்பங்களையும் நிறைவேற்றி, அந்த முனிவருக்கு மோக்ஷத்தையும் கொடுத்தருளினார்.

त्यक्त्वा मुनिस्तैरवलोक्यमानः प्रक्षीणमायुर्हतकर्मजालम्।
मुकुन्दपादाम्बुरुहे विलीनः तपोधनस्संयमिनां वरिष्ठः ॥ (६७)

67. சிறந்த தபோநிஷ்டரும், முனிவர்களில் சிறந்தவருமான கண்வ முனிவர் ஸ்ரீமந்நாராயணனால் கடாக்ஷிக்கப்பட்டு, அங்குள்ளவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, கர்ம வினைகளையுடைய இந்த சரீரத்தின் ஆயுள் முடிந்தவராக ஸ்ரீமுகுந்தனின் பாதாரவிந்தங்களில் தொண்டராகச் சேர்ந்தார்.

நான்காம் அத்யாம் முற்றும்.

கபர்த்தி ஸ்தோத்திரம் என்கிற

## ஐந்தாம் அத்யாயம்

कण्वं मुक्तं मुनिं दृष्ट्वा शम्भुर्विस्मितचेतनः।
आनन्दताण्डवं कुर्वन् तुष्टाव कमलापतिम्। (१)

1. கண்வ முனிவர் முக்தியடைந்ததைக் கண்ட பரமேச்வரன் மிகுந்த ஆச்சரியமடைந்தவராக ஆனந்த தாண்டவம் செய்து கமலாபதியான ஸ்ரீமஹாவிஷ்ணுவை இவ்வாறாக ஸ்தோத்ரம் செய்தார்

देव देव जगन्नाथ रक्षितं भुवनत्रयम्।

त्र१षेः कैवल्यदानाच्च त्वया परमयोगिना।। (रमयोगि

2. தேவ தேவனே ! ஜகன்னாத ! பரமயோகியான தேவரீரால் (கண்வ) முனிவருக்குக் கொடுக்ககப்பட்ட மோக்ஷத்தினால் இம்மூவுலகமும் காப்பாற்றப்பட்டது.

अच्युतानन्त गोविन्द सच्चिदानन्द शाश्वत।
रमणीयगुणोत्कृष्ट शरणागतवत्सल।। (३)

3. அச்யுத ! அநந்த ! கோவிந்த ! நிலையான ஸச்சிதானந்த (ஸத்வகுணமும், உண்மையும் அறிவும் ஆனந்தமும் நிரம்பிய) ஸ்வரூபா! மிக அழகான உயர்ந்த குணங்களை உடையவனே ! சரணமடைந்தோரை பேரன்புடன் (வாத்ஸல்யத்துடன் ) ரக்ஷிப்பவனே!

मधुकैटभसंहारिन् नरकासुरभञ्जन।
उत्तमश्लोक वेदान्तसारसर्वज्ञ शाश्वत।। (४)

4. மது கைடப அஸுரர்களை ஸம்ஹரித்தவனே ! நரகாஸுரனை அழித்தவனே ! உன்னதமான கீர்த்தியுள்ளவனே ! வேதாந்த ஸாரங்களை பூர்ணமாக அறிந்த ஸர்வஜ்ஞனே ! எப்போதும் எங்கும் நிலைத்திருப்பவரே !

अणिमादिगुणोपेत गोवर्धनधरामल।
कौस्तुभालङ्कृतोरस्क। वनमालाविभूषित।। (५)

5. அணிமா, மஹிமா, முதலான குணங்கள் நிறைந்தவனே ! கோவர்த்தன மலையைத் தாங்கியவனே ! அமலனே ! கௌஸ்துபத்தால் அலங்கரிக்கப்பட்ட மார்பை உடையவனே ! வனமாலை தரித்தவனே !

शङ्खचक्रधर! श्रीश लक्ष्म्यावासभुजान्तर।
यदुवंशसमुद्भूत! जन्मनाशविवर्जित॥ (६)

6. ஶங்கத்தையும், சக்ரத்தையும் தரித்தவனே ! மஹாலக்ஷ்மியின் தலைவனே ! திருமார்பை மலர்மகளுக்கு இருப்பிடமாகக் கொண்டவனே! யதுவம்சத் தோன்றலே ! பிறப்பு, இறப்புக்கு அப்பாற்பட்டவனே !

चाणूरमर्दनोदार! महोत्साहोध्दृतासुर।
पूतनाप्राणसंहर्तः! शकटासुरभञ्जन॥ (७)

7. சாணூரன் என்னும் அரக்கனைக் கொன்றதால் (நமக்கு நன்மை நல்கி) பெருந்தமையுடையவனே ! மிகுந்த ஆர்வத்தோடிருப்பவனே ! (நாட்டாரை நலியும்) அரக்க குலத்தை அழிப்பவனே ! பூதனை என்னும் அரக்கியைக் கொன்றவனே ! சகடாஸுரனை அழித்தவனே !

विश्वामित्राध्वरत्रातः अहल्यार्तिविमोचन।
सीतामुखाम्बुजोल्लासकर! भार्गवगर्वहृत्॥ (८)

8. விஶ்வாமித்ர முனிவரின் யாகத்தை ரக்ஷித்தவனே! அகலிகையின் சாபம் நீக்கியவனே ! சிவதனுஸ்ஸை முறித்து ஸீதாதேவியின் முகம் மலர, அகமகிழ, வாழ்வை மலரச் செய்தவனே ! பரசுராமனின் கர்வத்தை அடக்கியவனே !

उपेन्द्र! भगवन्! साधुपरित्राणनदीक्षित।
वेदापहारिमथन! यज्ञादिपरिपालक॥ (९)

9. உபேந்த்ர பகவானே ! ஸாதுக்களை ரக்ஷிக்க ஸங்கல்பித்திருப்பவனே ! வேதங்களை அபஹரித்த (ஹிரண்யாக்ஷனை) அஸுரனை அழித்தவனே ! யாகங்களையும், மற்ற நல்ல தர்மங்களையும் ரக்ஷிப்பவனே !

त्वयि विन्यस्तचिन्ता ये जिता लोकास्तु तैर्नरैः।
त्वत्पादाम्बुरुहध्यानात् पुरुषार्थचतुष्टयम्॥ (१०)

*10. உம்மிடம் உவந்து ஆழ்ந்து லயித்த மனமுடையவர்கள் யாவரோ அவர்களால் பரமபதம் உள்பட அனைத்தும் கையிலங்கு நெல்லிக்கனியாய் அடையப்படுகின்றன. உன் திருவடி மலர்களை நினைப்பதால் அனைவரும் நான்கு வித புருஷார்த்தங்களையும் பெறுகின்றனர்.*

आप्नुवन्ति नराः केचित् सुलभास्सनकादयः।
त्वमेव सर्वभूतानामन्तर्यामी सनातनः॥ (११)

*11. ஸனகர் போன்ற முனிவர்கள் உம்மை எளிதில் அடையும் நிலையுடையவர்களாய் இருக்கிறார்கள். ஸநாதனமான (மிகவும் பழமையானவனான) நீரே ஸகல ப்ராணிகளிலும் அந்தர்யாமியாக இருக்கிறீர்.*

त्व यज्ञस्त्व वषट्कारस्त्वमोङ्कारः प्रजापतिः।
त्वमेव यज्ञकरणं यज्ञाङ्गी च त्वमेव हि।
त्वमेव यज्ञगृह्य च स्वाहाकारस्त्वमेव हि॥ (१२)

*12. நியே யஜ்ஞ (வேள்வி) மாயிருப்பவன், யஜ்ஞபுருஷனும் நீயே. நீயேப்ரணவம், ப்ரஜாபதியும் நியே, யஜ்ஞத்துக்கான கருவியும் நீயே, யஜ்ஞத்துக்கு அங்கமாயிருப்பவனும் நீயே. யஜ்ஞத்தின் ரஹஸ்யமாயிருப்பவனும் நீயே. யஜ்ஞத்தில் ஸ்வாஹா ஶப்தமாகவும், அதன் பொருளாகவும் இருப்பவனும் நீயே.*

त्वमेव हव्यं होता च त्वमध्वर्युश्च दीक्षितः।
त्वं वह्निभेदस्त्वं कर्मफलं मन्त्रश्च मन्त्रवित्॥ (१३)

*13. நீரே ஹோமத்தில் (நெய் முதலான ஆஹுதி செய்யப்படும் பொருளாக இருக்கிறீர். யஜ்ஞத்தில் ருக்வேதமந்த்ரம் சொல்பவராக இருக்கிறீர். ஹோமம் செய்யும் யஜுர் வேதியாகவும், யஜ்ஞம் செய்து வைக்கிற ஆசார்யனாகவும் நீரே இருக்கிறீர். யஜ்ஞத்தில் தீக்ஷை பெற்ற யஜமானனும் நீரே. (கார்ஹபத்யம், ஆஹவநீயம்,*

தாக்ஷிணாத்யம் என்கிற அக்னிகளின் பிரிவாக இருப்பவரும் நீரே. கர்மபலனை அளிப்பவரும் நீரே. யஜ்ஞத்தில் மந்த்ரமாக இருப்பவரும் நீரே. மந்த்ரங்கள் அறிந்திருப்பவரும் நீரே).

सेतिहासपुराणाश्च साङ्गा वेदास्त्वमेव हि।
त्वमेव ज्योतिरनिलः त्वमेव सुरवर्त्म च॥ (१४)

*14.* இதிஹாஸ புராணங்களாக இருப்பவரும் நீரே. அங்கங்களுடன் கூடிய வேதங்களும் நீரே. அக்னியாகவும், காற்றாகவும், நீரே இருக்கிறீர். நீரே ஆகாசமாகவும் இருக்கிறீர்.

त्वमेव काननसरित्सागराचलभूमिकः।
त्वमेव भोक्ता भोक्तव्यं कर्ता कार्यं त्वमेव हि॥ (१५)

*15.* வனமாகவும், நதியாகவும், ஸமுத்திரமாகவும், மலையாகவும், பூமியாகவும், நீரே இருக்கின்றீர். நீரே ஆணையிடுபவராகவும் ஆட்கொள்ளுபவராகவும், ஆட்கொள்ளப்படும் பொருளாகவும் இருக்கிறீர். நீரே ஸ்ருஷ்டிக்கிறவராயும், ஸ்ருஷ்டிப் பொருளாகவும் இருக்கிறீர்.

त्वमेव मातापितरौ सर्वस्य भुवनस्य च।
त्वमेव दाराः पुत्राश्च त्वं बन्धुस्त्वं प्रियः सुहृत्॥ (१६)

*16.* இந்த உலகமனைத்துக்கும் நீரே தாயும், தந்தையாகவுமிருக்கிறீர். பத்நியாகவும், பிள்ளைகளாகவும், உறவினராகவும், ப்ரியமான நண்பனாகவும் நீரே இருக்கிறீர்.

त्वं चन्द्रमास्त्वमादित्यस्त्वमेव ग्रहतारकाः।
इन्द्रादिलोकपालाश्च सदेवासुरमानुषाः। (१७)

*17.* சந்த்ரனும் நீரே, ஸூர்யனும் நீரே. க்ரஹங்களும் நக்ஷத்ரங்களும் நீராகவே இருக்கிறீர். நீரே இந்த்ரன் முதலான லோகபாலர்களாகவும், தேவர், அஸுரர், மநுஷ்யர்களாகவும் இருக்கிறீர்.

अहं ब्रह्मा च रुद्रश्च धर्म(:) शास्त्रं त्वमेव हि।

(அடியேனும், பிரமனும், தருமங்களும், சாத்திரம் அனைத்தும் நீரேயாகிறீர்)

त्वमेव जाति भेदाश्च गुरुशिष्यौ त्वमेव हि।
त्वमेव वचनं वक्ता नमस्कार्यो नमस्कृतिः॥ (१८)

18. வர்ணாஶ்ரம் ஜாதிபேதங்கள் நீரே. ஆசார்யராகவும் சிஷ்யராகவும் இருப்பவரும் நீரே. பேசுகிறவரும் நீரே. பேசப்படுகிற வார்த்தையும் நீரே. வணங்குகிறவரும் நீரே. வணங்கப்படுகிற தெய்வமும் நீரே.

त्वमेवोपासकोपास्यौ त्वमेवोपासनक्रमः।
त्वमेव गुणभेदाश्च क्षेत्रज्ञश्च त्वमेव हि॥ (१९)

19. பக்தனும் நீரே. பக்தனால் பூஜிக்கப்படுகிற தெய்வமும் நீரே. பூஜை செய்கிற க்ரமமும் நீரே. (ஸத்வம், ரஜஸ், தமஸ் எனப்படும்) குணங்களின் நிலைகளும் நீரே. (பிராணிகளில் அடங்கியுள்ள) ஜீவனும் நீரே.

प्राणापानसमानाश्च व्यानोदानौ त्वमेव हि।
त्वमेव हि जपो जपेयस्तपो होमस्त्वमेव हि॥ (२०)

20. ப்ரான, அபாந, ஸமாந, வ்யாந, உதாந எனப்படும் ஐந்து வித ப்ராணன்களும் நீரே. ஜபமும், ஜபிக்கப்படுகிற தெய்வமும் நீரே. தபஸும் நீரே. ஹோமமும் நீரே.

त्वमेव दृश्यो द्रष्टाच श्रोता श्रोतव्य एवच।
त्वमेव चाद्यं प्राप्य च भजनीयस्त्वमेव हि॥ (२१)

21. நீரே காணத்தக்கவராகவும், காண்பவராகவும், கேட்கிறவராகவும், கேட்கத்தக்கவராகவும் இருக்கிறீர். நீரே ஆதியானவர். அடையத்தக்கவரும் அடைய வேண்டியவரும் நீரே.

प्रायश्चित्तं च जन्तूनां त्वन्नामस्मरण परम्।
त्वमेव जातिभेदश्च वर्णभेदस्त्वमेव हि॥ (२२)

22. ஶ்ரேஷ்டமாயிருக்கிற உமது நாமஸ்மரணமே பிராணிகளுக்கு (தான் செய்த பாபங்களுக்கு) ப்ராயச்சித்தமாகிறது. நீரே ஜாதி பேதங்களாகவும் வர்ணாஶ்ரம பேதங்களாகவும் இருக்கிறீர்.

त्वयि प्रोतमिदं सर्वं जगत्स्थावर जङ्गमम्।
त्वया विना जीवनाय नान्या गतिरितीरिता॥ (२३)

23. உம்மால் கட்டப்பட்ட (ஸ்ருஷ்டிக்கப்பட்ட) இந்த உலகத்திலுள்ள ஜங்கம ஸ்தாவரங்களனைத்தும் நீரில்லாமல் ஜீவிக்க முடியாத. இவற்றுக்கு வேறு கதியுமில்லை.

जगतां जीवनाधारस्त्वमेव त्रिगुणात्मकः।

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களோடு கூடிய நீரே இந்த உலகத்துக்கு ஜீவனாதாரமாக இருக்கிறீர்.

नमस्ते पुण्डरीकाक्ष नमस्ते पापनाशन।
नमस्सहस्रशीर्षाय सहस्राक्षाय ते नमः॥ (२४)

24. தாமரை மலர் போன்ற கண்ணை உடையவரே! பாபங்களை அழிப்பவரே! ஆயிரம் ஶிரஸ்களை உடையவரே! ஆயிரம் கண்களை உடையவரே! உம்மை ஸேவிக்கிறேன்.

हरये वासुदेवाय गोविन्दाय नमो नमः।
नमः कृष्णाय रामाय नारसिंहाय ते नमः॥ (२५)

25. ஸ்ரீஹரியாகவும், வாஸுதேவனாகவும், கோவிந்தனாகவும், ஸ்ரீக்ருஷ்ணனாகவும், ஸ்ரீராமனாகவும், ஸ்ரீநரஸிம்மனாகவும் உள்ள தேவரீரை ஸேவிக்கிறேன்.

केशवाय नमस्तुभ्यं हृषीकेशाय ते नमः।
नमस्ते पद्मनाभाय माधवाय नमो नमः॥ (२६)

26. கேஶவனான உமக்கு நமஸ்காரம். ஹ்ருஷீகேஶனான உம்மை வணங்குகிறேன். பத்மநாபனான உம்மை ஸேவிக்கிறேன். மாதவனான உமக்கு அநேக நமஸ்காரங்கள்.

दामोदर! नमस्तुभ्यं गोपालाय च ते नमः।
नमो जीवात्मभेदाय परमानन्दरूपिणे॥ (२७)

27. தாமோதரரே ! போற்றி, கோபாலனான உம்மை ஸேவிக்கிறேன். படைக்கப்படும் ஜீவாத்மாவாகவும். படைக்கும் பரமாத்மாகவும் பேதமுள்ளவராகவும், பரமானந்தரூபியுமான உம்மை ஸேவிக்கிறேன்.

नमस्ते विश्वरूपाय नमः स्वानन्ददायिने।
नमस्ते विश्वपतये नमस्ते विश्वशम्भवे॥ (२८)

28. விஶ்வரூபனான உமக்கு நமஸ்காரம். ஆனந்தத்தை அளிக்கும் உமக்கு நமஸ்காரம். லோகபதியான உமக்கு நமஸ்காரம். லோகத்துக்கு க்ஷேமத்தைத் தருகிற உமக்கு நமஸ்காரம்.

विश्वभर्त्रे नमस्तुभ्यं विश्वहर्त्रे नमो नमः।
नमस्ते भूतभूव्याय नमो वेदान्तवेदिने॥ (२९)

29. இந்த உலகத்தை ரக்ஷிப்பவரும், இந்த உலகத்தை அழிப்பவருமான உம்மை ஸேவிக்கிறேன். இருந்த, இருக்கிற, இருக்கப்போகிற அனைத்துமான ப்ரம்மாவுக்கு பதவி அளித்தவரும், வேதாந்தங்களால் அறியத்தக்கவருமான உம்மை ஸேவிக்கிறேன்.

त्रऽग्यजुस्सामरूपाय नमश्चाथर्वरूपिणे।
त्रिमूर्तये नमस्तुभ्यं दिव्यरूपधराय ते॥ (३०)

30. ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்களின் உருவமாயிருக்கிற உமக்கு நமஸ்காரம். மும்மூர்த்தியாக இருப்பவரும், திவ்ய மங்களவிக்ரஹ ரூபியானவருமான உம்மை ஸேவிக்கிறேன்.

नमस्ते मानुषरूपाय तिर्यग्रूपधराय ते।
नमस्तेऽनन्तशयन नमस्ते गरुडध्वज॥ (३१)

31. மனித உருவமாகவும், பறவை, விலங்கு உருவமாகவும், உள்ள உம்மை வணங்குகிறேன். அனந்தன் மீது சயனித்திருப்பவரே! கருடனை த்வஜமாகவும் உள்ளவரே ! உம்மை ஸேவிக்கிறேன்.

श्रीभूमिनीळापतये नमस्सत्यधराय च।
नमस्ते वासुदेवाय यशोदानन्ददायिने॥ (३२)

*32. ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவிகளின் நாயகனே! ஸத்யமாகவே எப்போதும் இருப்பவரே! வஸுதேவகுமாரனே! யசோதைக்கு ஆனந்தமளிப்பவரே! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमष्षाड्गुण्यपूर्णाय नित्यमुक्ताय ते नमः।
वरदाय नमस्तुभ्यं प्रणतार्तिहराय च॥ (३३)

*33. எப்போதும் ஆறு குணங்களின் நிறைவானவரே! எப்போதும் மோக்ஷமளிப்பவரே! கேட்கும் வரம் அளிப்பவரே! ஶரணாகதி செய்பவர்களை ரக்ஷிப்பவரே! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमो वैकुण्ठनाथाय क्षीराब्धिशयनाय च।
नमस्ते सर्वरूपाय ब्रह्मरूपधराय च॥ (३४)

*34. வைகுண்டநாதனே! திருப்பாற்கடலில் சயனித்திருப்பவரே! எல்லாமாக இருப்பவரே! ப்ரணவ பரப்ரஹ்மஸ்வரூபமானவரே! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमो राजार्तिसंहर्त्रे विष्टरश्रवसे नमः।
नवनीतभुजे तुभ्यं कुब्जावैरूप्यहारिणे॥ (३५)

*35. ராஜாக்களின் மனக்கவலையை நீக்குபவரே! ஸ்ரீ மஹா விஷ்ணுவே! வெண்ணையுண்டவாயனே! வெண்ணெய் ஏந்திய கையனே! கூனியின் அவலக்ஷணத்தை போக்கியவனே! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमस्ते गोपिकानाथ गोपीवस्त्रहराय च।
नमः पिञ्छावचूडाय मृच्चराय ते नमः॥ (३६)

*36. கோபிகாநாத! கோபஸ்த்ரீகளின் வஸ்த்ராபஹாரம் செய்தவரே! மயில் தோகையணிந்த சிகையோனே! மண்ணை உண்டவாயனே! உம்மை வணங்குகிறேன்.*

नमो गोपालपालाय शिशुपालहराय च।
वेणुगानसमाहूतगोकुलाय नमो नमः ॥ (३७)

37. கோபாலர்களை ரக்ஷிக்கிறவனை, சிசுபாலனை ஸம்ஹரிக்கிறவனை, வேணுகானம் செய்து பசுக்களை வரும்படி அழைக்கிற கோகுலநந்தனை ஸேவிக்கிறேன்.

नमस्ते द्वारकानाथ बाणप्रमथनाय च।
नन्दगोपकुमाराय पशूनां पतये नमः ॥ (३८)

38. த்வாரகாவுரிநாதனே ! பாணாஸுரனின் தோளைத் துணித்தவரே! நந்தகோபனின் குமாரனே! உயிர்க்கெல்லாம் தலைவனை ! (பசுமாடுகளைக் காப்போனே) உம்மை வணங்குகிறேன்.

नमस्ते यदुनाथाय नमो मायाविलासिने।
नमस्सहस्रनाम्ने च सर्वान्तर्यामिने नमः ॥ (३९)

39. இடையர்களின் தலைவனே, கிட்டினாரை மையல் ஏற்றி மயக்கும் மாயாஸ்வரூபனே, ஆயிரம் பெயர் உடையவனே, எல்லாம் ஜீவராசிகளின் இதயத்திலும் இருப்பவனே, உமக்கு நமஸ்காரம்.

नमस्ते रुक्मिणीनाथ! भूभारहरणाय च।
नमस्ते मङ्गलाकार! नमस्ते पार्थसारथे ॥ (४०)

40. ருக்மிணிகாந்தனே ! பூமியின் பாரத்தைக் குறைப்பவனே, நன்மை தருபவரே! மங்கள உருவானவரே ! பார்த்தஸாரதியே ! உமக்கு நமஸ்காரம்

नमस्ते शम्भुचापघ्न! बलिगर्वापहारिणे।
नमस्ते घोररूपाय नमस्ते पुण्यकीर्तये ॥ (४१)

41. பரமேஸ்வரனின் வில்லை முறித்தவனே ! மஹாபலியின் கர்வத்தை ஒடுக்கியவனே ! பயங்கரரூபத்தை (சத்ருக்களுக்காக) எடுப்பவனே ! புண்யம் நிறைந்தவனே ! உமக்கு நமஸ்காரம்

नमस्ते नीलरूपाय वटपत्रनिवासिने।
नमो मत्स्यादिरूपाय विश्वरूपाय ते नमः॥ (४२)

*42. மேகம் போல் நீலவர்ணமுடையவனே ! ஆலிலையில் துயில்பவனே! மத்ஸ்யாதி அவதாரங்கள் எடுத்தவனே, விச்வரூபம் எடுத்தவனே ! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमस्ते भक्तसुलभ! नमस्ते भक्तवत्सल।
नमस्ते केशिनाशाय नमस्ते शान्तरूपिणे॥ (४३)

*43. பக்தர்களுக்கு தோற்றமளிப்பதில் ஸுலபமானவனே ! பக்தவத்ஸலனே! அடியவரிடம் பேரன்பு உள்ளவனே ! கேசி என்றும் அஸுரனை அழித்தவனே ! காந்தஸ்வரூபனே ! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमस्ते भवसंहर्त्रे मम पित्रे नमो नम ।
नमस्ते भयहर्त्रे च लोकपूज्याय ते नमः॥ (४४)

*44. பிறப்பு, இறப்புக்களை அழிப்பவனே! என்னுடைய தந்தையே! ஸம்ஸாரபய நாசகனே ! மக்களால் பூஜிக்கத்தக்கவனே ! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमः कुवलयापीडभञ्जनायानघाय च।
नमस्सर्वात्मने तुभ्यं परमात्मस्वरूपिणे॥ (४५)

*45. குவலயாபீடமென்னும் யானையை அழித்தவனே! குற்றமற்றவனே! எல்லோருடைய ஆத்மாக்களிலும் உள்ளிருந்து வாழ வைத்துக் கொண்டு இருப்பவனே ! பரமாத்மஸ்வரூபனே ! உம்மை ஸேவிக்கிறேன்.*

नमस्सहस्रपादाय ब्रह्मणे च नमो नमः।
आदिमध्यान्तशून्याय सर्वप्रहरणाय च॥ (४६)

*46. அநேக கிரணங்களோடு கூடிய நீரே ஸூர்ய பகவான் ஸகலத்தையும், ஸ்ருஷ்டிக்கிற நீரே ப்ரம்ம தேவன். உமக்கு ஆதியுமில்லை, அந்தமும் இல்லை. குறைகளை நீக்கி எல்லோரையும் ரக்ஷிப்பவர் நீரே. உம்மை ஸேவிக்கிறேன்.*

नमः कोदण्डहस्ताय पाञ्चजन्यधराय च।

கோதண்டம் என்னும் வில்லை ஏந்தியவரும், பாஞ்சஜந்யம் என்றும் சங்கு தரித்தவருமான உமக்கு அநேக ப்ரணாமங்கள்.

त्वां सर्वकूटस्थमखण्डरूपं विरूपिणं च श्रुतयो वदन्ति।
सहृत्य लोकान् जठरे तु शेषे वटच्छदे रम्यपुरे मुरारे॥ (४७)

47. ஶ்ருதிகள் அனைத்தும், உம்மை அனைத்துக்கும் தோற்றுவாயாய், இயற்கையாகவே முழுமையான பரமாத்மஸ்வரூவன் என்றும், விசேஷ உருவ அமைப்பு உடையவனென்றும் சொல்கின்றன. ஹே முராரியே! நீர் மிக உம்முடைய அழகான சிறிய வயிற்றில் இந்த உலகனைத்தையும் அடக்கித் தளிரான ஆலிலையின் துளிரில் படுத்து இருந்தீரே!

कल्पान्तरे त्वं शिशुवेषधारी तव प्रभाव वद वेत्ति को वा।
त्वय्येव चाध्यासितमैन्द्रजालं प्रपञ्चजाल मुनयो वदन्ति॥ (४८)

48. பிரளயத்தில் நீர் சிறிய குழந்தை வேஷத்தை எடுத்தீர். உம்முடைய வயிற்றில் இந்த ப்ரபஞ்ச ஜாலத்தை இந்திரஜால முறையில் அடக்கினீர். இந்திரஜால வித்தைகளை நீர்தான் அறிந்திருக்க முடியும். உமது மஹிமையைத் தெரிந்து கொள்ளவோ அல்லது பேசவோ யாரால் முடியும் என முனிவர்கள் கூறுகின்றனர்.

अन्ये विदुस्तत्त्वविदां पुरोगाः सत्यं प्रपञ्चस्थितितद्विरुद्धम्।
असक्तमप्राप्त[redacted]मचिन्त्यमानं श्रुतिमस्तके च॥ (४९)
विकारशून्य

49. உண்மையறிந்தவர்களில் சிறந்த சிலர் உம்மை எப்போதும் உள்ளவராகவும், உலகநிலைக்கு (கர்மவச்யமான நிலை) மாறுபட்டவராகவும் ஸம்ஸார பந்தமற்றவராகவும், ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் வரும் விகாரமற்றவராகவும் வேதவேதாந்தங்களாலும் உமது பெருமையை அளவிட முடியாமலும் அறிந்து அளவிட்டுப் பேச முடியாத பெருமை உள்ளவராகவும் சொல்லுகிறார்கள்.

विमत्सरं सर्वगमप्यदृश्यं पुराविदस्त्वां कथयन्ति सन्तः।
विरूपिणं लोभविलोपवर्जितं दयानिधिं त्वां मुनयो जगुस्समम्॥
(५०)

50. எப்போதுமுள்ள ஸம்ஸாரத்தில் காணும் வேண்டுதல் வேண்டாமையில்லாதவராகவும் ஸர்வஜ்ஞரான உம்மை எங்கும் நிறைந்திருப்பவராகவும் உம்மை முன்னமேயே நன்கறிந்த பெரியோர்கள் கூறுகின்றனர். பேராசை, பாசாங்கு செய்தல் முதலியன இல்லாத விசேஷ உருவமுள்ள, காணக் காண இனிமையான. தயாநிதியான உம்மை அனைவரையும் ஒன்றாக நினைப்பவராகவும், நோக்குபவராகவும் எண்ணுகிறார்கள்.

त्वमीश! साम्राज्यमनर्गलं ते ययुः कटाक्षं विदधीत येषाम्।
अहं च वेधासुरपुङ्गवोऽपि त्वदीक्षणाकाङ्क्षिण एव सर्वे॥ (५१)

51. அனைத்துலகமுமுடையவரான நீர் யாரைக் குளிரநோக்குகிறீரோ அவர்கள் தங்கு தடங்கல் அற்ற ஆட்சியை அடைகிறார்கள். எனவே நானும், ப்ரம்மாவும், மற்ற தேவர்கள் எல்லோரும் உம்முடைய கடாக்ஷத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

संसारकालानलपीडितानां पुंसांच तच्छान्तिमभीप्सितानाम्।
गोविन्दनामस्मरणाम्बुसेकादन्योऽस्ति किं नश्चिदभीष्टदाने॥
(५२)

52. ஸம்ஸாரமாகிற காட்டுத் தீயினால் பீடிக்கப்பட்டு, அதனின்றும், அமைதியை விரும்புசிற மனிதர்களான நமக்கு, கோவிந்த நாம ஸ்மரணமாகிற நீர் வீழ்ச்சியைத் தவிர வேறு எதுவும் விருப்பத்தை (சாந்தியை)த் தரக்கூடியது உண்டோ?

इत्थं स्तुत्वा कपर्दी कृतनटनगतिः
............ प्रार्थयन्नित्यसेवाम्।

विष्णोः पादाग्रदेशे स्वनटनवसतिं
............ चात्मनो नित्यवासः॥ (५३)

53. இவ்வாறாக ஜடா-மகுடதாரியான பரமேச்வரன் நர்த்தன கதியை உடையவராக, எம்பெருமானின் நித்ய ஸேவையைப்

பிரார்த்தித்து, மஹாவிஷ்ணுவான கோவிந்தராஜனின் பாதாரவிந்தப் பிரதேசத்தில் தனது நடன வஸதியையும், தனது நித்ய வாஸத்தையும் செய்து கொண்டிருக்கிறார்.

तेनैव प्रार्थ्यमानादथ मधुरिपुणा (नेन हि)
...........ह्यभ्यनुज्ञात ईड्य:। (ढ्य:)
नृत्यन्नद्यापि वास कलयति
.... मुदित: पश्यमानस्समस्तै:' ॥ (५४)

54. பிறகு பரமேச்வரன் பிரார்த்தித்த காரணங்களால், அவரது துதியை அங்கீகரித்த மஹாவிஷ்ணுவினால் ஒப்புக் கொண்டு உத்திரவிடப்பட்ட சிவன், மற்ற அனைத்து தேவர்களுடனும் நடனத்தைச் செய்து கொண்டு சந்தோஷமாக நித்யவாஸம் செய்து வருகிறார்.

तदा रुद्रस्तु हर्षेण ब्रह्मेन्द्रादिसुरासुरै:।
पतञ्जलिमुखैस्सद्भि: मुनिभिश्च समावृत: ॥ (५५)

55. அப்போது ஸ்ரீருத்ரன் மிகவும் ஸந்தோஷத்தோடு ப்ரம்மா இந்திரன் முதலான தேவர்களுடனும், பதஞ்ஜலி முதலான ஸாதுக்களுடனும், முனிவர்களுடனும் சூழப்பட்டவராக (320)

कनकाख्यसभामध्ये रत्नस्तम्भविराजिते।
चित्रकूटे मणिव्रातस्निग्धसिंहासने शुभे॥ (५६)

56. திருச்சித்ரகூடத்தில் ரத்னங்களால் பொலிகின்ற கம்பங்களுடன் கூடின மண்டபமான சபையின் நடுவில் அழகிய சித்ரங்கள் நிரம்பிய அநேக ரத்னங்கள் இழைத்து நிகுநிகு வென்று ஜ்வலிக்கிற நல்ல ஸிம்ஹாஸனத்தில்

आस्थितस्यादिशेषाङ्कशायिन: श्रीजगत्पते:।
श्रीमद्देवादिदेवस्य चित्रकूटनिवासिन: ॥ (५७)

57. வீற்றிருக்கிற, ஆதிசேஷன் மீது சயனித்திருக்கும், லோகநாயகனான ஜகத்பதிக்கு உத்ஸவராய் திருச்சித்ரகூடத்தில் வாஸம்செய்கிற தேவாதிதேவன் என்னும் பெயருடையவராய்

श्रीमद्गोविन्दराजस्य सभानाथस्य शार्ङ्गिणः।
उत्सवं कारयामास श्रद्धाभक्तिसमन्वितः॥ (५८)

58. ஸபாநாதராய் விளங்கி, சார்ங்கமென்னும் வில்லை உடைய கோவிந்தராஜனுக்கு ச்ரத்தையுடனும், பக்தியுடனும் உத்ஸவம் செய்து வைத்தார்.

फाल्गुने मासि रोहिण्यां शुक्लपक्ष शुभे दिने।
सभादिमण्डपान्दिव्यान् वीथिकाश्च गृहाणि च॥ (५९)

59. பங்குனி மாஸம், சுல்கபக்ஷம் கூடிய சுபதினத்தில், ரோஹிணீ நக்ஷத்திரத்தில், திவ்யமான ஸபை முதலான மண்பங்களையும் திவ்யமான வீதிகளையும். திருமாளிகைகளையும்,

अलङ्कृत्यापणैस्साकं यथायोग्यं ततः परम्।
ध्वजारोहादिकान् कृत्वा सम्यक् शास्त्रविधानतः॥ (६०)

60. கடைத்தெருக்கள் முதலானவற்றுடன் அலங்கரித்துது. அதன் பிறகு முறைப்படி நன்கு கற்றறிந்து ஶாஸ்த்ர விற்பன்னர்களாலே த்வஜாரோஹணாதிகளைச் செய்து,

वेदघोषैर्वाद्यघोषैः शङ्खकाहलभेरिभिः।
नृत्तगीतैश्च संयुक्तं सर्वलोकजनैः स्तुतम्॥ (६१)

61. வேத கோஷங்கள், வாத்ய கோஷங்கள், சங்கம், காஹலம், (ஒரு வகை வாத்யம்), பேரிகை முதலிய வாத்யவிசேஷங்கள், நாட்டியம், ஸங்கீதம் முதலியவற்றைச் செய்கிற அனைத்து உலக மக்களாலும், கோவிந்தராஜனை ஸ்தோத்ரம் செய்து

दिवारात्रं नवदिनं ह्युत्सवं वाहनैर्युतम्।
पौर्णम्यां उत्तरे ऋक्षे प्रख्यातं च रथोत्सवम्॥ (६२)

62. இரவிலும், பகலிலும் ஒன்பது நாட்கள் வாஹனங்களுடன் உத்ஸவம் செய்து, உத்தர நக்ஷத்ரம் கூடிய பௌர்ணமியில் மிகவும் சிறப்பாக ரதோத்ஸவமும் செய்து,

कृत्वाऽथ पुण्डरीकाख्यसरस्तीरेऽघनाशने।
मध्याह्नेऽवभृथ कृत्वा पुष्पयागं ततःपरम्॥ (६३)

63. பாபநாசம் செய்கிற புண்டரீக புஷ்கரணியில் மத்யாஹ்னத்தில் அவப்ருதஸ்நானம் செய்து, அதன் பிறகு புஷ்பயாகமும் செய்து,

अष्टदिक्पालकान् सर्वान् लोकान् सम्मानयन् मुदा।
एवं गोविन्दराजस्य नित्यनैमित्तिकोत्सवान्॥ (६४)

64. அஷ்டதிக் பாலகர்களுக்கும், மற்ற அனைவருக்கும், மிகவும் ஸந்தோஷத்துடன் பாராட்டுக்களைச் செய்து, இவ்வாறாக ஸ்ரீகோவிந்தராஜப் பெருமானின் நித்ய நைமித்திக உத்ஸவங்களையும், ப்ராயசித்த உத்ஸவத்தையும் (பவித்ரோத்ஸவம் முதலியவற்றையும்) ஒவ்வொரு வருஷமும் மிகவும் அத்யத்புதமாகச் செய்து கொண்டு,

स्थित्वा तत्पादपार्श्वस्थसभायां तेन शोभितः।
आसेव्यमानो भक्तैश्च पार्वत्याऽद्यापि शङ्करः॥ (६५)

65. ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திருவடிகளுக்குப் பக்கத்தில் ஸபா மண்டபத்தில் மிகவும் சோபையுடன் கூடிய ஸ்ரீபரமேச்வரன் இப்போதும் பார்வதியுடனும், பக்தர்களுடனும் ஸேவித்துக் கொண்டும்,

आनन्दताण्डवं कुर्वना् वसति स्म स्तुवन् हरिम्॥

ஸ்ரீ ஹரியை ஸ்தோத்ரம் செய்து கொண்டும், ஆனந்த தாண்டவம் செய்து கொண்டும் வசித்து வருகிறார்.

दत्वा मुनीन्द्रप्रवराय मुक्तिमनन्तल्पे कृतयोगनिद्रः।
गोविन्दराजः कृपया मुनीन्द्रे स चित्रकूटं मुदितोऽध्युवास॥ (६६)

66. அனந்தன் மீது ஸயனித்திருக்கிற ஸ்ரீ கோவிந்தராஜன் முனிவர்களுள் ஶ்ரேஷ்டரான கண்வருக்கு மோக்ஷத்தை அளித்து கண்வ முனிவரிடம் கொண்டுள்ள க்ருபையால் திருச்சித்ரகூட க்ஷேத்திரத்தில் பாம்பணையில் யோக நித்திரை செய்து கொண்டு ஸந்தோஷமாக நித்யவாஸம் செய்து கொண்டு வருகிறார்.

यः प्रभातसमये कपर्दिनः स्तोत्रमन्त्रमिदमन्वहं पठेत्।
आयुरायतमनामयं वपुस्संपदं च विपुलां लभेच्च सः ॥ (६७)

67. பரமேச்வரனால் துதிக்கப்பட்ட மந்த்ரமான இந்த ஸ்தோத்ரத்தை பிரதிதினம் காலை வேளையில் பாராயணம் செய்பவர்கள் நீண்ட ஆயுளையும், ரோகமற்றற தேகத்துடன் கூடிய உடல் வலிமையையும், மஹத்தான ஐஶ்வர்யத்தையும் பெறுவார்கள்.

इति कपर्दिस्तोत्रं नाम पञ्चमोऽध्यायः ॥

## கபர்த்தி ஸ்தோத்ரம்

என்ற ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று

## க்ஷேத்திர மாஹாத்ம்யம் என்கிற

## अथ षष्ठोऽध्यायः

## ஆறாம் அத்யாயம்

तिल्लीवने चित्रकूटे सभानाथस्य शार्ङ्गिणः।
उत्सवादि प्रवक्ष्यामि शृणु यत्नेन जैमिने॥ (१)

*1. ஜைமினி முனிவரே ! தில்லீவனம் என்கிற திருச்சித்ரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற ஸபா நாயகனான ஸ்ரீகோவிந்தராஜனுடைய உத்ஸவங்களைச் சொல்லப் போகிறேன். கவனமாக கேட்பீராக.*

कस्मिन्दिने ह्यवभृथं आचरन्ति च जैमिने?।

*ஜைமினியே! என்றைக்கு அவப்ருதம் செய்யப்பட்டது?*

चैत्रमासे तु रोहिण्यां नक्षत्रे च शुभे दिने।
ध्वजारोहादिकान् कृत्वा वैखानसविधानतः॥ (२)

*2. சித்திரை மாஸத்தில் ரோஹிணீ நக்ஷத்திரம் கூடிய ஶுபதினத்தில் வைகானஸ விதிப்படி த்வஜாரோஹணம் முதலியன செய்து,*

अलङ्कृते सभास्थाने राजस्थाने विशेषतः।
दिवारात्र नवदिनं ह्युत्सव वाहनैर्युतम्॥ (३)

*3. விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட ராஜஸ்தானமாகிற ஸபா மண்டபத்தில் வாஹனங்களோடு கூடின உத்ஸவம் ஒன்பது நாட்கள் பகலிலும், இரவிலும் செய்தும்.*

रथोत्सवं च कृत्वाऽथ पुष्पयागं ततः परम्।
पुण्डरीकसरस्तीरे उत्तरर्क्षे तु वैष्णवे।
मध्याह्ने ह्यभिजित्काले उत्सवावभृथं व्यधात्॥ (४)

4. (ஒன்பதாம் நாள்) ரதோஸ்வமும் அதன் பிறகு புஷ்பயாகமும் செய்து புண்டரீக புஷ்கரணியில் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு உகந்த உத்தர நக்ஷத்திரத்தில் நடுப்பகல் உச்சிவேளையில் அவப்ருத (ஸ்னான) உத்ஸவமும் செய்யப்பட்டது.

कण्वः पतञ्जलिस्तत्र ब्रह्मा रुद्रस्तथैव च।
एते ह्युत्सवकर्तारः भुवि ख्याताश्च जैमिने॥ (५)

5. ஜைமினியே! இந்தப் பூமியில் மிகவும் பிரஸித்தமான கண்வர் பதஞ்ஜலி, மேலும் ப்ரம்மா, ருத்ரன் முதலானவர்கள் இந்த உத்ஸவத்தை நடத்திவைத்தவர்களாக உலகில் ப்ரஸித்தி பெற்றுள்ளனர்.

जैमिने मुनिशार्दूल! पुण्डरीकपुरस्य च।
सीमाकृतेति कथिता तन्नाम्नः कारण श्रुतम्॥ (६)

6. முனிவர்களில சிறந்த ஜைமினியே புண்டரீக க்ஷேத்திரத்தின் எல்லைகள் வகுக்கப்பட்டன என்பதும், அப்பெயர் வரக்காரணம் என்ன என்பதும் சொல்லப்பட்டது.

ऋषेस्तपोनिमित्तं च वर्णितम् वै मयानघ।

ऋषिर्यत्रातपक्षेत्रे तत्क्षेत्र च मयेरितम्॥ (७)

7. குற்றமற்றவரே! கண்வமுனிவரின் தவத்திற்கு காரணமும் என்னால் வர்ணிக்கப்பட்டது. முனிவர் எங்கு வசித்து ஒளி பொருந்திய தவம செய்தாரோ, அந்த க்ஷேத்திரமும் என்னால் சொல்லப்பட்டது.

गोविन्दराजो भगवान् किन्निमित्तमभिष्टुतः।
देवैरित्यस्य वाक्यस्य दत्त प्रत्युत्तर मया॥ (८)

8. பகவான் கோவிந்தராஜன் தேவர்களால் ஏன் போற்றப்பட்டார் என்கிற கேள்விக்கு பதில் சொல்லிவிட்டேன்.

रुद्रस्य नटनेऽभीष्टं तस्य वासस्य कारणम्।
गोविन्दराजपादाग्रे श्रुतं पूर्वं त्वया मुने॥ (९)

9. முனிவரே ! பரமேச்வரன் இந்த க்ஷேத்திரத்தில் நடனம் செய்யவும், இங்கேயே ஸ்ரீ கோவிந்தராஜனின் திருவடி வாரத்தில் வசிப்பதற்கான காரணமும் முன்னதாகவே உம்மால் கேட்கப்பட்டது.

एतत्सर्व समाख्यात वक्तव्य किमतः परम्।
अस्ति चेद्ब्रूहि भद्रा त्वं तत्सर्व च वदाम्यहम्॥ (१०)

10. மஙகளகரமானவரே! இவைஎல்லாவிபரங்களும் என்னால் சொல்லப்பட்டு விட்டன. சொல்வதற்கு என்ன உள்ளது? மேலும் ஏதேனும் இதன் பிறகு சொல்ல வேண்டியிருந்தால் கேளும். அவற்றையும் சொல்கிறேன்.

जैमिनि. ஜைமினி கூறுகிறார் ·
व्यासप्रोक्तं वचः श्रुत्वा परमानन्दभृत्सुधी.।
प्रत्युवाच मुनिश्रेष्ठं रोमाञ्चित वपुर्भृशम्॥ (११)

11. வ்யாஸ பகவானால் சொல்லப்பட்ட வார்த்தையைக் கேட்டு ஜ்ஞானியான ஜைமினி முனிவர் பரமானந்தம் அடைந்தவராக. மிகவும் மயிர்க் கூச்செறிந்த சரீரமுடையவராக வ்யாஸபகவானைப் பார்த்து பதில் சொல்லலானார்.

श्रीमता भवतां सन्ति बहवः शिष्यसम्पदः।
शक्तस्त्वत्पदसेवा नः ससारार्णवतारिणी॥ (१२)

12. பூஜ்யரான தேவரீருக்கு அநேக சிஷ்யர்கள். அறிவாளிகள், அன்பர்கள், வல்லுநர்கள், உள்ளனர். ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க விரும்புகிற எங்களுக்குத் தேவரீரது பாதஸேவையே பலமுள்ளதாக உள்ளது.

भवद्भिस्सर्वमाख्यातं चिन्ता मे वर्तते पुनः।
तां चिन्तां छिन्धि मे ब्रह्मन्! शिष्यस्य हितकाम्यया॥ (१३)

13. ஹே ப்ரம்ம நிஷ்டரே ! சிஷ்யனாகிய அடியேனின் ஹிதத்தை விரும்புகிற காரணத்தால், தேவரீரால் எல்லாம் விபரமாகக் கூறப்பட்டன. ஆனாலும் எனக்கு ஒரு ஸந்தேஹம் ஏற்பட்டுள்ளது. அந்த ஐயத்தைப் போக்கியருள வேண்டும்.

गोविन्दराज इत्येवं कुतो नाम मधुद्विषः।
पुण्डरीकसरश्चेति पुष्करिण्याः प्रथा कुतः ॥ (१४)

*14. மதுவை மாய்த்த ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குக் கோவிந்தராஜன என்று ஏன் பெயர் ஏற்பட்டது. அதே போல புஷ்கரணிக்கு 'புண்டரீக ஸரஸ்' என்று புகழ் ஏற்படக் காரணம் யாது?*

कृष्णक्षेत्रमिति ख्यातं पुण्डरीकपुरं कथम् ।
एतत्सर्वं ममाचक्ष्व कृपया भक्तवत्सल! ॥ (१५)

*15. புண்டரீகபுரம் என்கிற இந்த க்ஷேத்திரத்துக்கு 'க்ருஷ்ணக்ஷேத்திரம்' என்னும் கீர்த்தி எவ்வாறு ஏற்பட்டது? பக்தவத்ஸலரே! (சீடர்களிடத்தில் அன்பு மிக்கவரே) அருள் கூர்ந்து இவை எல்லாவற்றையும் எனக்கு விளக்குவீராக.*

व्यासः *வ்யாஸர்*

उक्तं जैमिनिना वाक्यं आकर्ण्य तपतां वरः।
प्रश्नानुपूर्व्येण कथां वक्तुमारभते तदा ॥ (१६)

*16. தபஸ்விகளில் ஶ்ரேஷ்டரான வ்யாஸ முனிவர் ஜைமினியால் சொல்லப்பட்ட வார்த்தையைக் கேட்டு, கேள்வியின் வரிசைப்படி விடைகளைச் சொல்லத் தொடங்கினார்.*

आविर्भवनवेलायां विष्णोः कण्वमहामुनिः।
गोविन्दराज इत्येवमादौ स्तोत्रं चकार यत् ॥ (१७)

*17. கண்வமுனிவருக்கு ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷமான நேரத்தில் கண்வர் முதன் முதலாக 'கோவிந்தராஜ' என்று ஸ்தோத்ரம் செய்தார்.*

गोविन्दराज इत्येव तदाप्रभृति कीर्तितः।
पुष्करिण्याः समुद्भूतं पुण्डरीक दलेनवै ॥ (१८)

18. அன்று முதல் பகவான் 'கோவிந்தராஜன்' என்பதாகவே போற்றப்படுகிறார். புஷ்கரிணியில் உண்டாயிருக்கிற தாமரை மலர்களாலே,

विष्णोराराधनं कृत्वा कण्वः पुण्यकृतां वरः।
वैकुण्ठमतुलं लेभे ततः पुष्करिणी च सा॥ (१६)

19. புண்ய சீலர்களில் சிறந்த கண்வ முனிவர் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை ஆராதித்து, ஈடு இணையற்ற, அடைய வேண்டிய வைகுண்ட பதியை அடைந்தார். அந்தப் புஷ்கரிணியும் 'புண்டரீகஸரஸ்' என்று அவ்வாறாகவே

पुण्डरीकपदोपेता प्रथिता पापनाशिनी।
अध्यक्षीकृतकाले तु विष्णोः कण्वस्य सन्निधौ॥ (२०)

20. புண்டரீக புஷ்கரிணி பாபநாசினியாகப் புகழ் பெற்றது. கண்வ முனிவரின் எதிரில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷமான காலத்தில்

क्षेत्र कृष्णप्रभाव्याप्तं कृष्णक्षेत्रमितीरितम्॥ '

இந்த க்ஷேத்ரம் முழுவதும் ஸ்ரீகிருஷ்ணனின் சோபை பரவியிருந்த காரணத்தால், இது ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்ரம் என்பதாக அழைக்கப்பட்டது.

क्षेत्राणामुत्तमं क्षेत्र भवबन्धविनाशनम्।

ஸம்ஸாரபந்தத்தை நாசம் செய்கிற இந்த க்ஷேத்திரம் மற்றெல்லா க்ஷேத்திரங்களைக் காட்டிலும் மிக உயர்ந்தது.

गोविन्दराजो भगवान् शेषशायी परः पुमान्।
तत्रास्ते तस्य माहात्म्यमियत्तामावधारितुम्॥ (२१)

21. புருஷர்களில் சிறந்தவரும் சேஷசாயியுமான பகவான் ஸ்ரீகோவிந்தராஜன் அங்கு எழுந்தருளியிருக்கிறார். அதனால் அதன் மஹிமை அளவிட முடியாதது.

इन्द्रादिलोकपालैश्च तदा सेव्यं मनोहरम्।
ब्रह्माविष्णुमहेशानैराश्रितं लोकपावनम्।
जाह्नवीप्रमुखाभिश्च नदीभिस्समुपासितम्॥ (२२)

22. இந்திரன் முதலான லோக பாலகர்களால் எப்போதும் ஸேவிக்கத் தக்கதாயும், மனதுக்கு மகிழ்ச்சி தருவதாகவும், ப்ரம்மா, விஷ்ணு, மஹேச்வரன் இவர்களால் ஆச்ரயிக்கத்தக்கதாயும், இந்த பூலோகத்தில் அனைத்தையும் மிகவும் பரிஶுத்தமானதாகச் செய்வதாகவும், கங்கை முதலிய முக்யமான நதிகளாலே நித்யவாஸம் செய்யக்கூடியதாகவும்

विष्णुदासद्विजगणैः सर्वज्ञैर्वेदपारगैः।
अग्निहोत्रादिनिरतैरातिथ्यार्पणतत्परैः॥ (२३)

23. ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அடியார்களான அந்தணர்களாலும், எல்லாம் அறிந்த வேதவிற்பன்னர்களாலும், அக்னிஹோத்ரம் முதலானவற்றில் பற்றுள்ளவர்களாலும் அதிதி பூஜை செய்வதில அதிக ஆவலுள்ளவர்களாலும்

तत्वार्थचिन्तकैश्शान्तैः दमादिनिरतैश्शुभै।
भक्तैर्भागवतैरन्यैरूर्ध्वपुण्ड्रधरैस्सदा॥ (२४)

24. தத்வார்த்தங்களை (ஸ்ரீபாஷ்யம் போன்றவை) அறிந்தவர்களாலும், அதிதியாக உள்ளவர்களாலும், புலனடக்கமும், தன்னடக்கமுடையவர்களாலும், மங்களகரமானவர்களாலும், பக்த பாகவத ச்ரேஷ்டர்களாலும், மேலும், எப்போதும் திருமண்காப்பு தரிப்பவர்களாலும் கூடியதும்,

अध्यासितमिद रम्यं सर्वसम्पत्सुखावहम्।
नानासस्यफलोपेतं नानातीर्थसमन्वितम्॥ (२५)

25. இந்தப் ப்ரதேசம் அழகானதும், எல்லாவித செல்வங்களையும் ஸுகத்தையும் தரக்கூடியதும், அநேகவித பயிர்களும், பழங்களும் நிரம்பியதும், நிறைய தீர்த்த வசதிகளுடன் கூடியதாகவும்

शुभोदर्कं सदोपास्यं कीर्तनात्कलिभञ्जनम्।
नानावृक्षसमाकीर्णं वर्णाश्रमसमाकुलम्॥ (२६)

26. மங்களகரமான எதிர்காலத்தைத் தரக்கூடியதும், மஹான்களாலே பூஜிக்கத்தக்கதும், இந்த ஊரின் நாமஸங்கீர்த்தனத்தாலே கலிநாயனமுடையதும், அநேக மரம், செடி, கொடிகள் நிரம்பியதும், வர்ணாச்ரமதார்மீகர்களாலே நிரம்பியதும்,

क्षेत्रपिण्डाभिलाषैश्च पिनद्धं पितृरूपिभिः।
संसारखेदरहितं वर्द्धितं पुण्यसञ्चयम्॥ (२७)

27. இந்த க்ஷேத்திரத்தில் ஶ்ரார்த்தம் செய்ய விரும்புகிறவர்களாலே தரப்படும் பிண்டங்களை மிக்க ஆவலுடன் மகிழ்வுடனும் ஏற்கும் பித்ருவர்க்கங்களை உடையதும், ஸம்ஸார துக்கமில்லாததும், புண்ணிய காரியங்கள் மேலும் மேலும் வளரக் கூடியதும்,

प्रजावृद्धिकरं श्रेष्ठमतुलं मुक्तिसाधनम्।
ब्रह्मणो यज्ञभवनं निर्मलं लोकविश्रुतम्॥ (२८)

28. மிக உயர்ந்த (குணமுள்ள) ப்ரஜைகள் மேன்மேலும் அதிகரிக்கத்தக்கதும், ஈடு இணையற்றதும், மோக்ஷத்துக்குக் காரணமாயுள்ளதும், ப்ரம்ம தேவனின் யாகசாலையாக விளங்குவதும், மிகவும் பாவநமானது (அப்பழுக்கற்றது) என எல்லோராலும் போற்றப்படுகிறதும்,

निष्कण्टकं याम्यपाशबन्धनादिविवर्जितम्।

தொல்லைகளற்றதும், யமதர்ம பாசக் கயிற்றால் கட்டபடுவதினின்றும் விடுதலை அளிக்கிறது (யமபயமற்றது)மாக க்ருஷ்ண க்ஷேத்திரம் விளங்குகிறது.

सर्वक्षेत्रोत्तमे क्षेत्रे ये जाता ये च वा मृताः।
सर्वपापविनिर्मुक्तास्ते वै मुक्ता न संशयः॥ (२९)

29. எல்லாக்ஷேத்திரங்களினின்றும் மிக உயர்ந்ததான இந்த (புண்டரீக) க்ஷேத்திரத்தில் பிறப்பவர்களும், மரிப்பவர்களும் எல்லா பாபத்தினின்றும் விடுபட்டு, மோக்ஷத்தை அடைகின்றனர். இதில் ஸந்தேஹமில்லை.

पुण्डरीकसरस्तीरे स्नात्वैव विमलात्मना।
सकृन्नत्वा तु गोविन्दराजमेकाग्रचेतसः॥ (३०)

30. புண்டரீக புஷ்பகரிணியில் நிர்மலமான மனமுடையவராக ஸ்நானம் செய்து, ஏகாக்ரசித்தனாக மற்றொன்று வேண்டாமல் ஸ்ரீகோவிந்தராஜனை ஒரு முறை ஸேவித்து

वसन्त्येकदिनं वाऽपि कृष्णक्षेत्रे तु ये नराः।
ते वै हि पुण्यकर्माणस्सर्वलोकेषु पूजिताः॥ (३१)

31. ஒருநாள் மட்டுமாவது இந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வசிக்கிறவர்கள் புண்ணியம் நிறைந்தவர்களாக எல்லா உலகத்திலும் பூஜிக்கப்படுகிறார்கள்.

क्षेत्रेऽस्मिन् सुकृतं कर्म कुरुतेऽल्पं तु यस्सुधीः।
आस्तिकस्य विशुद्धस्य तस्य पुण्यमनन्तकम्॥ (३२)

32. ஜ்ஞானியான ஒருவன் இந்த க்ஷேத்திரத்தில் எந்த ஒரு சிறிய நல்ல காரியத்தைச் செய்தாலும், பக்தியுடன் கூடின மிகவும் பரிசுத்தமானவனுடைய அந்தக் காரியம் அளவிட முடியாத புண்ணியம் நிறைந்ததாக ஆகிறது.

यः स्मरेत्प्रातरुत्थाय कृष्णक्षेत्रं तु यो वदेत्।
पुण्याधिकस्य तस्यैव दर्शनं भवमोचनम्॥ (३३)

33. விடியற் காலையில் எழுந்து கோவிந்தராஜனை ஸ்மரித்து இந்த ஊரை நினைப்பானேயானாலும் 'ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்ரம்' என்று ஒருவன் சொல்வானேயானாலும் புண்யஶாலியான அந்த மனிதனின் தரிசனமே இந்த உலக பந்தத்தினின்றும் விடுதலை அளிக்கிறது.

यस्मिन्क्षेत्रवरे विष्णोः दासोऽसौ पार्वतीपतिः।
करोति तस्य पादाग्रे वसंस्तत्प्रीतये हरः॥ (३४)

*34. இந்த உயர்ந்ததான க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் தாஸனும், பார்வதிதேவியின் நாயகனுமான பரமேச்வரன் ஸ்ரீகோவிந்தராஜனின் பாதாரவிந்தத்தில், அவனது ப்ரீதிக்காக வசித்துக் கொண்டு,*

गोविन्दराजसेवार्थमद्याप्यानन्दताण्डवम्।
अस्मात्क्षेत्रात्प्रशस्तं तु क्षेत्रमन्यन्न विद्यते॥ (३५)

*35. கோவிந்தராஜனின் தொண்டிற்காக இப்போதும் ஆனந்த தாண்டவம் செய்கிறாரோ, அந்த க்ஷேத்திரத்தைக் காட்டிலும் கீர்த்தி வாய்ந்த க்ஷேத்ரம் வேறு எதுவும் இல்லை.*

अश्वमेधसहस्राणि कुरुते यच्चतुराननः।
यस्मिन् क्षेत्रवरे दिव्ये तस्मादेतद्विशिष्यते॥ (३६)

*36. சதுர்முக ப்ரம்மா இந்த க்ஷேத்ரத்தில் ஆயிரம் அஸ்வமேத யாகங்களைச் செய்தார். அதனால் இது க்ஷேத்திரங்களில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.*

क्षेत्राणामुत्तमं क्षेत्रं कृष्णक्षेत्रं महाद्भुतम्।

*மிகவும் வியக்கவும், விரும்பவும் தக்கதான அற்புதமான இந்த க்ருஷ்ணக்ஷேத்ரம் மற்ற க்ஷேத்ரங்களைக் காட்டிலும் உத்தமமானது.*

श्रीरङ्गं भास्करक्षेत्रं श्रीनिवासं वृषाचलम्।
चित्रकूटमिदं सत्यव्रतक्षेत्रं च नैमिशम्॥ (३७)

*37. ஸ்ரீரங்கம், பாஸ்கரக்ஷேத்திரமென்னும் திருக்குடந்தை, ஸ்ரீநிவாஸன் எழுந்தருளியுள்ள, வ்ருஷாசலமென்னும் திருப்பதியான திருமலை, (மேல் கோட்டை) திருநாராயணபுரம், திருச்சித்ரகூடம் எனும் இந்த ஊர், ஸத்யவ்ரதக்ஷேத்ரமென்னும் காஞ்சீபுரம் நைமிசாரண்யம்,*

काशीक्षेत्रमयोध्या च द्वारका मथुरा पुरी। 
श्रीमुष्णं द्वादशैतानि मुक्तिदानीह जैमिने ।। (३८)

*38. காசி, அயோத்தி, த்வாரகை, மதுராபுரீ, ஸ்ரீமுஷ்ணம் இந்த பண்ணிரண்டு க்ஷேத்திரங்களும் மோக்ஷமளிக்கக் கூடியவை என்பதை ஜைமினியே ! நீர் அறிவீராக.*

तदेतत्क्षेत्रमाहात्म्य प्रशस्ततममुच्यते ।।

*அதனால் இந்த க்ஷேத்திரத்தின் மஹிமை மிக மிக மிக உயர்ந்தது என சொல்லப்படுகிறது.*

इत्येवमुक्त्वा मुनिपुङ्गवं तं व्यासोऽपि नैर्मल्यमना बभूव।
सर्व ततः प्रष्टुमुपक्रमन्तं भूयोऽपि च व्यासमतृप्तचेता ।। (३९)

*39. இவ்வாறாக வ்யாஸபகவான் ஜைமினி முனிவரைப் பார்த்துச் சொல்லிவிட்டு அமைதியான தெளிந்த மனமுடையவராக ஆனார். ஆனால் இதனால் த்ருப்தி அடையாத ஜைமினி மறுபடியும் அதன்பிறகு சொல்லத் தொடங்கிய வ்யாஸ முனிவரைப் பார்த்து கேட்கத் தொடங்கினார்.*

इति क्षेत्रमाहात्म्यं नाम षष्ठोध्यायः।

**க்ஷேத்ர மாஹாத்மயம் என்னும் ஆறாம் அத்யாயம் முற்றிற்று**

# ஏழாம் அத்யாயம்

जैमिनि : ஜைமினி:

भगवन्! क्षेत्रमाहात्म्यतत्वज्ञानविशारद।
कृष्णक्षेत्रस्य माहात्म्यं शृण्वतो मम सुव्रत।
तृप्तिर्न जायते तस्मात् ब्रूहि विस्तरतो मम॥ (१)

1. பகவானே ! இந்த க்ஷேத்திர மஹாத்மயத்தின் தத்வ ஜ்ஞானங்களை நன்கறிந்தவரே ! தபோநிஷ்டரே! இந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தின் பெருமையைச் செவிமடுத்துக் கொண்டிருக்கிற அடியேனுக்கு த்ருப்தி ஏற்படவில்லை. ஆதலால் இதைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்ல ப்ரார்த்திக்கிறேன்.

व्यास: வ்யாஸர்:

कृष्णक्षेत्रस्य माहात्म्यमवाङ्मनसगोचरम्।
को वेत्ति तत्वतो वाऽपि यथाशक्तिब्रवीमि ते॥ (२)

2. ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தின் பெருமை முழுமையாக வாக்கினால் சொல்லக்கூடியதுமல்ல. மனஸால் நினைக்கக் கூடியதுமல்ல. அதன் தத்துவம் (முக்கியமான இயல்பு) யாராலும் அறிய முடியாது. என்னால் முடிந்தவரை உமக்குச் சொல்கிறேன்.

योजनद्वयमात्रे तु पञ्चतीर्थसमन्वितम्।
कृष्णक्षेत्रमिति ख्यातं भूवैकुण्ठमिवापरम्। (३)

3. இரண்டு யோஜனை தூரம் (16 மைல்களுக்கு உட்பட்ட) அளவிற்குள் ஐந்து தீர்த்தங்களை (நீர் நிலை) களையுடைய இந்த க்ருஷ்ணக்ஷேத்திரம் இன்னொரு (இரண்டாவதான) பூலோக வைகுண்டமென ப்ரஸித்தி பெற்றதாக உள்ளது.

समस्तमङ्गलाकारं श्रीमन्नारायणस्थलम्।
सर्वपापविशुद्ध्यर्थं मृडानीपतिसेवितम्॥ (४)

4. எல்லாவித மங்களங்களையும் தரக்கூடிய இந்த நாராயண ஸ்தலம் அனைத்துப் பாபங்களையும் போக்குகிறதாக பார்வதி பதியால் ஸேவிக்கப்படுவதாயும் இருக்கிறது.

आनन्ददमशेषाणां क्षुत्पिपासादिनाशनम्।
अक्षोभ्यमचलं हृद्यं तेजोभिस्सकलैर्वृतम्॥ (५)

5. மகிழ்ச்சி, அன்பு, தன்னடக்கமுள்ள அடியவர்களுக்கு பசி, தாஹம் முதலியன இல்லாமல் செய்கிறது. குழப்பமற்ற (தெளிந்த) சஞ்சலமற்ற, மனோஹரமான அனைத்தையும் உடையதாயும் அனைத்து தேஜஸ்ஸுக்களால் சூழப்பட்டதாயும் உள்ளது.

महापातकजालघ्नं उपपातकभञ्जनम्। तापक
प्रायश्चित्तमिदं मुख्यं कृष्णक्षेत्रस्य दर्शनम्॥ (६)

6. மிக அதிகமான அல்லது மிகப் பெரிய பாபங்களை (மஹாபாதங்களை) நாசம் செய்தும், உபபாதங்களால் ஏற்படக்கூடிய ஆபத்துக்களை அழித்தும், ஆவன செய்யக் கூடிய, ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தினுடைய காட்சியே முக்கியமான ப்ராயச்சித்தமாக ஆகிறது.

अन्तःकरणनैर्मल्यकर कण्वाश्रम परम्।
कृष्णक्षेत्रे वसन् लोको न कुटुम्बी न नास्तिकः॥ (७)

7. மேலும் இங்கேயுள்ள, ச்ரேஷ்டமான கண்வ முனிவரின் ஆச்ரமம் நம் ஹ்ருதயத்தில் கோபதாபங்களான அழுக்குகளை நீக்கி நிர்மலமாகச் செய்கிறது. ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் வசிப்பவர்கள் ஸம்ஸாரத்தில் உள்ள கஷ்டமற்றவர்களாயும், ஆஸ்திகர்களாகவும் இருக்கின்றனர்.

न वेदबाह्यो नाऽयज्वा न चोरो न च पापकृत्।
नाल्पो न मूर्खो नाविद्वान् न दरिद्रो न पीडितः॥ (८)

8. இங்கு வஸிப்பவர்கள் வேதம் அறிந்தவர்களே. யாகம் செய்தவர்களே. திருடர்களல்லர், பாபம் செய்பவர்களல்லர். அற்ப பத்தியுடையவரல்லர். முட்டாள்களல்லர். படிக்காதவர்களல்லர். தரித்திரர் (ஏழை) களல்லர். பீடை பிடித்தவரல்லர்.

नाविष्णुभक्तो नाल्पायुः नाकृतज्ञो न चाप्रभुः।
न गर्विष्ठो नाकुलीनो नाविवेकी न दुःखितः॥ (९)

9. எல்லோரும் விஷ்ணு பக்தர்கள், நீண்ட ஆயுளை உடையவர்கள், நன்றியுள்ளவர்கள், செல்வந்தர்கள், கர்வமற்றவர்க;ளள், நல்ல குலத்துதித்தவர்கள், விவேகமுள்ளவர்கள், துக்கமற்றவர்கள்.

न मातृपितृशुश्रूषारहितो न च हिंसकः।
नाचारहीनो नासूयुर्दुश्शीलो न च वाऽगुणी ।। (१०)

10. தாய் தந்தையருக்குத் தொண்டு செய்பவர்களாயும், பிறரை ஹிம்ஸிக்காதவர்களாயும், ஆசாரங்கள் உள்ளவர்களாயும், பொறாமை அற்றவர்களாயும், நல்லொழுக்கமுள்ளவராயும், தீய குணமற்றவர்களாயும், நல்ல குணசீலர்களாயும் இருக்கிறார்கள்.

नाऽतिथेयविहीनश्च न कामी नावमानितः। (वृत्तं किम?) शुग
नासत्यवादी नं च नान्नदाता न क्रूरकार्पण्यशोकप्रपीडिताः ।।
(११)

11. அதிதி ஸத்காரம் செய்யாதவர்களாயும், காமுகர்களாயும் பிறரால் அவமானம் செய்யப்படுபவர்களாயும், அஸத்யவாதிகளாகவும், ஏழை எளியோருக்கு அன்னமளிக்ககாதவராகவும், கொடியவராகவும், லோபிகளாயும் மனக்கவலை. நோயுள்ளவர்களாகவும் இங்கு வசிப்பவர்கள் இருக்கவில்லை.

न द्रोहमात्सर्यभयादिमोह दोषादयोऽस्मिन् वसतां नराणाम् ।।

பிறருக்கு துரோகம் செய்தல், பொறாமை, பயம், மோஹம் முதலான தோஷங்கள் இங்கு வசிப்பவர்களுக்கு இல்லை.

गुरुनिन्दापरश्चैव देवब्राह्मणनिन्दकः।
वञ्चकः पिशुनः स्वामिद्रोही कृपण एव च ।। (१२)

12. ஆசார்யனை நிந்தித்தல், தேவர்களையும், பிராமணர்களையும் நிந்தனை செய்தல், பிறரை ஏமாற்றுதல், கோள் சொல்லுதல், யஜமானனுக்கு த்ரோஹம் செய்தல், அற்பத்தனமாயிருத்தல் முதலான தோஷமுள்ள பாபிகளாயிருப்பவர்கள்.

कृष्णक्षेत्रं समालोक्य चैते यान्ति परं पदम्।
जन्तवश्छिन्नपाप्मानः किमु तद्देशवासिनाम्॥ (१३)

*13. ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தை தரிசித்த மாத்ரத்திலேயே இவர்கள் (தோஷங்கள் நீங்கி) உயர்ந்த ஸ்தானத்தை (மோக்ஷத்தை) அடைகின்றனர். இந்த ஸ்தலத்தில் வாசம் செய்கிற ஜந்துக்களின் பாபங்கள் தொலைந்து விடுகின்றன. இவ்வாறுள்ளபோது அங்கு வசிப்பவர்களுக்குக் கேட்க வேண்டுமா? நலமுண்டு என்பதில் ஸந்தேகம் இல்லை.*

सकृत्कीर्तनमात्रेण तेषां याति हरेः पदम्।
अश्वमेधसहस्रेण वाजपेयशतेन च॥ (१४)

*14. இங்குள்ளவர்களுக்கு ஒரே ஒரு முறை ஸ்ரீகோவிந்தராஜனின் நாமஸங்கீர்த்தனம், க்ருஷ்ணக்ஷேத்ரவாஸம் போலவே, விஷ்ணுபதமான வைகுந்த பதவி கிட்டவைக்கிறது. ஆயிரம் அச்வமேதங்கள் செய்வதாலும், நூறு வாஜபேய யாகங்கள்செய்வதாலும்,*

यत्फलं लभते नित्यं कृष्णक्षेत्रावलोकनात्।
अन्नदानेन पूर्णेन कन्यादानेन यत्फलम्॥ (१५)

*15. பூர்ணமாக அன்னதானம் செய்வதன் மூலமும், கன்யாதானம் செய்வதன் மூலமும் ஏற்படக்கூடிய பலன்கள் யாவையும் ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்ரத்தைப் பார்ப்பதாலேயே அடைகிறார்கள்.*

तत्फल लभते मर्त्यो कृष्णक्षेत्रस्य कीर्तनात्।
स्पर्शनात् लभते नित्यं दर्शनाल्लभतेऽव्ययम्॥ (१६)

*16. ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தின் நாம ஸங்கீர்த்தனத்தாலே பெறுகிறார்கள். அந்த க்ஷேத்திரத்தை அடைவதாலே பெறுகிறார்கள். கண்களால் காண்பதாலே பெறுகிறார்கள்.*

प्रयाणकाले सम्प्राप्ते कृष्णक्षेत्रस्य कीर्तनम्।
कृत्वा गच्छति यो मर्त्यो कार्यसिद्धिं लभते स वै॥ (१७)

*17. ப்ரயாண காலத்தில், க்ருஷ்ணக்ஷேத்திரத்தின் பெயரைச் சொல்லி நாமஸங்கீர்த்தனம் செய்கிறவர் நிச்சயமாகத் தங்களது கார்யஸித்தியைப் பெறுகிறார்கள்.*

पञ्चाशत्कोटिविस्तीर्णे भूतले त्वब्धिमेखले।
कृष्णक्षेत्रसमं क्षेत्रं परमन्यन्न विद्यते॥ (१८)

*18. ஐம்பது கோடி (மைல்) விஸ்தீரணம் உள்ள ஸமுத்ரத்தை ஒட்டியாணம் போல் அணிந்துள்ள (எல்லையாகக் கொண்டுள்ள) இந்த பூதலத்தில் மிகவும் ச்ரேஷ்டமான ஸ்ரீ க்ருஷ்ணக்ஷேத்திரத்துக்கு ஸமமும், பெரிதுமான வேறொரு க்ஷேத்திரமில்லை.*

यो मोहात् मन्यते कृष्णक्षेत्रेण सदृशं पुनः।
क्षेत्रान्तरं च मूढात्मा स न किं ब्रह्महा भवेत्॥ (१९)

*19. குழப்பமுள்ள மனிதன் பிரமையினால் ஸ்ரீக்ருஷ்யக்ஷேத்திரத்துக்கு ஸமமாக வேறு க்ஷேத்திரங்களை எண்ணுவானேயானால் அவன் ப்ரம்மஹத்தி தோஷம் உள்ளவனாகிறான்.*

यथा न देवलोके च श्रीमन्नारायणात्परम्।
तथैव कृष्णक्षेत्राच्च परं क्षेत्रं न विद्यते॥ (२०)

*20. எவ்வாறுபரமபதத்தில் இருக்கும் ஸ்ரீமந்நாராயணனைக் காட்டிலும் உயர்ந்த தெய்வம் கிடையாதோ, அதேபோல இவ்வுலகில் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தைக் காட்டிலும் உயர்ந்தது கிடையாது.*

देवतान्तरसमं यस्तु मत्वा श्रीपतिमव्ययम्।
दुस्तरं घोरनरकं यथा प्राप्नोति दुर्मति॥ (२१)

*21. எப்படி துர்புத்தியுள்ள மனிதன் ஜகத்காரணபூதனமான ஸ்ரீமந்நாராயணனை இதர தெய்வங்களுக்கு ஸமமாக எண்ணுவானேயானால், அவன் மிகவும் கடக்க முடியாத கோரமான நரகத்தை அடைகிறான்.*

कृष्णक्षेत्रसमं तद्वत् अन्यक्षेत्रं तु यो वदेत्।
बहुघर्मतरं घोरं निरयं प्राप्नुयात्स वै॥ (२२) महा

22. அவ்வோறே தேவதாந்தர க்ஷேத்திரங்களுக்கு ஸமமானது ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்ரம் என்று சொல்லுகிறவன், ஸஹிக்க முடியாத ஹிம்ஸைகளைத் தருகிற நரத்தை அடைகிறான்.

यथा तु सर्वमन्त्राणां श्रीमदष्टाक्षरं परम्।
तथैव कृष्णक्षेत्रं च सर्वक्षेत्रपरं स्मृतम्॥ (२३)

23. எப்படி மந்த்ரங்கள் எல்லாவற்றிலும், ஸ்ரீமத் அஷ்டாக்ஷர மந்த்ரம் மிக உயர்ந்ததோ அதே போல க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிலும் மிக உயர்ந்தது ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரம்.

यथैव सर्वपुष्पाणां तुलसी कुसुम परम्।
सर्वेषामपि पुण्ड्राणा ऊर्ध्वपुण्ड्रो यथा परः॥ (२४)

24. எவ்வாறு புஷ்பங்கள் எல்லாவற்றிலும் துளஸீ புஷ்பம், தளம் உயர்ந்ததோ, அதே போல, நெற்றியில் தரிக்கும் காப்புகள் எல்லாவற்றிலும் ஊர்த்வபுண்ட்ரமாகிற திருமண் காப்பு உயர்ந்ததோ.

यथा सर्वव्रताना च परमेकादशीव्रतम्।
यथैव पापनाशेषु पर गोविन्दकीर्तनम्॥ (२५)

25. எவ்வாறு வ்ரதங்கள் எல்லாவற்றிலும் ஏகாதசி வ்ரதம் சிறந்ததோ, அதைப் போல பாபங்களைப் போக்குவதில் கோவிந்தநாம ஸங்கீர்த்தனம் சிறந்தது.

यथा सर्वशिलानां तु सालग्रामशिला परा।
सर्वेषामपि वेदाना सामवेदो यथा परः।
तथैव कृष्णक्षेत्रं च क्षेत्राणामुत्तमोत्तमम्॥ (२६)

26. சிலைகளில் (கற்களில்) எல்லாவற்றிலும் ஸாளக்ராம சிலை எவ்வாறு உயர்ந்ததோ, வேதங்கள் எல்லாவற்றிலும் ஸாமவேதம் எவ்வாறு உயர்ந்ததோ அதேபோல க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிலும் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரம் மிக மிக உயர்ந்ததாகும்.

अस्मिन्क्षेत्रवरे यस्तु क्षणमात्रं वसेत्सुधीः।
स सद्यश्छिन्नपापस्तु याति ब्रह्म सनातनम्॥ (२७)

27. இந்த மிகச் சிறந்த க்ஷேத்திரத்தில் ஒரு நொடிப் பொழுதாவது ஒருவன் வாஸம் செய்வானேயானால், அவன் சிறந்த ஜ்ஞானவானாகி, தான் செய்த பாபங்கள் எல்லாம் அழிந்து ப்ரம்ஹஸாயுஜ்ய பதவியை அடைகிறான்.

कृष्णक्षेत्रं समालोक्य चैते यान्ति पर पदम्।
अग्निष्ठोमादि कर्माणि य : करोति नरोत्तमः।। (२८)

28. கீழே குறிக்கப் பெற்றவர்கள் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தை தரிசனம் செய்து பரமபதம் அடைகிறார்கள். எவனொருவன் இந்த க்ருஷ்ணக்ஷேத்திரத்தில் வந்து அக்நிஷ்டோமம் முதலான யாகங்களைச் செய்கிறானோ அவன் மிக அளவுகடந்த புண்ணியத்தை அடைகிறான்.

एतत्क्षेत्रं समागत्य तस्य पुण्यमनन्तकम्।

இந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தை அடைந்தவனுக்கு அளவு கடந்த புண்யம் கிடைக்கிறது.

विप्राय विष्णुभक्ताय कृष्णक्षेत्रनिवासिने।
अल्पामपि मही दद्यात् स नरो राज्यमाप्नुयात्।। (२९)

29. இந்த ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தை அடைந்து, இதில் வாஸம் செய்கிற விஷ்ணுபக்தனான பிராமணனுக்கு ஒரு சிறிதளவு பூமிதானம் செய்தாலும், தானம் செய்கிறவன் ஒரு ராஜ்யாதிபதியாகிறான்.

कृष्णक्षेत्रनिवासाय वैष्णवाय कुटुम्बिने।
प्रतिष्ठां कुरुते यस्तु स वै मुकतो भवेद्ध्रुवम्।। (३०)

30. ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் குடும்பத்தோடு வஸிக்கிற ஒரு ப்ராமணனுக்கு எவன் ஒரு இடம் தருகிறானோ அவன் மோக்ஷம் தவறாமல் அடைகிறான்.

यस्त्वन्नदानं कुरुते क्षेत्रेऽस्मिन् क्षुधिताय वै।
अन्नसख्यानि वर्षाणि स्वर्गलोके महीयते।। (३१)

*31.* இந்த க்ஷேத்திரத்தில் பசியுடன் இருக்கிற மனிதனுக்கு அன்னமளிப்பவன், மேலும் அவனை எப்பொழுதும் பசியாமல் இருக்கச் செய்கிறவன், எவ்வளவு அன்னதானம் செய்கிறானோ, அத்தனை ஆண்டுகள் ஸ்வர்கலோகத்தில் வஸிக்கிறான்.

गोविन्दराजसेवार्थमागताय द्विजात्मने।
यो ददाति च भिक्षां वा सोऽश्वमेधफलं लभेत्॥ (३२)

*32.* கோவிந்தராஜப் பெருமாளை ஸேவிப்பதற்காக வரும் அந்தணர்களுக்கு பிக்ஷையளிப்பவன் அச்வமேதயாகம் செய்த பலனைப் பெறுகிறான்.

चरमाश्रमिणे कृष्णक्षेत्रे भिक्षां ददाति यः।
तस्य कैवल्यसरणिः करस्था नात्र संशयः॥ (३३)

*33.* துரீயாச்ரமியான ஒரு ஸன்யாஸிக்கு ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தில் பிக்ஷையளிப்பவன், மோக்ஷஸாம்ராஜ்யத்தை கையிலேயே வைத்திருப்பவனாகிறான். இதில் ஸந்தேஹமில்லை.

गोविन्दराजसेवार्थमागताय द्विजात्मने।
यो ददाति हि पानीयं स वै पुण्यकृतां वरः॥ (३४)

*34.* கோவிந்தராஜனை ஸேவிப்பதற்காக வருகிற பிராமணனுக்கு தாகசாந்தி செய்து வைப்பவன் புண்யாத்மாக்களில் சிறந்தவனாகிறான்.

गोविन्दराजसेवार्थमागताय नराय वै।
वासं दद्याद्गृहे प्रीत्या प्रतिष्ठां शाश्वतीं लभेत्॥ (३५)

*35.* கோவிந்தராஜனை ஸேவிப்பதற்காக வருகிற மனிதனுக்குத் தன் வீட்டில் அன்புடன் உபசரிப்பவனும், இடம் தருபவனும் நிலையான உயர்ந்த பதவியை அடைகிறான்.

आतपक्लिन्नदेहाय पादुकां छत्रसंयुताम्।
यो ददाति नरो भक्त्या कृष्णक्षेत्रे द्विजातये॥ (३६)

*36. ஸ்ரீ க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வெயிலால் ச்ரமமடைந்த பிராமணனுக்கு காலணிகளையும், குடையையும் பக்தியுடன் அளிக்கும் மனிதன் -*

तस्य पापेन सन्तापो न कदाचिद्भवेद्ध्रुवम्।

*தான் செய்த பாபங்களால் ஏற்படும் தொல்லைகளை ஒரு போதும் அடைவதில்லையென்பது நிச்சயம்.*

गोविन्दराजसेवार्थं प्रथमं यस्तु गच्छति।
स नरो नियमागारः कामक्रोधविवर्जितः॥ (३७)

*37. கோவிந்தராஜனை ஸேவிப்பதற்காக முதன் முதலாகச் செல்லும் மனிதன் ஆஹாரநியமம் உடையவனாயும், காமக்ரோதம் முதலான துர்க்குணங்களற்றவனாயும்,*

जितेन्द्रियो निर्विकारो कृष्णक्षेत्रमवाप्य च।
तत्रैव वपनं कृत्वा कृष्णक्षेत्रे यथाविधि॥ (३८)

*38. இந்திரியங்களை ஜயித்தவனாயும், நோய், நொடி அற்றவனாயும் க்ருஷ்ணக்ஷேத்திரமடைந்து, அங்கேயே சாஸ்த்ர விதிப்படி ஸர்வாங்கவபனம் (உடல்மயிர்களைதல்) முதலானவற்றை செய்து,*

पुण्डरीकसरस्तीर्थे पवित्रे पापनाशने।
अवगाह्य विशुद्धात्मा परिधायान्यवाससी॥ (३९)

*39. பவித்ரமானதும், பாபங்களைப் போக்கக் கூடியதுமான புண்டரீக புஷ்கரிணியில் சுத்தமான ஹ்ருதயத்துடன் நீராடி, வேறு உலர்ந்த வஸ்த்ரம் உடுத்தி,*

ऊर्ध्वपुण्ड्री यथाशास्त्रं ध्यात्वा गोविन्दनायकम्।
दत्वा चाक्षयतृप्त्यर्थं पितृणां च तिलोदकम्॥ (४०)

*40. திருமண் காப்புகளை சாஸ்த்ர முறைப்படியும், தரிக்க வேண்டிய முறைப்படியும் தரித்து கோவிந்தராஜனை தியானம் செய்து பித்ருக்களின் அழிவற்ற த்ருப்திக்காக தர்ப்பணம் செய்து,*

क्षेत्रपिण्डादिकं कृत्वा भक्त्या श्रद्धासमन्वितम्।
पक्वान्नैस्तण्डुलैः स्वर्णैः श्राद्धं कृत्वा प्रसन्नधीः॥ (४१)

41. பக்தி ச்ரத்தையுடன் 'க்ஷேத்ர பிண்டம் அளித்தல்' (க்ஷேத்ரச்ராத்தம் செய்தல்) முதலானவற்றைச் செய்து, தெளிந்த அறிவுடன் நன்கு பக்குவம் செய்யப்பட்ட அன்னத்தினாலும் அரிசியாலும், ஸ்வர்ணங்களாலும், ச்ராத்தம் செய்து,

गोभूतिलहिरण्यादिदश दानानि वा पुनः।
तोषयित्वा द्विजश्रेष्ठान् कृष्णक्षेत्रनिवासिनः॥ (४२)

42. பசுதானம், பூதானம், திலதானம், ஹிரண்யதானம் முதலான பத்து வித தானங்களால் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் வசிக்கிற ப்ராமணர்களைச் ஸந்தோஷமடையச் செய்து,

विशेषतो विष्णुभक्तान् तोषयित्वा पुनः पुनः।
दरिद्रश्चेत् यथाशक्ति वित्तं दद्यात् द्विजात्मने॥ (४३)

43. சிறப்பாக, திரும்பத் திரும்ப விஷ்ணுபக்தர்களை த்ருப்தியடையச் செய்து, தரித்ரனாக (ஏழை) இருக்கும் பக்ஷத்தில் சக்திக்கு ஏற்ற வகையில் பிராமணருக்குப் பொருள் (பணம்)கொடுப்பானேயாகில் அப்படிப்பட்ட முறைப்படி வரக்கூடிய பலனைப் பெறுவதோடு, சீக்கிரமே ஸ்வர்க்கத்திலும் மஹத்வமடைகிறான்.

यस्तु गोविन्दराजाय वित्तान्याभरणानि च।
गोभूधान्यहिरण्यादीन् गजाश्वपशुसञ्चयान्॥ (४४)

44. ஸ்ரீகோவிந்தராஜப் பெருமானுக்குச் செல்வத்தையும், ஆபரணங்களையும், பசு, பூமி, தான்யம், முதலியவற்றையும் யானை, குதிரை, பசுக்கள் முதலானவற்றையும்

आरामोद्यानपुष्पाढ्यवनानि विविधैर्द्रुमैः।
मधुकाम्रादिभिर्दद्यात् कल्पयित्वा च सन्निधौ॥ (४५)

45. இளைப்பாற்றுவதற்காக ஸபுஷ்பங்கள் நிறைந்த உத்யான வனங்களைப் பலவித செடி, கொடி, மரங்களுடனும், இனிப்பான 'மா' முதலான பழங்களுடனும் கோவிந்தராஜன் ஸந்நிதியில் தகுந்தபடி கொண்டுவந்து,

दीपार्थं उत्सवार्थं च तस्य जन्म न विद्यते।।

தீபத்துக்காகவும், உத்ஸவத்துக்காகவும், கொடுப்பானேயாகில் அவனுக்குப் பிறப்பு என்பதே ஏற்படாது.

यश्शून्यपाणिर्गोविन्दराजं नत्वा तु गच्छति।
स नरो नाप्नुयात् किञ्चित् फलं कृत्वापि दु.खित.।। (४६)

46. வெறும் கையுடன் கோவிந்தராஜனை வணங்கிச் செல்லும் மனிதன் தொண்டு செய்தும் வருத்தமுற்றவனாய் பலனை அடைவதில்லை.

नत्वा दत्वा धनं कृत्वा प्रदक्षिणचतुष्टयम्।
स्तुत्वा स्थित्वा हरेरग्रे श्रीमदष्टाक्षरं मनुम्।। (४७)

47. ஸேவித்தும் (வணங்கியும்), செல்வம் முதலானவற்றைக் கொடுத்தும், நான்கு முறை ப்ரதக்ஷிணம் செய்து, ஸ்தோத்ரம் செய்து, ஸ்ரீமதஷ்டாக்ஷர மந்த்ரத்தை ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் எதிரில் அமர்ந்து ஜபித்து,

जप्त्वा चाष्टोत्तरशतं स्वगुरोर्ध्यानपूर्वकम्।
गोविन्दराजपादाग्रसक्ताम्बु तुलसीयुतम्।। (४८)

48. தனது ஆசார்யனை த்யானித்து நூற்றெட்டு முறை ஜபித்தும், ஸ்ரீகோவிந்தராஜனின் பாதாரவிந்தத்தில் சேர்க்கப்பட்ட தீர்த்தத்தையும்,

पीत्वा प्रसन्नहृदयः कृत्वा जागरण पुनः।
कृत्वा क्षेत्रोपवासं च निष्कामस्त्वेकवासरम्।। (४९)

*58. அவ்வாறே மகரஸங்கராந்தியில் (தை மாதப் பிறப்பு நாளில்) க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வஸிக்கிற விஷ்ணு பக்தர்களுக்கு நிறைய தானங்களைச் செய்கிற மனிதன்,*

स नरो राज्यमाप्नोति नाऽत्र कार्या विचारणा ॥

*ராஜ்யத்தைப் பெறுகிறான். இதில் ஸந்தேஹத்துக்கு இடமில்லை.*

धनाढ्येन दरिद्रेण यद्दान कृतमत्र वै ।
तयोस्समफल कृष्णक्षेत्रे वैभवकारणात् ॥ (५६)

*59. பணக்காரராலும், ஏழைகளாலும், இங்கு செய்யப்படும் தானங்கள், க்ருஷ்ணக்ஷேத்திரத்தின் மஹிமையால் இருவருக்கும் ஸமமான நிறைந்த பலனைக் கொடுக்கிறது.*

स्थलान्तरे धनाढ्यस्य महादानेन यत्फलम् ।
कृष्णक्षेत्रेऽल्पदानेन दरिद्रस्यापि तत्फलम् ॥ (६०)

*60. இதர க்ஷேத்திரங்களில் செய்யப்படுகிற பெரிய தானங்களால் பணக்காரனுக்கு எவ்வளவு பலன் கிடைக்கிறதோ, க்ருஷ்ணக்ஷேத்திரத்தில் மிகக் குறைந்த தானம் செய்கிற ஏழைக்கும் அவ்வளவு பலன் கிடைக்கிறது.*

कृष्णक्षेत्रे धनाढ्यस्य सर्वदानेषु-अयं विधिः ॥

*க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் தனிகர்களால் செய்யப்படுகிற அனைத்து தானங்களுக்கும் இதுவே நியதியாகும்.*

यश्चैत्रपूर्णिमाया तुं रसायनफलोदकम् ।
कृष्णक्षेत्रनिवासिभ्यस्तस्य पुण्यमनन्तकम् ॥ (६१)

*61. ருசிமிக்க பழச்சாறு கலந்த நீரை க்ருஷ்ணக்ஷேத்திரத்தில் வஸிப்பவர்களுக்கு சித்திரை மாத பௌர்ணமி நன்னாளில் பருகக் கொடுக்கும் மனிதனுக்கு அளவிட முடியாத புண்ணியங்கள் கிடைக்கின்றன.*

चातुर्मास्यव्रतं कृत्वा कृष्णक्षेत्रे तु यो नरः।
पुण्यभारं तु तस्याहं न चेदद्भुतकर्मणः। वेदम्यद्भुत
शयनोत्थानवैकुण्ठपरिवर्तनसञ्ज्ञिकाम्॥ (६२)

62. க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வசிக்கும் நான்கு மாதகாலம் பெறும் பயன்களின் சுமையைத் தான் அறிய இயலாதவனாகி சாதுர்மாஸ்ய வ்ரதத்தை அனுஷ்டித்து, உறங்கச் செல்லும் போதும், விழிக்கும் போதும், வைகுண்ட பதியான ஸ்ரீ கோவிந்தராஜனின் நாமங்களைச் சொல்லி வருவானேயாகில் அவனுக்கு எல்லையற்ற புண்ணியங்கள் கிடைக்கின்றன.

மற்றொரு பொருள்

வருஷந்தோறும் ஆனி சுக்ல ஏகாதசி சயனம், ஆவணி சுக்ல ஏகாதசி பரிவர்த்தனம், ஐப்பசி சுக்ல ஏகாதசி உத்தானமும், மார்கழி சுக்ல ஏகாதசி வைகுண்ட ஏகாதசி (பீஷ்மைகாதசி) என்ற நான்கு பெயர்களைக் கொண்ட ஏகாதசிகளில் (நான்கு மாதங்களிலும் அந்த நாட்களிலும் சிறப்பாக)

उपोष्यैकादशीमस्मिन् कृष्णक्षेत्रे दृढव्रतः।
रात्रौ जागरणं कृत्वा पूजयित्वा जगत्पतिम्॥ (६३)

63. இந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் உறுதியான வ்ரதத்துடன் உபவாஸமிருந்து. இரவில் கண் விழித்து, ஜகத் ரக்ஷகனை (ஸ்ரீமஹாவிஷ்ணுவை) ஆராதித்து

गोविन्दराजं विविधैरुपचारैश्च भक्तिभिः।

ஸ்ரீகோவிந்தராஜனை அநேகவித உபசாரங்களாலும், பக்தியுடனும் ஆராதித்து,

प्रभातसमये प्राप्ते द्वादश्यामरुणोदये।
पुण्डरीकजले स्नात्वा धृत्वाचम्योर्ध्वपुण्ड्रकान्॥ (६४)

64. த்வாதசியன்று விடியற்காலை ஆனவுடன் அருணோதய காலத்தில் புண்டரீக தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, ஆசமனம் செய்து திருமண் காப்புகளை அணிந்து,

जप्त्वा चाष्टाक्षरं मन्त्रं सन्तर्प्य विधिवत्पितॄन्।
सवत्सां गामलङ्कृत्य बहुक्षीरा द्विजातये॥ (६५)

65. அஷ்டாக்ஷரமந்த்ரத்தை ஜபித்து, சாஸ்த்ரப்படி பித்ருக்களுக்குத் தர்ப்பணாதிகளைச் செய்து, மிகுந்த பாலைத் தரும், கன்றுடன் கூடின பசுவை அலங்கரித்து,

कृष्णक्षेत्रे निवसते दत्वा श्रद्धासमन्वितः।
अर्चयित्वा यथाशास्त्रं गोविन्देशं श्रियःपतिम्॥ (६६)

66. க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வஸிக்கிற பிராமணர்களுக்கு ச்ரத்தையுடன் கொடுத்து, சாஸ்த்ர விதிப்படி ஶ்ரிய : பதியான கோவிந்தராஜனை அர்ச்சனை செய்து,

तत्पादसिक्तसलिलं तुलसीदलमिश्रितम्।
पीत्वा भागवतश्रेष्ठान् भोजयित्वा यथारुचि॥ (६७)

67. துளஸீ தளத்துடன் கூடின. அவனது பாதங்களில் சேர்க்கப்பட்ட தீர்த்தத்தை பருகி, பாகவத ச்ரேஷ்டர்களை அவர்களுடைய விருப்பத்துக்கு தகுந்தவாறு உண்ண வைத்து,

स्वयं भुङ्क्तेऽथ यो मर्त्यः सुप्रीतश्चाऽभवद्धरिः।
स हि वैकुण्ठसारूप्यमनायासेन गच्छति॥ (६८)

68. எவன் அதன் பிறகு தான் உணவை உட்கொள்கிறானோ அவன் வைகுந்த பதத்தை ச்ரமமில்லாமல் அடைகிறான். பகவானோடு ஒத்த தோற்றமும் உருவமும் உள்ளவனாகிறான்.

नभस्य मासे दर्शे वा कृष्णाष्टम्यां तिथौ तु वा।
अस्मत्कुलीनो ना कश्चित् कृष्णक्षेत्रमुपेत्य च॥ (६९)

69. ஆவணி மாதத்தில் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமி அல்லது அமாவாசையில் நம் குலத்துதித்த ஒரு மனிதன் க்ருஷ்ண க்ஷேத்திரத்தை அடைந்து,

पुण्डरीकसरस्तीर्थे चावगाह्याघनाशने।
अर्चयित्वा तु गोविन्दराजं भक्तिपुरस्सरम्॥ (७०)

70. பாபங்களை நாசம் செய்கிற புண்டரீக தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தும், பக்தியுடன் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமானை அர்ச்சனை செய்தும்,

चक्राङ्कितभुजान्विप्रान्शुद्धान्नैश्च घृतप्लुतैः।
माधुर्यपूर्णैस्सकलैश्शर्करापूपसंयुतैः॥ (७१)

71. சங்க சக்ராதிகளால் அடையாளமிடப்பட்ட (பஞ்சஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்ட) ஸ்ரீ வைஷ்ணவர்களை, உருக்கிய நெய் கலந்த சுத்தான்னங்களாலும், இனிப்பு நிறைந்தவையான சர்க்கரைப் பொஙகல், பொங்கல், புளியோதரை, தயிர் சாதம், கதம்பம், பால்சோறு (க்ஷீரான்னம்) (ரவை கலந்த) சீரன்னம், கேஸரி போன்ற உணவுகளோடும், பழங்களோடும், சுவை மிகுந்த அப்பம் முதலிய பக்ஷணங்களோடும்,

सव्यञ्जनैस्सूपजष्टैः भोजयित्वा यथाविधि।
दत्वा वित्तानुसारेण दक्षिणां कनकादिना॥ (७२)

72. வ்யஞ்ஜனங்கள், பருப்புகள், கலந்த ஆஹார வகைகளுடனும் முறைப்படி போஜனம் செய்வித்து, தன்னுடைய சக்திக்கு ஏற்ற வகையில் ஸ்வர்ணம் முதலான தக்ஷிணைகள் கொடுத்தும்,

तुलसीदलसंमिश्रं पिण्डदानं तिलोदकम्।
यदि कुर्यादय तृप्ता भवेमेति च काङ्क्षया॥ (७३)

73. துளஸீ தளத்துடன் கலந்த பிண்டதானம், எள் கலந்த நீரையும் விட்டு விருப்பமுடன் தர்ப்பணம் செய்வானேயாகில் நாம் திருப்தி அடைகிறோம் என்று ஆசையுடன்

स्वकुलीनांश्च तान् सर्वान् संवीक्ष्य च नभोऽन्तरे।
नृत्यन्ति पितरस्तस्मात् तस्मिन्नेव शुभेऽहनि॥ (७४)

74. பித்ருதேவதைகள் தன் வம்சத்தினர்கள் எல்லோரையும பார்த்து ஆகாசத்தில் மகிழ்ச்சியினால் கூத்தாடுகின்றனர். ஆகையால், அந்த நன்மை தரும் சுபமான ஆவணி அமாவாஸ்யை அல்லது அஷ்டமியாகிற தினத்திலேயே,

पितृनुद्दिश्य यः श्राद्धं करोति श्रद्धयान्वितः।
तृप्ताश्च पितरः कुर्युः तस्याशीर्वादमीदृशम्॥ (७५)

75. எவன் பித்ருக்களை உத்தேசித்து ச்ரத்தையுடன் சிராரத்தம செய்கிறானோ, இவன் செய்த ச்ரார்த்தத்தால் த்ருப்தியடைந்த பித்ருக்கள் அவனை இவ்வாறு ஆசீர்வாதம் செய்கின்றனர்.

धनं धान्यं च दीर्घायुः पुत्रपौत्रपरम्पराम्।
नीरोगदृढगात्रं च लभस्वेति च जैमिने॥ (७६)

76. ஜைமினி முனிவரே ! செல்வம், தானியம், நீண்ட ஆயுள், புத்ர பௌத்ராதிகள், அரோக த்ருடகாத்ரம் இவை அனைத்தையும் அடைவாயாக என்று ஆசி கூறி அருளுகிறார்கள்.

पुरा यज्ञेश्वरो नाम कश्चित् विप्रशिखामणिः।
विष्णुभकतस्सदाचारस्तपस्वाध्यायने परः॥ (७७)

77. ஜைமினி (முனிவர்) முன்னொரு காலத்தில் யஜ்ஞேஸ்வரன் என்ற ஒரு பிராமணோத்தமன் இருந்தான். அவன் மஹாவிஷ்ணுவிடத்தில் பக்தியுள்ளவனாகவும், ஆசார சீலனாகவும், தபஸ் செய்வதில் நாட்டமுள்ளவனாகவும், வேதமறிந்தவனாகவும்

सुशीलस्सुव्रतो दान्तः पुराणागमशास्त्रवित्।
श्रुत्यन्तपारगः कामक्रोधलोभविवर्जितः॥ (७८)

78. நல்ல ஒழுக்கமுள்ளவனாகவும், வ்ரதஙகளை அனுஷ்டிப்பவனாகவும், அடக்கமுள்ளவனாகவும், புரானங்களையும், ஆகம சாஸ்திரங்களையும் அறிந்தவனாயும, வேத வேதாந்தங்களை கற்றறிந்தவனாயும், காமம், க்ரோதம், லாபம் முதலியவை அற்றவனாயும்

सर्वभूतदयायुक्तः मुमुक्षुः परमार्थवित्॥

எலலா பிராணிகளிடததிலும, கருணையுள்ளவனாயும, மோக்ஷததை விரும்புகிறவனாயும, மிகவும் நலலறிவாளியாயும இருந்தான்.

एतस्य मातापितरौ वृद्धौ नित्यान्धका वुभौ।
जराजर्जरसर्वाङ्गौ गमनागमनाक्षमौ ॥ (७९)

79. இவனுடைய தாய தந்தையாகள் இருவரும், மிகவும் வயது முதிர்ந்தவர்களாயும், பார்வையற்றவர்களாயும், மூப்பினால தளர்ச்சியுற்ற அவவயவங்களை உடையவர்களாயும், நடமாட சக்தியற்றவர்களாயும் இருந்தனர்.

मातापित्रोश्च शुश्रूषां विना मौक्षिक साधनम्।
कि वाऽन्यदस्ति लोकेऽस्मिन् इति मत्वा विशेषत. ॥ (८०)

80. இந்த உலகத்தில தாய் தந்தையருக்குச் செய்யும் பணிவிடையைக் காட்டிலும் மோக்ஷத்துக்கு வழிகாட்டியாக வேறு ஏதாவத இருக்கிறதா? இல்லவே இலலை என்று எண்ணி,

मातापित्रोस्स शुश्रूषा प्रत्यह भकि तपूर्वकम्।
अक रोदप्रमत्तस्तु श्रीपतौ योजयन्मन. ॥ (८१)

81. அந்த பிராமணன் தினந்தோறும மிகவும் பக்தி ஶ்ரத்தையுடன் ஸ்ரீபதியினிடத்தில் மனதை செலுத்தி தாய் தந்தையரிடம் ஈடுபாட்டுடன் தொண்டு செய்து வந்தான்.

एव काले व्यतीते तु तत्पिता च ममार ह॥

இவ்வாறு காலம் செல்கையில் அவனுடைய தநதை மரணமடைந்தார்.

सुशीला तस्य जननी तस्य भार्या च निश्चला।
साध्वी च पतिना सार्धं अनुमर्तुमियेष सा॥ (८२)

82. நல்லொழுக்கமுள்ளவளும், அவருடைய ஸஹதர்மிணியும, அந்த பிராமண ச்ரேஷ்டனின் தாயுமான அந்த வயது முதிர்ந்த மாதும் ஸாத்விகரான தன் பர்த்தாவைப் பின்பற்றி அவருடன் அநுமரணம் செய்து சலனமற்றவளாக விரும்பினாள்.

जननीपितरौ सोऽपि संस्कृत्वाच यथाविधि ।
यथा सूत्रानुसारेण सन्तर्प्योत्तरकर्म च ।। (८३)

83. அந்த பிராமணனும் தன் தாய் தந்தையர்கள் இருவருக்கும் சேர்த்து சாஸ்த்ர விதிப்படி ஸம்ஸ்காரம் முதலியவற்றைச் செய்து தனக்குரிய தர்ம ஸூத்திரங்களில் விதித்தபடி உத்தரக்ரியைகளையும். தர்ப்பணம் முதலானவற்றையும் செய்து,

तयोरस्थीनि चादाय घटे न्यस्य द्विजोत्तमः ।
निक्षेप्तुं जाह्नवीतीरे प्रययौ विप्रपुङ्गवः ।। (८४)

84. அவர்களது அஸ்தியை ஒரு குடத்தில் வைத்து அதனை எடுத்துக் கொண்டு கங்கையின் கரையில் வைக்க புறப்பட்டுச் சென்றான்.

एकभुकतश्छत्रहीनः पादुकारहितो व्रती ।
परान्नभोजनं त्यक्त्वा गुरुमातृपितृप्रियः ।। (८५)

85. ஆசார்யனிடத்தும், தாய் தந்தையரிடத்திலும் பிரியமுள்ளவனான அந்த பிராமணன் ஒரு வேளையே ஆஹாரம் உண்டும், குடை, பாதரக்ஷை இல்லாமலும், வெளி ஆஹாராதிகளைத் தவிர்த்தும் வ்ரதமனுஷ்டித்தும்,

एवं तु गच्छतस्तस्य कतिचिद्वासरा गताः ।।

இவ்வாறு சென்று கொண்டிருக்கும் போது சில தினங்கள் கழிந்தன.

ततः प्रभातसमये वृक्षहीनं सकण्टकम् ।
विजन तोयरहितं घोर दुष्टमृगाकुलम् ।। (८६)

86. அதன் பிறகு ஒரு நாள் விடியற்காலை நேரத்தில் மரங்கள் இல்லாததும், முட்கள் நிரம்பியதும், ஜன சந்தடியற்றதும், தண்ணீர் இல்லாததும், பயஙகரமானதும், துஷ்டமிருகஙகள் நிரம்பியதும்,

अज्ञात्वा पदवीमन्यमार्गमज्ञानमोहितः।
प्रविश्य गच्छतस्तस्य मधयाह्नमभवत्पुनः ।। (८७)

87. நேரான வழியை அறியாமல், வேறான வழியில் அறியாமையால் குழம்பி (காட்டில்) பிரவேசித்துச் சென்று கொண்டிருக்கும் போது நடுப்பகல் வேளை ஆகிவிட்டது.

मध्याह्नखरचण्डांशुकिरणग्लपिताननः।
तप्तभूरेणुतप्ताङ्घ्रियुगलो द्विजशेखरः।। (८८)

88. நடுப்பகல் வேளையின் மிகக் கொடூரமானதும், அதிகமான வெப்பம் உள்ளதுமான ஸூர்ய கிரணங்களால் களைத்துப் போன முகத்தை உடையவனும், வெப்பமடைந்த பூமியின் மண்ணினால் கொதிப்படைந்துள்ள இரண்டு கால்களையுமுடையவனுமான பிராமணோத்தமன்,

यज्ञेश्वरो विनिश्वस्य शुष्कदन्ताधरो भृशम्।
अतीव दुर्दशां प्राप्तः क्षुत्पिपासादिपीडितः ।।(८९)

89. யஜ்ஞேஶ்வரன் பெருமூச்சுவிட்டு (சந்று ஆஶ்வாஸம் செய்து) நாக்கும், உதடும் உலர்ந்து, பசி, தாகம் மேலிட்டு மிகுந்த களைப்படைந்தான். மிகவும் மோசமான நிலையை அடைந்தான்.

गन्तुमप्यक्षमो दूर समन्तादवलोकयन्।
एक वृक्ष तडाकं वा ग्रामं वा नगरं तु वा।। (९०) ग्रं

90. சிறிது தூரம் செல்வதற்குக் கூட சக்தியற்றவனாகி, சமீபத்தில் எங்காவது ஒரு மரமோ, குளமோ, கிராமமோ, நகரமோ தென்படுகிறதாவென தேடிப் பார்த்துக் கொண்டு,

अध्वश्रान्तिहर विप्रो नापश्यत् दृष्टिगोचरम्।
नभोमध्यगतैश्चण्डकिरणैर्गात्रशोषणैः ।। (९१)

91. கண்ணுக்கு எட்டியவரை இளைப்பாற்றக் கூடிய எதுவும் புலப்படவில்லை. உடலை வாட்டும் ஆகாயத்தின் நடுவில் இருக்கிற ஸூர்ய கிரணஙகளாலல் உடல வற்றியது.

क्षुत्पिपासा च बहुलाऽभवदास्यं च निर्जलम्।
असहायोऽभव चेति द्विजश्चाचिन्तयन्मुहुः॥ (९२)

92. பசியும, தாகமும் அதிகமாயுள்ளன. தண்ணீரில்லாமல் வாயும உலர்ந்து விட்டது. உதவி செய்பவர் யாருமற்றவனாக ஆகி விட்டேன் என்பதாக அடிக்கடி எண்ணினான்.

कथञ्चित् कञ्चिदध्वानं शनकै रगमत्पुनः।
अल्पच्छाय ततोऽपश्यदारादेक मनोक हम्॥ (९३)

93. சிரமப்பட்டு மிகவும் மெதுவாக ஒரு வழியை அடைந்தான். அங்கு, அருகில் சிறிது நிழல் தருகிற ஒரு மரத்தைக் கண்டான்.

तद्वृक्षमूलमासाद्य निश्वस्य च मुहुर्मुहुः।
अतिष्ठदस्य मूले तु दूराध्वश्रान्तिविह्वलः॥ (९४)

94. வெகு தூரத்திலிருந்து வழி நடந்த களைப்பால் ஓய்ந்து போன அந்த பிராமணன் அந்த மரத்தின் அடியை அடைந்து அடிக்கடி பெரு மூச்சு விட்டுக் கொண்டு அந்த மரத்தின் கீழே (நின்றான்) இருந்தான்.

निर्जल विपिन घोरं मार्गं दुष्टमृगाकुलम्।
अज्ञानात्प्राप्तवानस्मि क्षुत्पिपासापनुत्तये॥ (९५)

95. 'தண்ணீர் இல்லாததும், மிக பயஙகரமான வழியை உடையதும், துஷ்ட மிருகஙகள் சஞ்சரிக்கக்கூடியதுமான காட்டை, பசி, தாகம முதலியவற்றைப் போக்கிக் கொள்வதற்காக' அறியாமல் அலைந்திருக்கிறேன்.

कारण नैव पश्यामि मुहुर्मोहो भवत्यहो।
प्राणोत्क्रमणवेला च जाताऽस्माक भयावहाम्॥ (९६)

96. அய்யய்யோ அடிக்கடி மயக்கம் ஏற்படுகிறது. என்னவென்று தெரியவில்லை. எனக்கு மிகவும பயத்தைத் தரக்கூடிய மரண காலம் ஏற்பட்டு விட்டது.

अहो कष्टदशास्माकमभवत्प्राणसङ्कटम्।
मातापित्रोश्च कार्यार्थे प्रयातस्य ममादरात्॥ (९७)

97. *மிகவும் ச்ரத்தையோடு தாய் தந்தையரின் காரியத்துக்காக புறப்பட்டிருக்கிற எனக்கு இப்போது மிகவும் ப்ராண ஸங்கடமான கஷ்ட தசை ஏற்பட்டிருக்கிறது*

आरब्धकार्यसिद्धिश्च नाभवत्पापिनो मम।
आरब्धस्यान्तगमन जात पुण्यकृता खलु॥ (९८)

98. *பாபியான எனக்கு ஆரம்பித்த காரியத்துக்கு ஒரு நல்ல முடிவு (கைக்கூடல) ஏற்படவில்லை. ஏனெனில் புண்ணியம செய்தவர்களுக்குத்தான் தொடங்கப்பட்ட காரியங்கள் நல்ல முடிவை அளிக்கின்றன*

इत्येव चिन्तयन्दीनः सोऽनन्यगतिको द्विज।

*மிகவும நலிவடைந்து, வேறு கதியற்றவனாக அந்த பிராமணன் இவ்வாறாக எண்ணிக் கொணடு,*

आत्मनो रक्षितार च मेने कार्यफलप्रदम्।
ईश्वर सर्वलोकैकनायक भक्तवत्सलम्॥ (९९)

99. *பக்தவத்ஸலனாகவும, அகில உலகத்துக்கும் நாயகனாவகும் செய்யும் காரியங்களுக்கு பலனைத் தரக்கூடியவனாகவும, தன்னை ரக்ஷிப்பவனுமான பகவானை மனத்தால் த்யானித்தான*

यो वेदावलिकास्त्राता स मा रक्षतु केशव। ०k°
स मां रक्षतु गोविन्दो द्रोपदीप्राणधारक.॥ (१००)

100 *எவன் வேதங்களால் போறறபபடுகிறவனாயும வேதங்களை ரக்ஷிக்கிறவனாயும இருககிறானோ அந்த கேசவன என்னைக் காப்பாற்றடடும் திரௌபதியின் மானங்காத்த அந்த கோவிந்தன் என்னை ரக்ஷிககடடும.*

यो रक्षति भयत्रस्तं जयन्तं काकरूपिणम्।
स मां पायादपायेभ्यःशरणागतरक्षकः।। (१०१)

*101. எந்த பகவான் காக்கையின் உருவம் கொண்ட இந்திரன் மகன் ஜயந்தன் என்பவனை, பயமுற்று சரணடைந்தானை ரக்ஷித்தாரோ, ஶரணாகத ரக்ஷகனான அந்த பகவான் மரணத்தினின்றும் என்னைக் காப்பாற்றட்டும்.*

यो वै सर्वगतो विष्णुः अनाथाभयदः प्रभुः।
सर्वभूतदयायुक्तस्स भूयान्मम रक्षिता।। (१०२)

*102. எந்த பகவான் எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவனாயும் காப்பாரற்றவர்களுக்கு அபயமளிப்பவனாயும் , ப்ரபுவாகவும் பிராணிகளிடத்தும கருணை உள்ளவனாயும் இருக்கிறானோ, அந்த மஹாவிஷ்ணு என்னையும் ரக்ஷிப்பவனாக இருக்கட்டும்.*

कुक्षौ निक्षिप्य यो लोक जले रक्षति निर्भरः।
रक्षितुस्तस्य को भारो ममैकस्य हि रक्षणे।। (१०३)

*103. எந்த பகவான் இந்த உவகத்தை வயிற்றில் தாஙகி சுமையற்றவனாகக் கடலில் இருந்து கொண்டு காப்பாற்றுகிறாரோ, அப்படிப்பட்ட காக்கும் பகவானுக்கு என் ஒருவனை ரக்ஷிப்பதில் என்ன ச்ரமம் இருக்கப் போகிறது.*

सर्वदा दासवर्गास्तु रक्षितु स्वामिनो विधिः।
तस्माद्दासस्य मे गोप्ता स एव मधुसूदन.।। (१०४)

*104. எப்போதும் சரணாகதர்களான பக்தர்களை காப்பது யஜமானனாகிய பகவானின் கடமை. ஆகையால் அடிமையாகிய அவனை அடைந்த என்னையும் அந்த மதுஸூதனனே ரக்ஷிப்பவனாக ஆகிறான்.*

इत्युक्त्वा शरण प्राप विप्रो वैकुण्ठनायकम्।
जगत्रातो जगत्त्रातः स्वामिन्रक्षस्व मामिति।। (१०५)

*105. லோக நாயகனான அனைத்தையும் காப்பவரான ப்ரபுவே! என்னையும் ரக்ஷிப்பாயாக ' என்று பிரார்த்தித்து அந்த பிராமணன் வைகுண்டாதிபதியான ஸ்ரீ மஹா விஷ்ணுவைச் சரணமடைந்தான்.*

नमस्कृत्वा यथान्यासं कृत्वा विश्वासपूर्वकम्॥

*மிகவும் நம்பிக்கையோடு முறைப்படி ப்ரணாமம் செய்து காப்பாற்றும்படி வேண்டி சரணம் அடைந்தான்.*

सन्तापक्षुत्पिपासाकबलित सकलाडंबरो वीतचेष्टः
पृथ्वीतल्पे शयानःप्रचुरतरविश्रान्तिचित्तो द्विजेन्द्रः।
ध्यात्वा विष्णु शरण्य प्रणतजनभयोन्मूलने बद्धदीक्षं
रक्षामुद्रं कृपालुं दृढतरमनसा जोषमास्ते महात्मा॥ (१०६)

*106. அதிக வருத்தமுற்றவனும், பசி, தாகம் முதலியவற்றால் பீடிக்கப்பட்டு உத்ஸாஹமின்மையால் சரீர சேஷ்டைகள் குறைந்து, தரையில் படுத்து மிகவும் இளைப்பாற நினைத்தவனாய், கவலை மிகுந்திருப்பவனான மஹாத்மாவான அந்த பிராமணன், தன்னைச் சரணமடைந்தவர்களை ரக்ஷிப்பதற்கு உறுதி பூண்டிருப்பவனும், அபய முத்திரை கொண்டவனும், பரமகருணாமூர்த்தியும், சரணயனுமான ஸ்ரீமஹாவிஷ்ணுவை மனதில் திடமாக த்யானம் செய்து கொண்டு இருந்தான்.*

इति सप्तमोऽध्यायः

## ஏழாம் அத்யாயம் முற்றிற்று

க்ருஷ்ண க்ஷேத்ர மாஹாத்ம்யம் என்கிற
अथ अष्टमोऽध्यायः
எட்டாம் அத்யாயம்

व्यासः வ்யாஸர்

योगनिद्रापरवश विप्र भागवतोत्तमम्।
तदा तु जरठः कश्चित् विप्ररूपीस्खलगतिः ॥ (१)

1. தியானத்தில் (யோக நித்திரையில்) ஆழ்ந்திருக்கிற பாகவ தோத்தமனான அந்த பிராமணனைப் பார்த்து, அப்போது தடுமாற்றமுள்ள நடையை உடையவனும், பிராமணனுமான ஒரு வ்யத முதிர்ந்தவர்

मन्दाक्षमालो जरयाऽव्यकतवाककम्पयन्करम्।
चलद्दन्तो दण्डपाणिरसहायः क्लिशाम्बरः ॥ (२)

2. பழமையான ம்ருதுவான ஜபமாலையைக் கையில ஏந்தி கிழத்தன்மையால் தெளிவற்ற பேச்சும், நடுங்குகிற கையும் நடுக்கமுடைய, அடிக்கடி கிட்டிக்கொள்ளும் பற்களும் கொண்டு, கையில் கோல் ஊன்றி மலின (நைந்து போன) வஸ்த்ரம் அணிந்து ஸஹாயமற்றவனாகப் பேசினார்.

वृद्धः வயது முதிர்ந்தவர் கூறுகிறார் -

को भवान्निर्जने देशे निर्मले वृक्षमूलके।
चण्डातपेन सन्तप्ते क्षुत्पिपासाप्रपीडितः ॥ (३)

3. 'நீ யார்? ஜன சந்தடியற்ற நிர்மலமான இந்தக் காட்டில் மரத்தினடியில் கொடூரமான வெயிலால் தாபமடைந்து பசி, தாகம், முதலியவற்றால் பீடிக்கப்பட்டிருக்கிறாய்.

असहायो भूमितल्पे शेते दीनातुरः कृशः।
विसृज्य मातापितरौ दारपुत्रसुहृज्जनान् ॥ (४)

4. ஸஹாய மறறவனாக பூமியில (தரையில) களைத்து, இளைத்தவனாகத் தந்தையரையும், மனைவி, மக்களையும, விடடு நணபர்களிடமிருந்தும், விடுபட்டவனாக படுத்திருக்கிறாய்.

इहागतोऽसि भद्रत्व किमर्थ किमपेक्षितम्।
आकर्ण्योन्मील्य नयने वृद्धं संवीक्ष्य भूसुरः॥ (५)

5. நீ ஏன் இங்கு வந்திருக்கிறாய்? சிரஞ்ஜீவியே ! உனக்கு என்ன வேண்டும்? என்று கேட்ட வயது முதிர்ந்தவரைப் பார்த்து கண்களைத் திறந்து

उवाच गद्गदं वाकयं तदा यज्ञेश्वरो मृदु.॥

பிராமணோத்தமனான யஜ்ஞேச்வரன் மிகவும தயக்கமுடன் பேசினான்.

अहो भागवतस्तुभ्य देशेऽस्मिन् विजने वने।
श्रुतमेतादृश वाकय मानुषं मधुरं मया॥ (६)

6. 'ஆச்சரியம்' பாகவதரே' நீர் யார்? உமக்கு வணக்கம் (நமஸ்காரம்) இந்த ஜனசந்தடியற்ற காட்டுப் ப்ரதேசத்தில் பரம பாகவதோத்தமரான தேவரீரிடமிருந்து இப்படிப்பட்ட இனிமையான பேச்சுக்கள் என்னால் கேட்கப்பட்டன.'

धन्योऽस्म्यनुगृहीतोऽस्मि दर्शनादेव ते दिज।

பிராமணோத்தமரே ! தேவரீரது தரிசனத்தினாலேயே தன்யனானேன். அநுக்ரஹிக்கப்பட்டிருக்கிறேன்.

दुःखसागरमग्नस्य मम दैववशादिह।
भवतो दर्शनात्क्षेत्रं ममासीत्कि द्विजोत्तम॥ (७)

7. பிராமண ச்ரேஷ்டரே! துக்க ஸாகரத்தில் மூழ்கியிருக்கிற எனக்கு தெய்வச் செயலால் தங்கள் தரிசனம் கிடைத்தது. என் நிலமை என்னவாயிற்று.

साधुसंभाषणं तर्हि सुखमाहुर्मनीषिणः।
प्रवदामि त्वया पृष्टं मदागमनकारणम्॥ (८)

*8.* ஞானிகளுக்கு ஸாதுக்களுடன் ஸம்பாஷணம் செய்வது ஸுகம் தரக்கூடியது என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். அதனால் தங்களால் கேட்கப்பட்ட நான் இங்கு வந்ததின் காரணத்தைச் சொல்கிறேன்.

शृणु तातप्रमत्तेन चेतसा करुणाम्बुधे।
वृद्धौ च मातापितरौ स्वयं यातौ मम प्रियौ॥ (९)

*9.* கருணைக் கடலே, தந்தையே ! அசஞ்சலமான மனத்தோடு கேட்பீராக! என்னுடைய பிரியமான, வயதான தாய் தந்தையர்கள் தாமகவே இயற்கையை அடைந்துவிட்டனர்.

मातापित्रोस्तयोरूर्ध्वदैहिके च कृते मया।
ईदृशी मतिरुत्पन्ना मम चासीत् द्विजोत्तम॥ (१०)

*10.* மேலுலகம் சென்று விட்ட என்னுடைய தாய் தந்தையருக்கு ஈமக்காரியங்கள் செய்யப்பட்டன. பிராமணோத்தமரே ! எனக்கு இப்படிப்பட்ட ஒரு எண்ணம் ஏற்பட்டது.

जह्नुकन्या तटेऽस्थीनि निक्षेप्तव्यानि यथेप्सितम्।
आत्मनो जन्मसाफल्यमनयोर्न पुनर्भवः॥ (११)

*11.* என்னுடைய விருப்பப்படி அவர்களத எலும்புகளை (சாம்பலை)க் கங்கையில் சேர்க்க வேண்டும். எனக்கு பிறவிப்பயன் கிடைக்க வேண்டும். அவர்களுக்கும் மறுபிறவி ஏற்படக் கூடாது.

भवेदिति ततो गङ्गां प्रयातोऽहं तदस्थि च।
समादाय यथामार्गमजानन् मार्गमीदृशम्॥ (१२)

*12.* பிறகு நான் அந்த அஸ்திகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். வழி தெரியாமல் இப்படிப்பட்ட மார்கம் ஏற்பட்டது.

प्रविश्य तादृशं दुःखं प्राप्तोऽस्मि प्राणसङ्कटम्।
चराचरस्य विश्वस्य शिक्षको यस्सनातनः॥ (१३)

*13. இந்த வழியில் அப்படிப்பட்ட துக்கத்தை அடைந்து ப்ராண ஸங்கடமான நிலையை அடைந்திருக்கிறேன். மாயும் ஜங்கமங்களுமான இந்த உலகத்துக்கு நித்யமான அழிவற்ற வழி நடத்துபவனாக உள்ள,*

स एव श्रीपतिर्गोप्ता ममापीति दृढव्रतः।
हरिमेव परं ध्यात्वा वीतभीतिर्वसाम्यहम्॥ (१४)

*14. அந்த ஸ்ரீயப்பதியே என்னையும் ரக்ஷிக்கிறவன் என்கிற உறுதியான எண்ணத்துடன் அந்த ஸ்ரீஹரியையே த்யானம் செய்து கொண்டு பயத்தை உதறிவிட்டு இருக்கிறேன்.*

इत्युकत वच आकर्ण्य वृद्धविप्रो विहस्य च ।
प्रत्युवाच हरिध्यान परमैकाग्र चेतसम्॥ (१५)

*15. ஸ்ரீஹரியை ஏகாக்ர சித்தத்துடன் த்யானம் செய்து கொண்டிருக்கிற ப்ராமணனால் சொல்லப்பட்ட வார்த்தையைக் கேட்டு வயது முதிர்ந்த பிராமணன் சிரித்து விட்டு பதில் சொன்னான்.*

है विप्र! मूढ! गङ्गाया विशेषस्सरितां कथम्।
केनाकारेण गङ्गायाः श्रेष्ठता वद दुर्मते॥ (१६)

*16. முட்டாளான பிராமணனே ' நதிகளிலே கஙகை நதிக்கு விசேஷம் எவ்வாறு ஏற்பட்டது, எந்த ரூபத்தினால் கஙகைக்கு உயர்வு என்று சொல்வாயாக.*

को मोक्षमगमद्गङ्गाप्रभावाद्वद दुर्मते।
अप्रत्यक्षो-हरिः को वा शशशृङ्गसमोऽपि च ॥ (१७)

*17. மூடபுத்தியுள்ளவனே ' கங்கையின் பிரபாவத்தாலே எவன் மோக்ஷமடைந்திருக்கிறான்? முயல கொம்பு கணணுக்குப்*

புலப்படாதது போல், நம் கண்ணுக்குப் புலப்படாத இந்த ஹரி என்பவன் யார்? எவன் உன்னைக் காக்கிறான் என்பதை சொல்வாயாக.

यस्त्वां रक्षति मूढात्मन् सर्वस्यार्थे त्वया कृतम्।
इति कर्णकठोरं तत्वृद्धविप्रस्य भाषितम्।। (१८)

18. மூடனே ! உன்னை ஒருவன் ரக்ஷிக்கிறான் என்பதற்காக (உனக்குத் தேவையான) எல்லாம் உன்னாலேயே வீணாக உறுதி செய்யப்பட்டது, என்கிற கர்ணகடூரமான சொற்களால் வயோதிக பிராமணன் சொன்னான்.

वचो निशम्य यज्ञेशो वैदिकाग्रेसरो द्विजः।
प्रोवाच वचनं कोपात् पाटलाक्षिपुटद्वयः।। (१९)

19. வைதீகாக்ரேஸரான யஜ்ஞேசன் என்கிற பிராமணன் இந்த பேச்சுக்களைக் கேட்டுக் கோபத்தினால் இரண்டு கண்களும் சிவந்தவனாக வார்த்தைகளை சொல்லத் தொடங்கினான்.

रे रे चार्वाक मूढात्मन् त्वया पापचयः कृतः।
अयोग्यं मादृशां मूढ भवता सह भाषितुम्।। (२०)

20. ஹே சார்வாக (இனிமையாக கடவுள் இல்லை என்று) பக்ஷம் பேசுபவனே ! முட்டாளே ! உன்னால் பாபம் செய்யப்படுகிறது. உன்னைப் போன்ற அயோக்யர்களுடன் பேசுவது எஙகளுக்குத் தகாது.

हरिर्नास्तीति यो वेत्ति तत्स्वरूपं कुयुकितभि।
आत्मान नैव जानाति सुमूर्खो मूढचेतनः।। (२१)

21. நேர்மையற்ற யுக்திகளாலே ஸ்ரீ ஹரி இல்லையென்று சொல்கிறவன் பகவத் ஸ்வரூபத்தையும் தன்னையுமே அறிந்து கொள்ளாதவனாக ஆகிறான். அவன் மூர்க்கனாகவும் முட்டாளாகவும் கருதப்படுகிறான்.

हरिं क्षित्यादिकर्तारं यो मुष्णात्यविवेकत.।
पाप परं न पश्यामि तस्यैवात्मापहारिणः।। (२२)

22. எவன் ஒருவன் பூலோகம் முதலானவற்றை ஸ்ருஷ்டிக்கிற ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அவிவேகத்தால் ஒதுக்குகிறானோ, தன்னுடைய ஆத்மாவையே கெடுத்துக் கொள்கிற அவனுக்கு இதைவிட வேறு பாபம் எதையும் நான் காணவில்லை.

वेदयोनि हरि यस्तु नाकारपदगोचरम्।
कृतकैर्मनुते तेन सहवासं त्यजेद्बुध.॥ (२३)

23. ஊனக் கண்களுக்குப் புலப்படாதவனும், வேதங்களுக்கு இருப்பிடமாயுள்ள ஸ்ரீமஹாவிஷ்ணுவை, பொய்யாக எண்ணுகிறவனின் ஸஹவாஸத்தை அறிவாளி விடக கடவன

य कुदृष्ट्येश्वरमजं प्राणिकर्मप्रयोजकम्।
शशशृङ्गसम ब्रूते गतिस्तस्य त विद्यते॥ (२४)

24. குறுகிய பார்வை (மனம்) உடைய ஒருவன் ஸகலப்ராணிகளுக்கும் காரணமானவனும், ஸ்ருஷ்டிகர்த்தாவும் எப்போதும் உள்ளவனும் பிறப்பிலியுமான பரமாத்மாவை முயல் கொமபுக்கு ஸமமாக (பொய் பிரசாரமாக) சொல்லுகிறானோ அவனுக்கு நல்ல கதியே கிடையாது.

ईश्वरे तुच्छबुद्धि यः कुरुते श्रुतिगोचरे।
तेन संभाषण प्राहुः ब्रह्महत्यादिपातकम्॥ (२५)

25. வேதங்களால் போற்றப்படுகிற ஈய்வரனிடத்தில் இழிவான எண்ணம் (அலக்ஷ்ய புத்தி) உடையவனோடு ஸம்பாக்ஷித்தல், ப்ரஹ்ம ஹத்யாதி தோஷங்களை உண்டாக்கும் என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

निगमान्तरस विष्णुं सर्वज्ञं वेत्ति योऽन्यतः।
चण्डालस्स नरो ज्ञेयः सर्वकर्मबहिष्कृतः॥ (२६)

26. வேதங்களின் உண்மைப் பொருளாக ரஸமாக உள்ளவனும். ஸர்வஜ்ஞனுமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை மாறாக எண்ணுகிறவன், எல்லா கர்மாக்களாலும் விலக்கப்பட்டு சண்டாளனாகக் கருதப்படுகிறான்.

यस्स्तम्भमध्यसंभूतं प्रह्लादानन्दकारणम्।
उरोविदारकं विष्णुं ब्रवीत्याकाशपुष्पवत्॥ (२७)

27. பிளக்கப்பட்ட (ஒரே) ஸ்தம்பத்தின் நடுவில் ஆவிர்பவித்தவனும் ப்ரஹ்லாதனின் ஆனந்தத்துக்குக் காரணபூதனும், ஹிரண்ய கசிபுவின் மார்பைப் பிளந்தவனுமான ஸ்ரீமஹாவிஷ்ணுவை ஆகாசத்தில் மலரும் புஷ்பம் போல (பொய்யானவன்) என்று சொல்கிறவன்.

पश्यतोहरतस्तस्य निष्कृतिर्नैव विद्यते।
यः प्रह्लादभध्वंसी तवापि च ममापि च॥ (२८)

28. ப்ரஹ்லாதனின் பயத்தையும், உம்முடையவும் என்னுடைய பயத்தையும் போக்குகிற அந்த பகவானை இல்லை என்று சொல்பவர்களுக்கும், பார்த்துக் கொண்டிருக்கும் போதே கொள்ளையடிப்பவர்களுக்கும் பிராயசித்தம் எதுவும் கிடையாது.

स एव तारकःश्रीमान् नान्यः कश्चनविद्यते।
यन्नामस्मरणं पुसा भवविच्छेदकारणम्॥ (२९)

29. எந்த பகவானின் நாமஸ்மரணத்தால் மனிதர்களுக்கு ஸம்ஸாரதுக்கம் நீங்குகிறதோ அவனே ப்ரணவஸ்வரூபமாயிருக்கிற எல்லோருக்கும் நற்கதி வழங்கும் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் கூடின மஹா விஷ்ணு போல மற்றொருவர் கிடையாது.

आत्मसरक्षणे श्रीमान् स एव ब्रह्म अच्युतः।
यत्पादसलिलं पीत्वा मुकतो भवति मानवः॥ (३०)

30. யாருடைய ஸ்ரீபாததீர்த்தத்தைப் பருகி மனிதர்கள் முக்தியை அடைகின்றனரோ, அவர்கள் நம்முடைய ஆத்மாவை ஸம்ரக்ஷிப்பதில் ஸ்ரீமானாகவும், (ப்ரம்மாகவும்) பரம்பொருள் அச்யுதனாகவும் இருக்கிறான்.

एवमादिगुरुः शौरी मम रक्षणदीक्षितः।
इन्द्रादिलोकपालानां यक्षगन्धर्वरक्षसाम्॥ (३१)

31. இவ்வாறாக, ஆதிகுருவான ஸ்ரீக்ருஷ்ணன என்னை ரக்ஷிக்க உறுதி பூண்டிருக்கிறான். இந்திரன் முதலான லோக பாலர்களுக்கும் யக்ஷ, கந்தர்வ, ராக்ஷஸர்களுக்கும்

सिद्धोरगाणां गुह्यानां कृमिकीटपतत्रिणाम्।
सर्वेषामपि भूतानां तवापि च ममापि च॥ (३२)

32. ஸித்தர்களுக்கும், ஸர்ப்பங்களுக்கும், குபேரன் முதலான தேவகணங்களுக்கும், புழு, பூச்சி பறவைகளுக்கும், எல்லாவித பிராணிகளுக்கும், உமக்கும், எனக்கும் கூட,

स एव श्रीपतिर्गोप्ता देवदेवो जनार्दनः।
नारायणपदाम्भोजनिस्सृता भुविदुर्लभा॥ (३३)

33. அந்த ஸ்ரீபதிதான் ரக்ஷகன். அவனே தேவதேவன். அவனே ஜனார்த்தனன். அந்த ஸ்ரீமந் நாராயணனின் தாமரை மலர்ப்பாதங்களில் உண்டானதாகவும். பூலோகத்தில் கிடைப்பதரிதானதும் ஆன,

तस्मात् सर्वसरिद्भिस्तु गङ्गा श्लाघ्या विशिष्यते।
संसारपाशनिर्मुकतो जह्नुकन्याजलाप्लुतः॥ (३४)

34. ஜாஹ்நவீ என்கிற கங்கையின் ஜலத்தில் குளித்தவன், ஸம்ஸார பாசத்தினின்றும், விடுதலை அடைகிறான். ஆகையால் எல்லா நதிகளைக் காட்டிலும் கங்காநதி மிகவும் ஶ்லாக்யமானது (சிறந்தது)

शाश्वत याति वैकुण्ठ धाम सर्वोत्तमं परम्।
मूर्खेण विप्ररूपेण पाषण्डेन त्वयाऽधुना॥ (३५)

35. அதனால் எல்லாவற்றிலும் மிகவும் மேன்மையான, உயர்ந்ததான, நிலையான வைகுண்ட பதவியை அடைகிறான். பிராமண உருவத்துடனிருக்கிற மூர்க்கனான, வேதநிந்தக பாஷண்டியான

किमुकतमविचारेण दुर्मते मम सन्निधौ।

न वस्तव्यं न वस्तव्यं मत्समीपेऽद्य दुर्मते॥ (३६)

*36. மூட பக்தியுள்ளவனே ! ஆலோசிக்காமல் என் எதிரில் என்ன வார்த்தை பேசி விட்டாய் ? துர்மதியே! இப்போது என் அருகில் இருக்காதே ! இருக்காதே !*

यः पुत्रः पितरं द्वेष्टि तं विद्यादन्यरेतसम्।
यस्तु नारायणं द्वेष्टि तं विद्यादन्यरेतसम्॥ (३७)

*37. தந்தையே விரோதியாகக் கருதுகிற மகன் வேறொருவனுக்கும் பிறந்தவனாகக் கருதப்படுவான். ஆனால் ஸ்ரீமந்நாராயணனையே விரோதியாகக் கருதுகிறவன், தாழ்ந்த குலத்தவனுக்குப் பிறந்தவானகக் கருதப்படுகிறான்.*

इत्येवोकत्वा तु वचनं नाम्ना यज्ञेश्वरो द्विजः।
कर्णौ पिधाय हस्ताभ्यांनामस्मरण पूर्वकम्॥ (३८)

*38. யக்ஞேஶ்வரன் என்கிற அந்த பிராமணன் இவ்வாறு வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, பகவந்நாமாக்களை ஸ்மரித்து, கைகளால் காதுகளை மூடிக்கொண்டு,*

मायाद्विज ततस्त्यकत्वा प्रयातुमुपचक्रमे।

*மாயாவியான அந்தப் பிராமணனை விட்டு விட்டுப் புறப்படத் தொடங்கினான்.*

ततो दृढमतिं ज्ञात्वा विप्रं भागवतोत्तमम्।
प्रादर्शयत् स्वस्वरूपं भगवान् भूतभावनः॥ (३९)

*39. பிறகு பகவான் ஸ்ரீமந்நாராயணன் பாகவதோத்தமனான பிராமணனின் உறுதியான எண்ணத்தை அறிந்து, தன்னுடைய அனைத்துதுப் பிராணிகளையும் காக்கும் உண்மையான திவ்ய ரூபத்தைக் காண்பித்தார்.*

विप्ररूप विसृज्याथ परमाद्भुतदर्शनम्।

*பிராமண ரூபத்தை விட்டு, மிக அத்புதமாக காக்ஷி அளித்தார்.*

शङ्खचक्रगदापाणिं पुरुषं लोकपावनम्।
दृष्ट्वा विप्रवरो नत्वा प्रदक्षिणपुरस्सरम्॥ (४०)

40. சஙகம், சக்ரம் கதை முதலான ஆயுதஙகளைத் தரித்த, லோக ரக்ஷகனான புருஷோத்தமனை மஹாவிஷ்ணுவைப் பார்த்து, பிராமண ச்ரேஷ்டர், ப்ரதக்ஷிணம் முதலானவற்றைச் செய்து, ஸேவித்து,

स्तुत्वा तं स्तुतिभिस्सर्वैः परमानन्दपूरितः।
विस्मयोत्फुल्लनयनो जोषमास्ते कृताञ्जलिः॥ (४१)

41. பரமானந்தத்தை அடைந்தவனாக. எல்லாவித ஸ்தோத்திரங்களாலும் பகவானை ஸ்தோத்ரம் செய்து, ஆச்சரியத்தால் மலர்ந்த கண்களை உடையவனாக கூப்பிய கையனாக மௌனமாக இருந்தான்.

मामेव शरणं प्राप्य महाविश्वासपूर्वकम्।
आत्मरक्षाभरन्यासमपि कृत्वा मयि द्विज॥ (४२)

42. ஹே பிராமணோத்தமரே ! மஹாவிச்வாஸத்தோடு கூட என்னையே சரணமடைந்து, என்னிடத்தில் ஆத்மரக்ஷணத்துக்காக பரந்யாஸம் செய்து

निश्चलां बुद्धिमास्थाय तूष्णी तिष्ठ स्वयत्नतः।
प्रीत्या परमया बुद्ध्या भवाम्यध्यक्षिगोचरः॥ (४३)

43. நிய்சலமான, கலக்கமற்ற புத்தியைப் பெற்று வெறுமனே இருக்க முயற்சிப்பாயாக். உள், வெளிக் கண்களுக்கு மிகவும் ப்ரீதியுடன் தோற்றமளிக்கிறேன்.

मातापित्रोश्च शुश्रूषां य : करोति नरोत्तमः।
तस्मिन्नेवाधिका प्रीतिर्निश्चला मम वर्तते॥ (४४)

44. மனிதர்களில் சிறந்தவனாயிருப்பவன் தன் தாய், தந்தையருக்கும் பணிவிடை செய்வானேயாகில் அவனிடத்தில் தான் மிகவும் அதிகமான ப்ரீதி நீக்கமற எனக்கு ஏற்படுகிறது.

मातापित्रोः कृते कार्ये क्लेसेन महता द्विज।
मा गास्सुरापगां शुद्धामुपायं प्रवदामि ते॥ (४५)

45. பிராமணனே ! தாய் தந்தையருக்காக அதிகமான கஷ்டங்கள் பட்டு, காரியங்கள் செய்துள்ளபோது, தேவலோக நதியாகிய பரிசுத்தமான கங்கையைத் தேடிச் செல்ல வேண்டாம். அதற்கு ஒரு நல்ல உபாயம் கூறுகிறேன்.

शृणु भागवतश्रेष्ठ सावधानेन चेतसा ॥

பரமபாகவதோத்தமனே ! கவனமாகக் கேட்பாயாக.

कृष्णक्षेत्रमिति ख्यातं मत्प्रियावासमद्भुतम् ।
पुण्डरीकपुर ह्यस्ति भुकितमुक्तिफलप्रदम् ॥ (४६)

46. மிகவும் அற்புதமானதும், நான் மிக்க அன்புடன் வஸிக்கக் கூடியதும், மிகவும் புகழ் பெற்றதும், நல்ல இகலோக அனுபவத்தையும், மோக்ஷத்தையும் தரக்கூடிய புண்டரீகபுரம் என்கிற க்ஷேத்திரம் இருக்கிறது.

क्षेत्राणामुत्तमं क्षेत्र महापापविनाशनम् ।
सर्वेषामिष्टद नृणा सर्वसम्पन्मनोहरम् ॥ (४७)

47. இந்த க்ஷேத்திரம் மற்ற க்ஷேத்திரங்களனைத்திலும் சிறந்தது. பாபங்களனைத்தையும் போக்கக் கூடியது. எல்லா செல்வங்களும் நிறைந்தது. மனதைக் கவரும்படியானது. மனிதர்களுக்குத் தேவையானவற்றை அளிக்க வல்லது.

श्रीरङ्गे कुम्भकोणे च श्रीनिवासे वृषाचले ।
सारक्षेत्रे यथा सत्यव्रतक्षेत्रे तु गोकुले ॥ (४८)

48. ஸ்ரீரங்கம் திருக்குடந்தை, ஸ்ரீநிவாஸம், (உப்பிலயப்பன் ஸந்நிதி) திருமலை, வ்ருஷாசலம், ஸாரக்ஷேத்திரம் (திருச்சேரை) ஸத்யவ்ரதம் (காஞ்சீ), கோகுலம், கோவர்தனம், நந்தகோபக்ருஹம்,

श्रीमुष्णे घटिकाद्रौ च नैमिशे बदरीगिरौ ।

ஸ்ரீமுஷ்ணம், கடிகாத்ரி, (சோளஸிம்ஹபுரம்) நைமிசாரண்யம், பதரிகாசிரமம் முதலான நகரங்களில்

कृष्णक्षेत्रे यथा प्रीतिर्विद्यते बहुला मम।।
क्षेत्रान्तरे तथा प्रीतिर्विद्यते नैव भूतले।। (४६)

49. இந்த பூலோகத்தில் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் நான் எவ்வளவு ப்ரீதியுள்ளவனாக இருக்கிறானோ, அவ்வளவு ப்ரீதி கீழே சொன்ன மற்ற க்ஷேத்திரங்களில் எனக்குக் கிடையாது.

क्षेत्रान्तरात् परं गुह्यं कृष्णक्षेत्रं विशिष्यते।

மற்ற க்ஷேத்திரங்களைக் காட்டிலும், ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரம் அசலறியாத (மறைமுகமான) பல பெருமைகளைக் கொண்டதாக மிக விசேஷமாகச் சொல்லப்படுகிறது. ஏனெனில்

तस्मिन् क्षेत्रे महापुण्ये मम प्रीतिकरे शुभे।
नित्यनैमित्तिकं कर्म तथा देवद्विजार्चनम्।। (५०)

50. எனக்கு மிகவும் பிரியமானதும், மஙகளகரமானதும், மிகவும் புண்ணியம் நிறைந்ததுமான இந்த க்ஷேத்திரத்தில் நித்யகர்மாக்களையும், நைமித்திகமான சிராத்தம் முதலான கர்மாக்களைஸயும் தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும் செய்ய வேண்டிய பூஜைகளையும்,

स्नानं दानं जपो ध्यान तथा भागवतार्चनम्।
देवश्राद्धं तथा पित्र्यं अतिथीनां च पूजनम्।। (५१)

51. ஸ்நானம், தானம், ஜபம், த்யானம், பாகவதர்களைப் பூஜித்தல், தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும், செய்ய வேண்டிய ச்ராத்தம் தர்ப்பணம் முதலானவை, அதிதிகளைப் பூஜித்தல்,

प्रीत्यर्थ मम कर्तव्यं वित्तशक्त्यनुसारतः।
मत्प्रीतये वैष्णवाय वित्तलोभविवर्जितः।
ददाति यो द्विजश्रेष्ठः मम प्रीतिकरो भवेत्।। (५२)

52. பணம் மற்றும் செல்வம் முதலானவற்றில் பற்று இல்லாது எனகடு மிகவும் ப்ரீதியுள்ளவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு

தன்னுடைய சக்திக்கு ஏற்ற வகையில என்னுடைய ப்ரீதிக்காகச் செய்ய வேண்டியவற்றை எவன் செய்கிறானோ அந்த பிராமணோத்தமன் எனக்கு மிகவும் மகிழ்ச்சியைச் செய்பவனாகிறான்.

कुरुते यो गृहस्थोऽपि कृष्णक्षेत्रनिवासिने।

குடும்பத்துடன் இருப்பவனும் கூட க்ருஷ்ணக்ஷேத்ர வாஸியானவனுக்கு தானம் செய்வானேயாகில் அவனும் என் இஷ்டமானவனாகிறான்.

मदाराधनशुद्धात्मा कृष्णक्षेत्रे वसन्नरः।
मुक्तिक्षेत्रमिदं पुण्यं सत्य सत्यं वदाम्यहम्॥ (५३)

53. ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் வசிக்கிற க்ருஹஸ்தனொருவன் ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரவாஸியான என்னை சுத்தமான ஹ்ருதயத்துடன் ஆராதிப்பானேயாகில் அவனுக்கு மோக்ஷம் கிடைக்கிறது என்பதை நான் ஸத்யமாகக் கூறுகிறேன்.

पुण्डरीकपुरीमध्ये पुण्या पुष्करिणी वरा।
अस्मिन् क्षेत्रवरे कृष्णक्षेत्र तु भुवि विश्रुता॥ (५४)

54. புண்டரீகபுரத்தின் நடுவில் மிகவும் ச்ரேஷ்டமான புண்ணியம் நிறைந்த புஷ்கரிணி (குளம்) ஒன்று உண்டு. க்ஷேத்திரங்களில் மிகச் சிறந்த இந்த க்ஷேத்திரத்தில் உள்ள இந்த புஷ்கரிணீ இந்த பூலோகத்திலேயே மிகவும் பிரஸித்தமானதாகவும்,

प्रसन्नसलिलाऽगाधा पवित्रा पापनाशिनी।
सर्वतीर्थात्मिका मोक्षदायिनी पुण्यवर्धिनी॥ (५५)

55. தெளிந்த நீரை உடையதாயும், ஆழமானதும், பரிசுத்தமானதும், பாபங்களைப் போக்குவதாயும், எல்லா தீர்த்தங்களையும் தன்னுள் அடக்கியதாயும், புண்ணியத்தை வளரச் செய்தும், மோக்ஷத்தை அளிப்பதாயும் உள்ளது.

प्रथिता त्रिषु लोकेषु नाम्ना विष्णुपदीत्यपि।
मत्पादाम्बुजसिक्ताम्बुसंयुता कण्वसेविता॥ (५६)

56. மூவுலகத்திலும் புகழ் பெற்றதாயும், விஷ்ணு பதீ என்று பெயருள்ளதாயும், பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே வைகுந்த பதவியை அளிப்பதாயும் கண்வமுனிவராலே ஸேவிக்கப்பட்டதாயும், என்னுடைய பாத தாமரையிலிருந்து உண்டான (கங்கை) நீரோடு கலந்ததாயும் உள்ளது.

तस्मात् त्वमपि विप्रेन्द्र कृष्णक्षेत्र समेत्य च।
ससिक्त केशो विधिवत् पुण्डरीक सरोवरे॥ (५७)

57. ஆகையாலே, பிராமணோத்தமனே ! நீயும் க்ருஷ்ணக்ஷேத்திரமடைந்து, சாஸ்த்ர முறைப்படி புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து,

अवगाह्य विशुद्धत्मा परिधायान्यवाससी।
अस्मिन् क्षेत्रे खनित्वाऽस्थि मातापित्रोश्च भूसुर॥ (५८)

58. அமிழ்ந்து (அவகாஹ) ஸ்நானம் செய்து, சுத்தமான ஹ்ருதயத்துடன் உலர்ந்த வஸ்த்ரம் அணிந்து, இந்த க்ஷேத்திரத்தில் தாய் தந்தையரின் அஸ்தியைப் புதைத்து

तृप्त्यर्थं च पितृणां तु कुरु पिण्डोदकादिकम्॥

பித்ருக்களின் த்ருப்திக்காக பிண்டோதகம் (பிண்ட (ஸம்யோஜனம்) தானம், பித்ரு தர்பணம்) முதலானவற்றைச் செய்வாயாக.

गङ्गातीरेऽस्थिखनने तत्र पिण्डोदके कृते।
यत्फल तव विप्रेन्द्र तत्फल सुलभं त्विह॥ (५९)

59. கஙகையின் கரையில் அஸ்தியைப் புதைப்பதாலும், அஙகு பிண்டோதகதானம் முதலியவற்றைச் செய்வதாலும், ஏற்படுகிற பலன் இங்கு அந்தக் காரியங்களைச் செய்வதால் ஸுலபமாகக் கிடைக்கிறது.

मत्समाराधनरतो मत्कैङ्कर्यपरस्सदा।
मत्क्षेत्रवासनिरतो भवभोगान्बहूनपि।
भुक्त्वान्ते मम सारूप्यं प्राप्नुहि द्विज पुङ्गव।। (६०)

60. என்னை எப்போதும் ஆராதித்துக் கொண்டும், எப்போதும் எனக்குத் தொண்டுகள் செய்து கொண்டும், என்னுடைய க்ஷேத்திரமான புண்டரீகபுரத்தில் வாஸம் செய்தும், இந்த உலக போகங்களை நன்கு அனுபவித்தும், பிறகு என்னுடைய ஸாரூப்யத்தை அடைவாயாக.

एवमुक्त्वाऽपरं विष्णु विप्र वैष्णवपुङ्गवम्।
अन्तर्हिते हरौ विप्रो विस्मयाविष्टचेतनः।। (६१)

61. இவ்வாறாக மற்றொரு விஷ்ணுபோல் தோற்றம் கொண்ட வைஷ்ணவ ஸ்ரேஷ்டனான பிராமணனைப் பார்த்து, பகவான் ஸ்ரீஹரி சொல்லி மறைந்ததும், அந்த பிராமணன் தன் உள்ளத்தில் இருக்கும ஸ்ரீஹரியினிடத்தில் மிகவும் ஈடுபட்ட ஆச்சர்யமடைந்த மனதை உடையவனாக,

वीताध्वगमनक्लेशः क्षुत्पिपासादिवर्जित.।
तस्माद्दूरतमाद्देशात् कृष्णक्षेत्र समागमत्।। (६२)

62. வழி நடந்த களைப்பு நீங்கியும், பசி, தாகம முதலியன அறறவனாகவும், ஸ்ரீமந்நாராயணனின் உத்தரவை ஏற்று க்ருஷ்ணக்ஷேத்திரம் (புண்டரீகபுரம்) அடைந்தான்.

खनित्वाऽस्थीनि तत्रैव मातापित्रोर्यथाश्रुतम्।
सत्यक्तकेशो विधिवत् स्नात्वा पुण्यसरोवरे।। (६३)

63. அங்கேயே தாய் தந்தையரின் அஸ்தியை (ஜீவதசையில்) அவர்கள் சொல்லியபடியே மண் தோண்டிப் புதைத்து சாஸ்த்ர விதிப்படி க்ஷௌளகர்மாக்களைச் செய்து புண்ணிய தீர்த்தத்தில் நீராடி,

पितृन् सन्तर्प्य शुद्धात्मा पिण्डदानतिलोदकै.।
गोविन्देति सदा जप्त्वा क्षेत्रेऽस्मिन् समुपोष्य च।। (६४)

64. சுத்தமான ஹ்ருதயத்துடன் பிண்டதானம், எள் கலந்த தீர்த்தம் முதலியவற்றால் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் முதலானவற்றைச் செய்து, த்ருப்தி செய்வித்து, எப்போதும் கோவிந்த நாமத்தை ஜபித்துக் கொண்டு இந்த க்ஷேத்திரத்தில் க்ஷேத்ரோபவாஸம் செய்து,

गोविन्दराजकैङ्कर्यनिरतोऽनन्यधीर्द्विजः।
कृष्णक्षेत्रे चिर कलमुषित्वा तु क्लेबरम्॥ (६५)

65. வேறு சிந்தையற்றவனான பிராமணன், கோவிந்தராஜனின் கைங்கர்யத்தில் முழுதும் ஈடுபட்டவனாக, ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் பலகாலம, வசித்து, இந்த தேஹத்தை

त्यक्त्वाऽन्ते विष्णुसारूप्यमगमत् क्षेत्रवैभवात्॥

விட்டு, கடைசியில் இந்த க்ஷேத்திரத்தின் மஹிமையால் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பக்தி மிகுந்து அவனோடொத்த நிலையை அடைந்தான்.

तस्मात्सर्वप्रयत्नेन क्षेत्रेऽस्मिन्निवसेत्सुधीः।
गुणा भवेयुस्ते सर्वे स्वकीयास्थीनि चात्र वै॥ (६६)

66. ஆகையால் ஞானியாயிருப்பவன் எல்லாவித ப்ரயத்னத்தினாலும் இதே க்ஷேத்திரத்தில் வசிப்பவனாக இருக்க வேண்டும். அவர்கள் அனைவரும அந்த (யஜ்ஞேச்வர) பிராமணனின் குணாநுபவஙகளைப் பெறுவர். அவர்கள் தன்னுடைய முக்தியையும் இஙகேயே பெறுவர்.

स्थलान्तरमृताना तु+अत्रैव दहनादिकम्।
कर्त्तव्य क्षेत्रमाहात्म्यात् सर्वे मुक्ता भवन्ति ते॥ (६७)

67. வேறு ஸ்தலஙகளில் மரணமடைந்தவர்களுக்கும். இந்த புண்டரீகக்ஷேத்திரத்திலேயே தஹனம் முதலானவற்றைச் செயய வேண்டும். இந்த க்ஷேத்திரத்தின் மகிமையால் எல்லோரும மோக்ஷத்தை அடைகிறார்கள்.

क्षेत्रान्तरे कृतं पापं पुण्यक्षेत्रे विनश्यति।
पुंण्यक्षेत्रे(कृष्णक्षेत्रे) कृतं पापं कृष्णक्षेत्रे विनश्यति॥ (६८)

68. வேறு க்ஷேத்திரங்களில் செய்யப்படும பாபகார்ய தோஷங்கள் புண்ணிய க்ஷேத்திரங்களில் நீங்குகின்றன. புண்ணிய க்ஷேத்திரங்களில் (க்ருஷ்ணக்ஷேத்திரம் போன்றவற்றில்) செய்யப்படும் பாபங்கள் க்ருஷ்ணக்ஷேத்திரத்தில் அழிவடைகின்றன.

क्षेत्रेऽस्मिन् कृतपुण्यानां+आभिवृद्धिर्यथा मुने।
तथैव कृतपापानि वर्धन्ते ह्युत्तरोत्तरम्॥ (६९)

69. இந்த க்ஷேத்திரத்தில் செய்யப்படும் புண்ணிய கார்யஙகள் மேலும் மேலும் வளர்ச்சியடைவது போலவே இங்கே செய்யப்படும் பாபங்களும் மேலும் மேலும் வளர்கின்றன.

तस्मात् पापं न कर्तव्य क्षेत्रेऽस्मिन्पापभीरुभिः।

ஆகையால், பாபஙகளினின்றும் விலக நினைக்கும் பயமுள்ளவர்கள் இந்த க்ஷேத்திரத்தில் பாபங்களைச் செய்யாமலிருக்கத்தக்கவர்களாகிறார்கள்.

दरिद्रो जरठः कश्चित् कौण्डिन्यो द्विजसत्तमः।
क्षेत्रवासिक्षुधार्तानां यस्तु भूदानमात्रतः।.
मुक्तोऽभूच्च स धर्मात्मा मुने क्षेत्रस्य वैभवात्॥ (७०)

70. இந்த க்ஷேத்திரவாஸியான ஒரு பிராமணோத்தமன், கௌண்டிய கோத்ரத்தைச் சேர்ந்தவன் இந்த க்ஷேத்திரத்தில் வாழும் ஏழை, வயது முதிர்ந்தவர் மற்றும் பசி தாகத்தால் பீடிக்கப்பட்டவருக்கு பூமிதானம் மட்டும் செய்வதனாலேயே தர்மாத்மாவாகி இந்த, க்ஷேத்திரத்தின் மஹிமையால் முக்தியை அடைந்தான்.

यस्यान्नदातुः के वेत्ता फलमन्यो हि माधवात्।
कन्यादानं च भूदानं गृहगोदानवैभवम्॥ (७१)

71. எவனுக்காவது ஒருவனுக்கு அன்னதானம் செய்பவனின் பலனை மாதவனேயன்றி எவன் அறிய முடியும் ? கன்யாதானம், பூதானம், க்ருஹதானம், கோதானம் முதலியவற்றின் பெருமைகள் என்னென்ன என்பதை யார் அறிய முடியும்?

ब्रह्मदत्त इति ख्यातः काश्यपो विप्रपुङ्गवः।
स्वाचारनिरतो नित्यं सत्यधर्मो जितेन्द्रियः॥ (७२)

72. காச்யப குலத்தில ப்ரமமதத்தன் எனப் புகழ் பெற்ற சிறந்த பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் இந்திரியங்களை ஜயித்தவனாயும், ஸத்ய தர்மங்களில் தவறாதவனாயும், எப்போதும் தன்னுடைய ஆசார அனுஷ்டானஙகளில் நெறி தவறாதவனாயும்,

शुद्धान्तःकरणः क्षान्तो दयालुर्वैष्णवोत्तमः।
जितारिषड्वर्गचयः कुटुम्बी धर्मविश्रुतः।। (७३)

73. சுத்தமான ஹ்ருதயமுடையவனாகவும், பொறுமை உடையவனாகவும், (காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யம் (அழுக்காறு), என்கிற) ஆறு வகையான பகையால் துர்குணங்களை ஜயித்தவனாகவும், தர்மம் செய்து புகழ் பெற்றவனாக குடும்பஸ்தனாகவும்,

गोविन्दराजकैङ्कर्यपरो नित्यमकल्मषः।
घर्मतप्ताः पिपासार्ताः कृष्णक्षेत्रगताश्च ये।। (७४)

74. ஒரு போதும் பாபம் செய்யாதவனாகவும், எப்போதும் ஸ்ரீ கோவிந்தராஜன் கைங்கர்யத்தில் ஈடுபட்டவனாயும் இருந்து வெயிலால் களைத்தும், தாகத்தால் பீடிக்கப்பட்டும், ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரம் வந்தவர்கள் எவரோ,

दत्वा तेभ्यश्च पानीय मुक्तो भवति जैमिने।।

அவர் அனைவருக்கும் தாக சாந்தியாக தீர்த்தம் முதலானவற்றைக் கொடுத்து மோக்ஷத்தைப் பெற்றார்.

कृष्णक्षेत्रस्य माहात्म्यं विचित्रं परमाद्भुतम्।
गोविन्दराजो भगवान् वेत्ता वै परमार्थतः।। (७६)

75. ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திர மாஹாத்ம்யம் மிகவும் விசித்திரமாகவும் மிக அற்புதமாயும் உள்ளதை பரமாத்மாவான பகவான் கோவிந்தராஜன் மட்டுமே (அதை) நன்கு அறிகிறான்.

मादृशाः के नराः स्थूलाः वेत्तु क्षेत्रस्य वैभवम्।
कृत्वाल्पपुण्य क्षेत्रेऽस्मिन् मुक्तास्सन्ति हि जैमिने।। (७६)

76. ஜைமினி முனிவரே ! இந்த க்ஷேத்திரத்தில் கொஞ்சமாகப் புண்ணியம் செய்து என்னைப் போன்ற பெரிய அளவில் சிறிய மனிதர்கள் இத்தலத்தின் வைபவத்தை அறிவதற்குத் தகுந்தவர்கள் முக்தியைப் பெற்றும் (பெறவும் தகுதி உள்ளவர்களாக) இருக்கின்றனர்.

नानामृगेषु सर्वेषु तिर्यक्षु क्षेत्रवासिषु।
स्थावरेषु सर्वेषु कृमिकीटपतत्रिषु ।। (७७)

..இத்தலத்தில் வசிக்கிற பலவித மிருகங்களிலும், பறவைகளிலும், ஸ்தாவரங்களிலும், எல்லாவிதமான புழு, பூச்சி வகைகளிலும்,

मुक्तान् न गणितुं शक्यं कल्पकोटिशतैरपि ।।

77. முக்தி பெற்றவர்களை கல்ப கோடி காலமாக எண்ணினாலும் கணக்கிட முடியாததாக உள்ளது. (கல்பம் என்பது ப்ரம்மலோகக் கணக்கின் ஒரு நாள் மானிடக் கணக்குப்படி எத்தனையோ ஆண்டுகள் கொண்டதை ஒரு கல்பம் என்று கூறுவர். இந்தக் கணக்குப்படி கல்ப கோடி சதம் என்பது 100 கோடி நாட்களாகின்றன. (மானிடக் கணக்குப்டி எத்தனையோ 1000 கோடி வருடஙகளாகும் என்று கணிதத மேதைகள் கூறுவர்)

अन्यस्तु वणिजः कश्चित् रामदास इति श्रुतः।
स्वधर्मकर्मसम्प्राप्तमहदैश्वर्यसञ्चयः ।। (७८)

78. ராமதாஸன் எனப்பெயர் கொண்ட வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் தன்னுடைய தர்மமான வியாபார காரியங்களால் நிறைய ஐச்வர்யங்கள் உடையவனாக இருந்தான்.

अन्नदानरतो नित्यं ब्रह्मक्षेत्रे विशां पतिः।
विप्रांश्च तर्पयन्नित्यं दयालुः धनिनां पतिः ।। (७९)

79. பரப்ரம்ம க்ஷேத்திரமான இந்த நகரில் ப்ரவேசிப்பவர்களுக்கு எப்போதும் அன்னதானம் செய்கிறவனும், தயாள குணமுள்ளவனும், தனாதிபதியுமான இந்தவணிகன் பிராமணர்களை எப்போதும் த்ருப்தி செய்வித்தும்,

अभ्यागतेभ्यो दत्वाऽन्नं क्षुधार्तानां तु सादरम्।
दत्वा बहूनि धान्यानि विविधानि महायशाः ॥ (८०)

*80. பசித்து வருகிறவர்களுக்கு ஆதரவுடன் அன்னமளித்தும், நிறைய உணவுப் பொருள்களைப் பல வகையாக அளித்தும் பெரும புகழ் வாய்ந்தனவாயும்,*

कृत्वा गोविन्दराजाय वस्त्राण्याभरणानि च।
महार्घान् च रत्नानि कनकनि बहूनि च॥ (८१)

*81. கோவிந்தராஜப் பெருமானுக்கு வஸ்த்ரங்கள், ஆபரணங்கள், விலையுயர்ந்த ஸ்வர்ணங்கள் முதலானவற்றை அளித்தும (ஸமர்ப்பித்தும்),*

उषित्वा सुचिर काल पुण्यक्षेत्रेऽतिपुण्यकृत्।
पशुपालवणिक् श्रेष्ठः पिण्डं दत्वा जगाम ह॥
वैकुण्ठभवनं मुक्तो जैमिने क्षेत्रवैभवात्॥ (८२)

*82. ஜைமினியே ! பசு பாலனம் செய்து வந்த, புண்யவானான இந்த சிறந்த வணிகன் இந்த புண்ணிய தலத்தில் அநேக காலம வசித்து, முக்தி பெற்றவனாக திருநாடான வைகுந்த நாட்டை அடைந்தான்.*

क्रिया समभिहारेण मुने क्षेत्रस्य वैभवम्।
पश्यतो मे मुनिश्रेष्ठ मनोल्लासं भवत्यहो॥ (८३)

*83. முனிவர்களில் சிறந்தவரே! முற்றிலும் நிறைவு பெறும் காரியங்களால் இந்த க்ஷேத்திரத்தின் பெருமையைக் காண்கிற எனக்கு மனதில் மகிழ்ச்சிப் பெருக்கு ஏற்படுகிறது.*

सदा वस्तुं मनोऽस्मिन् मे कृष्णक्षेत्रेऽभिवाञ्छति।

*இந்த க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் எப்போதும் வஸிக்க என் மனம் விரும்புகிறது.*

पल्लवेश इति ख्यातो राजर्षिरतिकीर्तिमान्।
श्रीमानात्मगुणोपेतः प्रजापालनतत्परः ।। (८४)

84. பல்லவேசன் எனப் பெயருடைய ராஜரிஷி ஒருவர் மிகவும் கீர்த்தியுடன் பிரஸித்தராக இருந்தார். அவர் ஸ்ரீமானாகவும், பரமாத்மாவிடம் மனதைச் செலுத்தியவராகவும், ராஜ்ய பாலனத்தில் ச்ரத்தை உடையவராயும்

निरामयो जितक्रोधस्सत्यवादी जितेन्द्रियः।
गोविन्दराजभक्तश्च देवतुल्यपराक्रम ।। (८५)

85. நோயற்றவனாகவும், உலகப்பற்றற்றவனாகவும் கோபத்தை ஜயித்தவனாயும், ஸத்யவாதியாயும், இந்த்ரிய நிக்ரஹமுடையவனாயும், தேவர்களுக்கு ஸமமான பராக்ரம முடையவனாயும், கோவிந்தராஜப் பெருமானிடம் பக்தியுள்ளவனாயும்,

कृतिश्रेष्ठस्तु गुणवान् धृतिमान् पुण्यवर्धनः।
कृत्याकृत्यविवेकज्ञ प्रजावान् पशुमानपि।। (८६)

86. செய்யும் காரியங்களில் திறமையுள்ளவனாயும், குணவானாகவும், தைர்யமுள்ளவனாயும், புண்ய சீலனாயும், செய்யச் கூடியதும், செய்யக் கூடாததுமான காரியங்களை உணர்ந்தவனாயும், மகாகளையும், பசுக்களையும், உடையவனாயும்,

नियमादिगुणोपेतः स शान्तो निर्मलोऽनघः।
कृष्णक्षेत्र समागम्य पुण्डरीकसरोजले।। (८७)

87. முறை தவறாதவனாயும், நியமங்களை அனுஷ்டிப்பவனாயும், சாந்தனாயும், குறையற்றவனாகவும, குற்றமற்றவனாயும், இருக்கிற அந்த பல்லவேசனென்ற அரசன் ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரமடைந்து புண்டரீக புஷ்கரிணியில்

स्नात्वा च विधिवत्कर्म कृत्वा धृत्वोऽर्ध्वपुण्ड्रकन्।
जप्त्वा चाष्टाक्षर दिव्य गरुडादीन् प्रणम्य च।। (८८)

88. ஸ்நானம் செய்து, சாஸ்திரமுறைப்படி நித்ய கர்மாக்களைச் செய்தும், திருமண் காப்புகளணிந்தும், திவ்யமான அஷ்டாக்ஷரஜபம் செய்தும், கருடன் முதலான தேவதைகளை ஸேவித்தும்

मणिमुक्ताप्रवालादि कनकानि बहूनि च।
महार्घाणि च रत्नानि वस्त्राण्याभरणानि च॥ (८६)

89. அநேக விலை மதிக்க முடியாத நிறைய ரத்தினங்கள், முத்துக்கள், பவளம், ஸ்வர்ணம் முதலானவற்றையும் வஸ்த்ரஙகளையும், ஆபரணங்களையும்,

दत्वा गोविन्दराजाय नत्वा मूर्ध्ना पुन. पुन.।
नृत्यन् गायन् स्तुवन्भक्त्या श्रीपतेस्तस्य सन्निधौ॥ (६०)

90. கோவிந்தராஜ பகவானுக்கு ஸமர்ப்பித்து, மீண்டும் மீண்டும் அவ்வப்போது அங்கங்கு வணஙகியும், (நிருத்யம், கானம் முதலியவற்றால் பக்தியோடு ஸ்தோத்ரம் செய்தும்) அந்த ஸ்ரீயப்பதியின் ஸந்நிதியில் பக்தியுடன் ஆடியும், பாடியும துதித்தும்

पूजयन्विधिवद्देवमन्नानि विविधानि च।
निवेदयित्वा विधिवद्देवदेवं जनार्दनम्॥ (६१)

91. தேவதேவனான ஜனார்த்தனனை முறைப்படி ஆராதித்து பல விதமான சித்ரான்னஙகளை நிவேதனம் செயது வைத்து

विप्रान् सन्तर्प्य दानेन विशेषेण च वैष्णवान्।
स राजा धर्ममार्गेणपाल यन्नब्धिमेखलाम्॥
भुक्त्वा तु भोगानखिलान् प्रपेदे वैष्णव पदम्॥ (६२)

92. தானத்தினால் பிராணமர்களையும, விசேஷமாக விஷ்ணு பக்தர்களையும் த்ருப்தி செய்வித்து, அந்த அரசன் தர்மமான முறையில ஸமுத்ரத்தை ஒட்டியாணமாக உடைய இந்த பூதலத்தை அரசாண்டும, எல்லாவித ஸுகபோகங்களை அனுபவித்தும் பிறகு வைகுந்த பதவியை அடைந்தான்.

जैमिनिः ஜைமினி

भगवन्मुनिशार्दूल! कृपापूर्णाक्षिमानस।
द्वैपायन! कृतार्थोऽस्मि त्वत्पादाम्बुजसेवया।। (९३)

93. ஹே பகவந்! முனிவர்களில் சிறந்தவரே ! கருணை உள்ளமும் கருணை நிரம்பிய குளிர்ந்த நோக்குள்ள கண்களும் உடையவரே ! த்வைபாயனரே ! தேவரீரது பாத ஸேவையால் க்ருதார்த்தனானேன்.

विचिकित्सा तु मे काचित् विद्यते मुनिपुङ्गव।
क्वचिदुक्तं महाभाग कृष्णक्षेत्रस्य वैभवम्।। (९४)

94. முனிவர்களில் சிறந்தவரே ! எனக்கு ஒர ஸந்தேஹம் ஏற்பட்டுள்ளது. அறிவில் சிறந்தவரே ! கண்டவாறே மோக்ஷம் கிடைக்கும் என க்ருஷ்ண க்ஷேத்ரத்தின் வைபவம் மோக்ஷத்தின் காரணமாக ஓரிடத்தில் சொல்லப்பட்டது.

प्रायश्चित्तमहं मन्ये कायक्लेशकरं परम्।

வேறோரிடத்தில் பாவங்களைப் போக்க நல்ல செயல்களாக ப்ராயச் சித்தங்கள் சொல்லப்பட்டுள்ளன.

मोक्षकारणमन्यत्र प्रायश्चित्तविधिः श्रुतः।
यदि मुक्तो भवेज्जन्तुः क्षेत्रदर्शनमात्रतः।। (९५)

95. பிராணிகளுக்கு இந்த க்ஷேத்திரத்தை தர்சித்த மாத்ரத்திலேயே முக்தி கிடைக்குமேயானால் பிராயச்சித்த விதிகள் சொல்லப்பட்டவை வெறும் உடலை வருத்தக் கூடிய செயலாகும் என நான் கருதுகிறேன்.

व्यासः வியாஸர்

परं गुह्य यथा पृष्ट वक्ष्यामि शृणु जैमिने

ஜைமினியே ! மிகவும் ரஹஸ்யமானதைத் தங்களால் கேட்கப்பட்டதைச் சொல்கிறேன். கேட்பீராக.

कृष्णक्षेत्रं समागम्य दृष्ट्वा गोविन्दनायकम्।
न याति मनुजो घोरं जननीजठरं पुनः ।। (९६)

96. ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தை அடைந்து ஸ்ரீ கோவிந்தராஜனை ஸேவித்த மனிதன் மறுபடி தாயின் வயிற்றில் பிறப்பதில்லை. அவனுக்கு மறுபிறவி என்பது இல்லை.

अस्मिन्नंशे विमतिः कर्त्तव्या न कदाचन।
अज्ञानाद्यत्कृतं पाप लघुमोहादथापि वा।। (९७)

97. இந்த விஷயத்தில் மாறுபாடான எண்ணம் ஒரு போதும் கொள்ள வேண்டாம். அறியாமையாலோ அல்லது சிறுப்ரமையினாலோ செய்யப்பட்ட பாபம்.

अस्मात्पापात्+ विनिर्मुक्तः कृष्णक्षेत्रस्य दर्शनात्।
वैकुण्ठमतुलं याति जन्तुर्वा मनुजोऽपि वा।। (९८)

98. ஸ்ரீ க்ருஷ்ண க்ஷேத்திரத்தை தரிசிப்பதாலேயே இந்த பாபங்களிலிருந்து விடுபட்டு மனிதனாயிருந்தாலும் பிராணியாக இருந்தாலும், ஈடு இணையற்ற வைகுந்தத்தை அடைகிறான்.

क्षेत्रान्तरेषु यद्यत्नं सार्थमल्पप्रयत्नतः।
यस्योत्पन्नं मुने तस्य प्रायश्चित्तं हि दर्शनम्।। (९९)

99. யாதொரு மனிதனுக்கு இதர க்ஷேத்திரங்களில் சிறிது முயற்சி செய்து கிடைக்கக் கூடிய கர்ம பலன் இந்த க்ஷேத்திரத்தை தரிசனம். செய்வதால் மட்டுமே கிடைத்து விடுகிறது. அவனுக்கு இந்த க்ஷேத்திரம் ப்ராயச்சித்தமாக வினைப்பயனைத் தீர்த்து வைப்பதாய் அமைகிறது.

जानीहि सापि विरजा सापि निर्वाणपद्धतिः।
कृष्णक्षेत्रे समुद्भूतमहापापप्रशान्तये।। (१००)

*100. மோக்ஷமார்க்கத்தில் 'விரஜா' நதியாகவே க்ஷேத்ரதர்சனம் உள்ளது என்பதை அறிவீராக.*

प्रायश्चित्तविधिं विद्धि जैमिने लघुमार्गतः।
सत्यं सत्यं पुनस्सत्यं बाहुमुद्धृत्य घुष्यते।। (१०१)

*101. ஜைமினியே ! ஸுலபமான வழியில் செய்யக்கூடியதான ப்ராயச்சித்த முறையை அறிந்து கொள்வீர். க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் ஏற்படக்கூடிய மஹா பாபங்களைப் போக்குவதற்காகவே இது மிக மிக ஸத்யமானது என்று கைகளை உயர்த்தி உரக்க சொல்லப்படுகிறது.*

कृष्णक्षेत्रात्परं क्षेत्रं मुक्तिक्षेत्रं न विद्यते।
गोविन्दराजनिलयात् क्षेत्रमन्यन्न विद्यते।। (१०२)

*102. க்ருஷ்ண க்ஷேத்திரம் தவிர முக்தியைத் தரக்கூடிய வேறு க்ஷேத்திரங்கள் இல்லை. கோவிந்தராஜனின் ஆலயம் தவிர சிறந்த ஆலயம் வேறு இல்லை.*

अथापि संसारबिलं प्रविशन्ति नराधमाः।
बुद्धिपूर्वं महापापं कुर्वते मूढचेतसः।। (१०३)

*103. அப்படியிருந்தும் அதர்மங்களான மனிதர்கள் ஸம்ஸாரமாகிற பெருங்குழியில் விழுகிறார்கள். மூடபுத்தி உடையவர்களாக நல்ல நினைவுடனேயே பெரிய பாபங்களைச் செய்கின்றனர்.*

तेषामज्ञाननिवृत्तिर्जायते दर्शनाद्धरेः।
अहो बत महानेषः प्रमादो धीमतामपि।। (१०४)

*104. அவர்களுக்கு ஸ்ரீஹரியினுடைய தர்சனத்தாலேயே அஞ்ஞான நிவாரணம் உண்டாகிறது. அறிவாளிகளுக்கும் இது ஒரு மஹத்தான ஏமாற்றம், அறியாமை, மயக்கம். இது மிகவும் அச்சரியமானது.*

मुक्तिक्षेत्रं समासाद्य पुनः पापानि कुर्वते।
तेषा वृत्तिमहो कृत्वा स्वान्तमुद्वेजितं मम।। (१०५)

105. முக்தி க்ஷேத்திரமான ஸ்ரீ க்ருஷ்ணக்ஷேத்திரத்தை அடைந்த பிறகும் (மனிதர்கள்) பாபங்களைச் செய்கின்றனர். அவர்களது செய்கைகளை எண்ணி எனக்கு மிகவும் மனவருத்தம் ஏற்படுகிறது.

अहो कष्टमहो कष्ट न कर्तव्यं कदाचन।
कीर्तनं पापकर्तृणां पापदं मूढचेतसाम्।। (१०६)

106. மூடபுத்தியுள்ள பாபம் செய்கிறவர்களை நினைப்பதும் அவர்களைப் பற்றி பேசுவதும், பாபத்தை உண்டு பண்ணும். அதனால் அவற்றைச் செய்யக்கூடாது.

देवब्रह्मस्वहरणं क्षेत्रेऽस्मिन्न कदाचन।
ज्ञानतोऽज्ञानतो वापि कर्तव्यपापभीरुभिः।। (१०७)

107. பாபத்துக்கு (அதர்மகாரியங்களுக்கு) பயந்தவர்களாலே தேவதைதகளுடையவும், தைவத்தன்மையுடையவர்களுடையவும் பொருள்களை அபஹரிப்பதை இந்த க்ஷேத்திரத்தில் தெரிந்தோ தெரியாமலோ ஒரு போதும் செய்யக் கூடாது.

क्षेत्राणि धनधान्यानि कृष्णक्षेत्रनिवासिनाम्।
यो हरत्यतिमूढात्मा सर्पभुजायते नरः।। (१०८)

108. ஸ்ரீ க்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வஸிப்பவர்களுடை தனதான்யங்களை அபஹரிக்கும் மனிதன் அதிமூடனாக ஆகிறான்.

क्षेत्रे देवस्वहर्तॄणामेतस्मिन् घोरयातनाः।
अकैङ्कर्यपराणां च यातना नरकं ध्रुवम्।। (१०६)

109. இந்த க்ஷேத்திரத்தில் தைவத்தின் பொருள்களை அபஹரிப்பவர்களுக்கு இவ்வளவு கொடூரமான நரகபாதை ஏற்படுகிறது. பகவத் பாகவதர்களின் தொண்டு செய்யாதவர்களுக்கு நரகம் நிச்சயம்.

देवब्रह्मस्वहर्तारौ क्षेत्रेऽस्मिन् पशुवृत्तिकौ।
पुरा दुर्मेधसौ डम्भौ देवरातश्च दुर्जयः॥ (११०)

*110.* முன்னொரு காலத்தில் இந்த க்ஷேத்திரத்தில் தேவராதன், துர்ஜயன் என்னுமிருவர், தேவர்களுடையவும், பிராமணர்களுடையவும், பொருள்களை அபஹரிப்பவர்களாயும், மிருகத் தொழில்களை புரிபவர்களாயும், கெட்ட புத்தியுடையவர்களாயும், டம்பம் மிக உள்ளவர்களாயும் இருந்தார்கள். அதனால்

जातौ हि गर्दभौ चोभौ+ इति पौराणिकी कथा।
तस्माद्देवद्विजातिस्वहरणं मा क्रियाः क्वचित्॥ (१११)

*111.* அந்த இருவரும் கழுதையாகப் பிறந்தார்கள் என்று புராணத்தில் உள்ள கதை. அதனால் ஒரு போதும் தேவர்களுடையவும் பிராமணர்களுடையவும் பொருள்களை அபஹரிக்கக் கூடாது.

जैमिने त्वं क्वचित्पापं क्षेत्रेऽस्मिन् मुक्तिदायके।
मोहान्माचर कल्याणसदाचारपरो भव॥ (११२)

*112.* ஆகவே நீர் முக்தியளிக்கும் இந்த க்ஷேத்திரத்தில் பிரமையால் சிறிது பாபம் கூட செய்யாதீர். எப்போதும் மங்களகரமான ஸத்கர்மாக்களைச் செய்வீராக.

मुक्तिक्षेत्रमिदं प्राप्य गोविन्दं प्रणमेद्यदि।
न यान्ति नरकं वापि मातुर्वा जठरं पुनः॥ (११३)

*113.* முக்தியளிக்கும் இந்த க்ஷேத்திரத்தை அடைந்து, ஸ்ரீகோவிந்தராஜப் பெருமானை ஒருவன் ஸேவிப்பானேயாகில், அவன் ஒரு போதும் நரகத்தை அடைவதில்லை. தாயின் வயிற்றில் மீண்டும் பிறப்பதில்லை.

क्षेत्रोत्तमेऽस्मिन् सति मुक्तिदे मुने भवांबुधौ हि प्रपतन्ति ये नराः।
अहो बताज्ञानतमोवृतानहं जानामि तान्मर्त्यपशून्विगर्हितान्। (११४)

*114.* ஹே முனிவரே ! மோக்ஷத்தை அளிக்கவல்ல இந்த உத்தமமான திவ்ய தேசம் இருக்கும் போது எத்தனையோ மனிதர்கள் ஸம்ஸாரக் கடலில் மூழ்கிவிடுகின்றனர். மிக்க வருத்தம் அவர்களை அக்ஞான இருளில் அகப்பட்டிருக்கிற கெட்ட மானிடப்பசுக்களாக நான் நினைக்கிறேன். அவர்களைப் பற்றி என்ன சொல்லட்டும்.

क्षेत्रोत्तमं संसृतिनाशकरणं नात्यागतं येन हि तस्य जैमिने।
किं विद्यया किं तपसा व्रतेन किं शास्त्रपाठेन किमध्वरेण॥ (११५)

*115.* உத்தமமான திவ்யதேசம் ஸம்ஸார ச்ரமங்கள் அனைத்தும் அழியக் காரணமாக உள்ளது. ஜைமினி முனிவரே ! இதனை எவன் வந்த அடையவில்லையோ அவனின் கல்வியினாலோ, தபோபலத்தினாலோ, வ்ரதங்களை அனுஷ்டிப்பதாலோ சாஸ்த்ர பாடங்களை கற்பதாலோ அல்லது யாகம் முதலானவற்றாலோ என்ன பயன்?

पापाटवीदाहमहो परं शुभं क्षेत्रं महापुण्यसमृद्धिकरणम्।
न जानते मूढधियस्तु जैमिने त एव शोच्या बत किं वदाम्यहम्॥ (११६)

*116.* ஜைமினியே ! அதிகமான புண்ணியங்களின் நிறைவுக்குக் காரணமான இந்த திவ்ய தேசம் பாபங்களை போக்கடிக்கிறது. அதிக ஶுபத்தையும கொடுக்கிறது. மூட புத்தியுள்ளவர்கள் இதனை அறிவதில்லை. அதனால் இவர்களை நினைத்து வருந்த வேண்டியுள்ளது. இவர்களைப் பற்றி நான் என்ன சொல்வேன்.

गोविन्दराजो भगवान् हि जैमिने न सेव्यते क्षेत्रवरेऽघनाशने।
पुराणवेदागम शास्त्रमस्तक श्रुतिस्मृतिज्ञानधनेन कि फलम्॥ (११७)

*117.* ஜைமினியே ! பாபங்களை நாசம் செய்கிற இந்த சிறந்த க்ஷேத்திரத்தில் பகவான் கோவிந்தராஜன் ஸேவிக்கப்படவில்லையானால் புராண, வேத, ஆகம, சாஸ்த்ரங்களில் தலை சிறந்து விளங்கும், ச்ருதி, ஸ்ம்ருதி, ஞானம், செல்வம், முதலியவற்றைச் ஸம்பாதிப்பதால் என்ன பிரயோஜனம்?

यागादिकर्मव्रततीर्थयात्रा ज्ञानानि निश्रेयसकरणानि।
पश्यन्ति ये मन्दधियस्तु जैमिने क्षेत्रोत्तमे सत्यपि ते हि जन्तवः॥

*118.* மந்த புத்தியுள்ள ஜனங்கள் இந்த உன்னதமான திவ்ய தேசத்தில் இருந்தும், யாகாதி கார்யங்களையும், வ்ரதம், தீர்த்தயாத்திரை செய்தல், ஜ்ஞானம் ஸம்பாதித்தல், முதலானவற்றை மோக்ஷத்தைப் பெறுவதற்குக் காரணமாக எண்ணுகின்றனர். அவர்கள் பிராணிகளே அறிவிலிகளே

स्तुत्यश्च सेव्यश्च स एव भूतले दृश्यश्च सर्वैरपि सद्गुणाश्रयः।
योऽस्मिन् सदा क्षेत्रवरेऽघनाशने गोविन्दराजं भजते हि जैमिने॥ (११६)

*119.* ஜைமினியே! எவன் ஒருவன் பாபங்களை நாசம் செய்கிற இந்த திவ்ய தேசத்தில் எப்போதம் கோவிந்தராஜனை ஸ்மரிக்கிறானோ, ஸேவிக்கிறோனோ, நல்ல குணமுடைய அவனே இந்த பூதலத்தில் எல்லோராலும் துதிக்கத் தக்கவனாயும், ஸேவிக்கத்தக்கவானயும், காணத் தகுந்தவனாயும் இருக்கிறான்.

न कमयेऽहं भुवनाधिपत्यं ऐशं पदं ब्रह्मपद पुनस्तथा।
गोविन्दराजस्य पुरे तु जैमिने कांक्षे सदा वासमघौघनाशने॥ (१२०)

*120.* ஜைமினியே! நான் இந்த பூவுலகத்துக்குச் சக்ரவர்த்தியாவதை விரும்பவில்லை. பரமேச்வரனின் இருப்பிடத்தையோ, ப்ரம்ம பதவியையோ ஆசைப்படவில்லை. ஆனால் பாபங்களை எல்லாம் அழிக்கிற இந்த கோவிந்தராஜனுடைய க்ஷேத்திரத்தில் எப்போதும் வஸிப்பதையே விரும்புகிறேன்.

गोविन्दराजपुरजाः पशुपक्षिकीटाः धन्यास्त एव तृणपादपगुल्मपुञ्जाः।
ये वा मुने द्विजवरप्रमुखास्तु लोके गोविन्दराजपुरवासरता मनुष्याः॥
(१२

*121.* கோவிந்தராஜபுரமென்னும் இந்த திவ்ய க்ஷேத்திரத்தில் பிறந்துள்ள மிருகங்கள், பறவைகள், புழு, பூச்சிகள், புல், செடி, கொடி, மரங்களின் புதர்கள் முதலியவை புண்ணியம் செய்தவையாகும். பிறவிப்பயன் பெற்றவையாகும். அதேபோல இந்த லோகத்தில் இந்த கோவிந்தபுரக்ஷேத்திரத்தில் வசிக்கிற மனிதர்களும், பிராமண ச்ரேஷ்டர்களும் கூட புண்ணியம் செய்தவர்களே.

कदापि यास्याम्यहमुत्तमन्त्विदं क्षेत्रं रमानाथविभूषितं त्विदम्।
द्रक्ष्यामि गोविन्द विभुं कदा मुने भोगीशभोगायितभोगशायिनम्॥ (१२२)

122. நான் லக்ஷ்மீகாந்தனான கோவிந்தராஜனால் அலங்கரிக்கப்படுகிற இந்த உத்தமமான திவ்யக்ஷேத்திரத்தை எப்போத அடையப் போகிறேன்? ஸர்ப்பராஜனான ஆதிசேஷன் மீது ஸுகமாகப் பள்ளி கொண்டுள்ள இந்த கோவிந்தராஜன் என்னும் ப்ரபுவை எப்போது காணப் போகிறேன்.

वालार्कतुल्यामलपीतवाससं कालाम्बुदश्यामलकोमलोज्वलम्।
मन्दस्मितं चारुकिरीटकुण्डलं द्रक्ष्यामि गोविन्दविभुं कदा मुने॥ (१२३)

123. இளஞ் ஸூரியனைப் போல் பிரகாசிக்கிற பீதக வாடை பட்டாடை அணிந்தவனும், வர்ஷா கால மேகம் போல் கரிய நிறத்துடன் அழகாக ம்ருதுவாக ப்ரகாசிக்கின்றவரும், புன் சிரிப்பு உடையவரும், அழகான கிரீட குண்டலமணிந்தவருமான கோவிந்தராஜப் பெருமானை எப்போது காணப் போகிறேன்.

द्रक्ष्ये कदा बन्धुरकन्धराननं श्रीजुष्टमुक्ताभरणं श्रियोज्ज्वलम्।
गोविन्दराजं कमलालयापतिं श्रीचित्रकूटे मम नाथमक्षरम्॥ (१२४)

124. மிக அழகான கழுத்தையும்., முகத்தையும் உடையவரும், ஒளியும், அழகும், மிகுந்த முத்துமாலை அணிந்தவரும், திருமார்பில் மஹாலக்ஷ்மியோடு பிரகாசிப்பவரும், ஸ்ரீ தேவியின் பதியும், எப்போதும் விளங்குபவரும், என்னுடைய நாதனுமான ஸ்ரீகோவிந்தராஜனை திருச்சித்ரகூடத்தில் எப்போதுகாணப் போகிறேன்.

उदारवक्षस्थलशोभिकौस्तुभं मुखश्रियोक्षिप्तसरोरुहश्रियम्।
कृपाकटाक्षाश्रितपालनोद्यतं द्रक्ष्यामि गोविन्दविभुं कदा मुने॥ (१२५)

125. அகன்ற மார்பில் திகழ்கின்ற கௌஸ்துப ரத்தினத்தை உடையவரும், தாமரை அழகையும் விஞ்சியதான உயர்ந்ததான முக சாந்தியை உடையவரும், கருணை நிரம்பிய கண்களால் தன்னை ஆச்ரயித்தவர்களை விரும்பி ரக்ஷிப்பவருமான கோவிந்தராஜ ப்ரபுவை எப்போது காண்பேன்?

द्रक्ष्ये कदाहं तरुणाङ्घ्रिदीधितिच्छटासमुन्निद्रसरोरुहोपमम्।
गोविन्दराजस्य पदाम्बुजद्वयं श्रीचित्रकूटे भवबन्धनाशनम्॥ (१२६)

126. நன்கு மலர்ந்த குவியாத தாமரை மலர்கள் போன்றிருக்கும் திருவடிகளின் ஒளிப் பெருக்கால் ஸ்ரீசித்ரகூடத்தில் ஸம்ஸாரபந்தத்தை நீக்கி அருள் புரிந்து கொண்டிருக்கிற ஸ்ரீகோவிந்தராஜனின் தாமரை மலரடிகளை எப்போது காணப்போகிறேன்.

रावशशाङ्कप्रतिमं कृपामृतप्रवाहिनेत्रोत्पलकान्तिपूरितम्।
गोविन्दराजस्य मुखाम्बुजं मुने द्रक्ष्ये कदाहं वरचित्रमण्डपे॥ (१२७)

127. பௌர்ணமி சந்த்ரனின் ஒளியைப் போன்று மகிழ்விப்பதாயும், கருணையென்னும் அம்ருதத்தைப் பொழிகிற உத்பலமலர் சோபையுடைய கண்களை உடையவருமான கோவிந்தராஜனின் திருமுக கமலத்தை, முனிவரே ! திருச்சித்ர மண்டபத்தில் நான் எப்போது காண்பேன்.

अपारसंसारभवार्तिनाशनो भवेत्कदा दृष्टिपथे मम प्रभुः।
गोविन्दराजो भगवान्हि जैमिने सिञ्चेत्कदा मामभिवीक्षणामृतैः॥ (१२८)

128. எல்லையற்ற இந்த ஸம்ஸார ஸாகரத்தின் துன்பங்களை நாசம் செய்கிற என்னுடைய யஜமானனான ப்ரபு என் கண்களிலே தோன்றி எப்போது என்னைக் கடாக்ஷிக்கப் போகிறார்? ஜைமினியே ! பகவான் கோவிந்தராஜன் என்னை எப்போது தன் கண்களால் குளிர்ந்து நோக்கும் அம்ருதத்தால் நனைக்கப் போகிறார்? குறைகள் நீங்கிக் கண்ணாரக் கண்டு களிக்கும்படி செய்யப் போகிறார்?

कामादिषड्वर्गकुलाङ्कुरावतीं (शायितैः) देहात्मवादिष्वतिनिन्दितं बत।
पश्येत्कदा माममृताभिवर्षिभिः गोविन्दराजस्य कटाक्षवीक्षणैः॥ (१२९)

129. காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யம் எனப்படும் ஆறுவகையான களைப்பயிர்களின் முளைகளை வேரோடு பெயர்க்கும் மண்வெட்டி அல்லது அந்த ஆறு பக்வர்கள் என்ற யானைகளுக்கு மாவெட்டி (அங்குசம்) போன்றதாயும் அம்ருதத்தை வர்ஷிக்கிற கோவிந்தராஜனின் கருணை நிறைந்த கண்களின் குளிர்ந்த நோக்குகளாலே உடலை உயிராக நினைத்துப் பேணி வளர்க்கும் கடை கெட்ட ஸம்ஸாரியான நான் எப்போது பார்க்கப்பட போகிறேன்.

असाधुवृत्तं विषयाभिमानिनं दुर्मेधसं दुर्नयदुर्वितण्डकम्।
मां चित्रकूटाधिपतिस्तु वीक्षणैः पश्येत्कदा चोत्पलकान्तिधूननैः ॥ (१३०)

*130. தீச்செயல் செய்பவனும் சீல (நல்லொழுக்க) மில்லாதவனும், கெட்டபுத்தி, பணிவில்லாமை, விதண்டாவாதம் முதலிய (துர்க்) குணங்களைப் பெற்றிருக்கும் என்னை திருச்சித்ரகூடாதிபதியான கோவிந்தராஜன் உத்பல (அல்லி) மலரின் காந்தியை விஞ்சும் தன் கண்களினின்றும் வீசுகிற குளிர்ந்த நோக்கால் எப்போது என்னைக் காண்பான்.*

लज्जाविहीने मयि निष्कृपेऽशुचौ कलत्रपुत्रादिजनादिवञ्चके।
पापाश्रये दुर्गुणसागरे कदा गोविन्दराजो विनिवेशयेत्कृपाम् ॥ (१३१)

*131. லஜ்ஜை, கருணை, சுத்தம் இல்லாது, மனைவி, மக்களை ஏமாற்றித் தீச்செயலையே செய்யும் துர்க்குணக்கடலான என்னிடத்தில் கோவிந்தராஜன் எப்போது க்ருபை செய்வான்.*

श्रीचित्रकूटप्रभुरिन्दिराधवः श्रीभूमिनीलाश्रितपादपङ्कजः।
अनादिपापाहितजनामोहितं सिञ्चेत्कदा वीक्षणसीकरैर्मुने ॥ (१३२)

*132. திருச்சித்ரகூடாதிபதியான ப்ரபு, மஹாலக்ஷ்மியின் பதி, ஸ்ரீபூமிநீளா தேவிகாளல் வருடப்பட்ட (பிடிக்கப்பட்ட) தாமரை மலர் போன்ற பாதங்களை உடைய கோவிந்தராஜன்*

क्षेत्रोत्तमेऽस्मिन् वसतां हि जैमिने नरोत्तमाना पदपद्मरेणवः।
मन्मूर्ध्नि सत्यं प्रवदामि किङ्करो भवामि तेषामहमात्मवित्तम. ॥ (१३३)

*133. முனிவரே ! அனாதி காலமாகச் செய்த பாபத்தால் பிறப்பிலேயே உண்டான மோஹத்தை கொண்ட என்னை பகவான் தன்னுடைய கடாக்ஷமாகிற அலைகளாலே எப்போது ஈரப்படுத்துவான்? குளிர நன்மை அடையச் செய்வான்?*

134. ஜைமினி முனிவரே ! ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மை நிலைகளையும். பெருமைகளையும் நன்கு அறிந்த அடியேன், இந்த க்ஷேத்திரத்தில் வஸிக்கிற உத்தமமான மனிதர்களுடைய பாததூளிகளை என் சிரஸின் மீது ஏற்றுக் கொள்கிறேன் என்பதை ஸத்யமாகச் சொல்கிறேன். ஆத்ம ஶுத்தியுடன் நான் அவர்களின் ஸேவகனாக இருக்கிறேன்.

द्वैपायनस्तु भगवानथ चित्रकूटमाहात्म्यमद्भुतमृषिप्रवराय चोक्त्वा।
श्रोतव्यमस्ति यदि पुत्रक तच्छृणुत्वं वक्ष्यामि ते मुनिवरो निजगाद भूय ॥

135. பகவான் த்வைபாயன முனிவரான வியாஸர் அத்யத்புதமான இந்த சித்ரகூட மாஹாத்மியத்தை ஜைமினி முனிவருக்குச் சொல்லிவிட்டு. மேலும் அவரைப் பார்த்து முனிவர்களில் சிறந்தவரே ! மகன் போன்றவரே கேட்க வேண்டுமென்று இருந்தால் கேளும், மீண்டும் அவற்றைச் சொல்லுகிறேன். கேட்பீராக என்று சொன்னார்

इति 'कृष्णक्षेत्रमाहात्म्यम्' नाम अष्टमोऽध्याय

க்ருஷ்ணக்ஷேத்ர மாஹாத்ம்யம் என்ற எட்டாம்

அத்யாயம் நிறைவுற்றது.

## अथ नवमोऽध्यायः ஒன்பதாம் அத்யாயம்

जैमिनिः ஜைமினி ரிஷி கூறுகிறார்.

भगवन्पञ्च तीर्थानि सन्तीति भवतः श्रुतम्।
तेषां स्थानानि नामानि ब्रूहि मे भक्तवत्सल।। (१)

1. ஸ்வாமிந் ! ஐந்து வித புண்ணிய தீர்த்தஙகள் இங்கு உள்ளன என்று தஙகளால் கூறப்பட்டது. பக்தவத்ஸலரே ! அவற்றின் பெயரையும் இருப்பிடங்களையும் தெரிவிக்கப் ப்ரார்த்திக்கிறேன்.

व्यासः வ்யாஸர் கூறுகிறார் ·

जैमिने! पञ्चतीर्थानां नामानि विविधानि च।
स्थानानि शृणु मत्तस्त्वमप्रमत्तेन चेतसा।। (२)

2. ஜைமினியே ! ஐந்து வித புண்ணிய தீர்த்தங்களுக்கும் வெவ்வேறு பெயர்கள், இடங்கள் உள்ளன. சிதறாத மனமுடையவராக அவற்றின் பெயரையும், இடங்களையும் கேட்பீராக.

कृष्णक्षेत्रस्य मध्ये तु पुण्डरीकसरोवरम्।
तीर्थानामुत्तम तीर्थं प्रथमं कलिनाशनम्।। (३)

3. க்ருஷ்ண க்ஷேத்திரத்தின் நடுவில் புண்டரீக தீர்த்தம் உள்ளது. இங்குள்ள தீர்த்தங்களனைத்திலும் இது மிகவும் உயர்ந்தது. முதலானது. மேலும் கலியுகத்தால் ஏற்படும் தோஷங்களை நீக்க வல்லது.

तच्च कैबेरदिग्भागे गोविन्देशस्य शार्ङ्गिणः।
तस्य तीर्थस्य पारे तु कण्वो नाम महामुनिः।। (४)

4. ஶார்ங்கபாணியான கோவிந்தராஜனுக்கு வடக்குத் திசையில் இந்த புண்ணிய தீர்த்தமுள்ளது. அதன் கரையில் கண்வர் என்னும் பெயர் கொண்ட மஹா முனிவர்

मोक्षकमस्तपस्तप्तुं श्रीमन्नारायणं प्रति।
छायार्थमात्मनस्तस्य तिल्लीवृक्षमकल्पयत्॥ (५)

*5. மோக்ஷத்தை விரும்பி ஸ்ரீமந்நாராயணனைக் குறித்து தபஸ் செய்வதற்காக தனக்கு நிழல் தருவதற்காக தில்லீ வ்ருக்ஷத்தை ஸ்ருஷ்டித்தார்.*

अद्यापि च महापुण्य दृश्यते च तरुर्महान्।
तस्यावलोकान्मर्त्याः प्राप्नुवन्ति मनोरथान्॥ (६)

*6. இப்போதும் மிகவும் புண்ணியமான மிகப் பெரிய அந்த வ்ருக்ஷம் காணப்படுகிறது. அதை தர்சிக்கிற மானிடர்கள் தங்கள் விருப்பங்கள் நிறைவேறப் பெறுகிறார்கள்.*

भवन्ति निर्मलस्वान्ताः सर्वे निर्मुक्तकिल्बिषाः।
तस्मात्तद्वृक्षमासाद्य प्रणमेद्भक्तिसंयुतः॥ (७)

*7. மேலும் அழுக்காறற்ற மனமுடையவர்களாகவும், பாபங்களினின்றும் விடுபட்டவர்களாகவும் ஆகிறார்கள். ஆகையால் பக்தியுடன் அந்த வ்ருக்ஷத்தையடைந்து அதனை ஸேவிக்க வேண்டும்.*

तस्य मूले तु तत्सर्वं जपहोमार्चनादिकम्।
दानं श्राद्धं महादानमनन्तं फलदं भवते॥ (८)

*8. அந்த மரத்தின் அடியில் ஜபம், ஹோமம், அர்ச்சனை முதலியவற்றையும், தானம், ச்ராத்தம், கன்யாதானம், மஹாதானம் முதலியவற்றையும் செய்வார்களேயாகில் நிறைய பலன்கள் உண்டாகும்.*

तिल्लीवृक्षं विना तीरं न भवेद्वै कदाचन।
तत्र कण्वो महातेजाः तपस्तप्त्वा तु दुष्करम्॥ (९)

*9. இந்தத் தீர்த்தத்தின் கரையில் தில்லீ வ்ருக்ஷம் இல்லாமல் ஒருபோதும் இருந்ததில்லை. அங்கு அதிக தேஜஸ்வியான கண்வர் மிகவும் கடுமையான தபஸ் செய்து,*

अर्चयित्वा तु विधिवद्देवदेवं जनार्दनम्।
पुण्डरीकदलैर्भक्त्या श्रीपतिं लोकनायकम्॥ (१०)

10. முறைப்படி தேவாதி தேவன், லோக நாயகன், ஸ்ரீயப்பதியான ஜனார்த்தனனை தாமரைப் புஷ்ப இதழ்களாலே பக்தியுடன் அர்ச்சித்து

श्रीमदष्टाक्षरैस्सूक्तैः पावनैस्तत्सरोजलैः।
कृत्वाभिषेकं श्रीशस्य भक्तियुक्तेन चेतसा॥ (११)

11. ஸ்ரீமதஷ்டாக்ஷரம் வேதஸூக்தங்களும் சொல்லி பாவமான இத்தடாக தீர்த்தத்தால் பக்தியுள்ளத்துடன் பகவானுக்குத் திருமஞ்ஜனம் செய்து

वैकुण्ठमतुलं लेभे कण्वो नाम महातपाः।
तंदाप्रभृति तत्तीर्थं पुण्डरीकसरस्त्विति॥ (१२)

12. அதிக தபஸ்வியான கண்வமுனிவர் ஒப்பிலா வைகுண்டத்தை அடைந்தார். அது முதல் கொண்டு அந்த தீர்த்தம் புண்டரீக (புஷ்கரிணீ) என்பதாக

विख्यातं सर्वलोकेषु विष्णुपादाम्बुसंगता।
विष्णुपद्येति नाम्ना वै प्रथितं लोकपावनम्॥ (१३)

13. பகவானுடைய திருவடிகளை விளக்கின தீர்த்தத்தின் ஸம்பந்தத்தால் எல்லா உலகத்திலும் புகழ் பெற்றது. விஷ்ணு பத்யா (பகவான் திருவடியில் உண்டானது) என்னும் பெயராலும் லோக பாவனமாக ப்ரஸித்தமாகிவிட்டது.

तीर्थानामुत्तमं तीर्थं पुण्डरीकसरोवरम्।
प्रसन्नसलिलं हृद्यं+अप्रमेयगुणाश्रयम्॥ (१४)

14. இந்த புண்டரீக தீர்த்தம் (புஷ்கரிணீ) புண்ணிய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது. தெளிந்த நீரை உடையதாயும், மனோஹரமாயும். அனைத்து ஸந்தர்ப்பங்களிலும் அளவில்லா நற்குணம் நிறைந்ததாயும்

सौगन्धिकैश्च कुमुदैः पङ्कजैरुपशोभितम् ।
हंसकारण्डवाकीर्णं नीलोत्पलविराजितम् ॥ (१५)

15. நல்ல வாஸனையோடு கூடிய ஆம்பல், தாமரை புஷ்பங்களால் சோபையுடையதாயும், ஹம்ஸம் மற்றும் வாத்து போன்ற பறவைகளையுடையதாயும், நீலோத்பல புஷ்பங்கள் நிரம்பியதாயும்

सारसैः चक्रवाकैश्च मञ्जुनादैश्च भासुरम् ।
जलवासिभिरन्यैश्च पक्षिभिर्निबिडं शुभम् ॥ (१६)

16. இனிமையான குரலுடைய கொக்கு, சக்ரவாக பக்ஷிகளால் பிரகாசிப்பதாயும், தண்ணீரில் வசிக்கிற வெவ்வேறு பறவைக் கூட்டங்களால் நிறைந்து அழகாயும்

सौन्दर्यलहरीजुष्टं सर्वप्राणिमनोहरम् ।
सुगन्धिफलपुष्पाढ्यैः पारपुष्पै(वृक्षै)रलङ्कृतम् ॥ (१७)

17. அழகான அலைகளால் நிறைந்ததாயும், எல்லாப் பிராணிகளும் விரும்பத்தக்கதும், வாஸனை நிறைந்த பழங்கள் புஷ்பங்களை உடையதாயும், கரையில் உள்ள மரங்களால் எதிர்கரை வரையிலும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டும்

कलापिकेकालापैश्च कोकिलाननिस्वनैः ।
कमनीयं श्रिया जुष्टं प्रशान्तमुखसेवितम् ॥ (१८)

18. மயில்களின் கேகா என்ற அகவுதல்களாலும், கூவுகின்ற குயில்களின் இனிமையான குரல்களாலும் விரும்பத்தக்கதாயும், அழகு நிறைந்து லட்சுமி கரமாயும், அமைதியான சூழ்நிலையாகக் கொண்டதாயும், சாந்தி நிறைந்த உள்ளமும், முகமும் பெற்ற பெரியவர்களால் விருப்புடன் ஸ்நானம் செய்வித்துப் பூஜிக்கப்பட்டதாயும்

कन्दमूलफलोपेतं समित्कुशचयाश्रयम् ।
सिद्धविद्याधरगणैर्यक्षगन्धर्वकिन्नरैः ॥ (१९)

19. கிழங்குகள், வேர்கள், பழங்கள், நிரம்பியும், ஸமித்துக்ள், தர்ப்பங்களின் இருப்பிடமாயும், ஸித்த வித்யாதர கணங்களாலும், யக்ஷ கந்தர்வ, கின்னரர்களாலும்

पिशाचोरगगुह्यैश्च क्वचित्परिवारितम् ॥

சில இடங்களில் பிசாசங்கள், பாம்புகள் முதலிய துஷ்ட பிராணிகளின் கூட்டஙகளை உடையதாயும் குஹ்யர்கள் நிறைந்ததும்

अन्यत्र देववृन्दैश्च सेवितं स्मरयूथपैः ।
तपश्चरणसंसिद्धमुनिमण्डलसेवितम् ॥ (२०)

20. மேலும் சில இடங்களில் தேவர்களாலும், வாலியர் கூட்டங்களாலும், ஸ்துதிபாடகர்களாலும், த்வம் செய்து பேரின்பம பெற்ற முனிவர்களின் கூட்டங்களாலும் ஸேவிக்கப்பட்டும்

परत्र तापसैश्शुद्धैर्वालखिल्यैश्च सेवितम् ।
वैखानसैर्महाभागैः क्वचिच्च समुपासितम् ॥ (२१)

21. சில இடங்களில் பரிசுத்தமான தபஸ்விகளாலும், வால்கில்யர்ஷிகளாலும் ஸேவிக்கப்பட்டும், ச்ரேஷ்டமான வைகானஸர், வானப்பரஸ்தர்களால் சில இடங்களில் ஆராதிக்கப்பட்டும்

चन्द्रादिव्यग्रहगणैः नक्षत्रैरधिवासितम् ।
सर्वत्र गणसबाधं तापसोटजभास्वरम् ॥ (२२)

22. சந்த்ரன் முதலான திவ்ய க்ரஹங்களின் கூட்டங்களாலும், நக்ஷத்திரஙகளாலும் வாஸம் செய்யப்பட்டும் எல்லா இடங்களிலும் கூட்டங்களில் நெரிசல் உள்ளதாயும், தபஸ்விகளின் ஆசிரமங்களால் பிரகாசிப்பதாயும்

वेदाध्ययननिरतैः स्वाध्यायाध्ययने रतैः ।
तपोऽद्भुतं प्रकुर्वाणैः पूजितं परमाद्भुतम् ॥ (२३)

23. த்ராவிட வேதாத்யயனத்தில் பற்றுள்ள... அவரவர்க்குரிய வேதாத்யயனம் செய்பவர்களாலும், ஆச்சர்யமாக தபஸ் செய்பவர்களாலும், மிகவும் அத்புதமாக ஆராதிக்கப்பட்டும், காணக்கான வியப்புத்தருவதாயும்,

जाह्नवीप्रमुखाभिश्च नदीभिस्समुपासितम्।
स्वात्मपापविशुद्ध्यर्थं कावेर्याश्च विशेषतः॥ (२४)

24. கங்கை முதலான புண்ணிய நதிகளாலும், விசேஷமாக காவேரி போன்ற நதிகளாலும், தங்களிடம் மக்களால் சேர்க்கப்படும் பாபங்களை போக்கிக் கொள்ள உபாஸனை செய்யப்பட்டம் கௌரவிக்கப்பட்டும்

सक्तं सकलतेजोभिस्सर्वतीर्थोत्तमम्।
सर्वपापहरं पुण्यमतुलं मङ्गलाश्रयम्॥ (२५)

25. ஸகல தேஜஸ்ஸுகளின் இருப்பிடமாயும் ஸகல தீர்த்தங்களைக் காட்டிலும் சிறந்ததாயும், ஸகல பாபங்களையும் நீக்கி புண்ணியம் தருவதாயும் ஈடு இணையற்ற சுப காரியங்களுக்கு ஆச்ரமாயும்

आयुष्यपुष्टिजननं भुक्तिमुक्तिफलप्रदम्।
सर्वविद्याप्रदं नृणां महासारस्वतप्रदम्॥ (२६)

26. மனிதர்களுக்கு நீண்ட ஆயுளைத் தருவதாயும், இஹபர ஸுகங்களை அளிப்பதாயும் ஸகல வித்யைகளையும் கொடுப்பதாயும் அதிகமாக வாக் சாதுர்யமளிப்பதாயும்

संसारकलपापघ्नं+अज्ञानतिमिरापहम्।
सर्वरोगप्रशमनं सर्वसंपत्सुखावहम्॥ (२७)

27. ஸம்ஸார பந்தத்தால் ஏற்படும் பாபங்களை நாசம் செய்வதாயும் அஞ்ஞான இருளைப் போக்குவதாயும், ஸகல வியாதிகளையும் நிவ்ருத்தி செய்வதாயும், ஸகல ஸௌபாக்யங்களையும் அளிப்பதாயும்

संसारमुत्तममिदं पुण्डरीकसरोवरम्।
तत्र स्नानं महत्पुण्यं चित्तशुद्धिकरं परम्॥ (२८)

28. இந்த லோகத்தில் மிகவும் உத்தமமாகவுள்ளது இந்த புண்டரீக புஷ்கரிணீ. இதில் ஸ்நானம், செய்வதால் அதிக புண்ணியம் ஏற்படும். மேலும் நம் உள்ளங்களையும் பரிசுத்தமாக்கும்

फाल्गुने मासि पौर्णम्यां उत्तरर्क्षे तु जैमिने।
पुण्डरीकसरस्नानं महापातकनाशनम्॥ (२९)

29. பங்குனிமாதம் உத்திர நக்ஷத்ரம் கூடிய பௌர்ணமி திதியில பண்டரீக புஷ்கரிணீயில் ஸ்நானம் செய்வது மிகப் பெரிய பாபங்களனைத்தையும் போக்கவல்லது.

एतस्मिन् दिवसे प्राप्ते पुण्डरीकसरोजले।
स्नात्वा विशुद्धहृदयः शुद्धवस्त्रधरः पुमान्॥ (३०)

30. மனிதனாகப் பிறந்தவன் இந்த நன்னாளில் புண்டரீக புஷ்கரிணீயில் அடைந்து களங்கமற்ற உள்ளத்துடன் ஸ்நானம் செய்து சுத்த வஸ்த்ரம் தரித்து

धृतोर्ध्वपुण्ड्रो विधिवत् दानादि कुरुते तु यः।
स याति ब्रह्मणस्थानमतुलं लोकपावनम्॥ (३१)

31. முறைப்படி திருமண்காப்புகளை அணிந்து, தானம் முதலானவற்றைச் செய்கிறவன் ஈடு இணையற்ற லோக ப்ரஸித்தமான ப்ரம்ம ஸ்தானத்தை அடைகிறான்.

प्राप्ते तस्मिन् दिने यस्तु पुण्डरीकसरोवरम्।
अवगाह्य विशुद्धात्मा तर्पयित्वा यथाविधि॥ (३२)

32. பங்குனி உத்திரதினம் புண்டரீக புஷ்கரிணீயை அடைந்து, ஸ்நானம் செய்து ஸுத்த ஹ்ருதயத்துடன் சாஸ்த்ரப்படிப் பித்ருக்களுக்குத்தர்ப்பணம் முதலியவற்றைச் செய்து,

क्षेत्रेऽस्मिन् कुरुते पिण्डं भक्तिश्रद्धासमन्वितम्।
तुष्यन्ति पितरस्तस्य यावदाभूतसम्प्लवम्॥ (३३)

*33.* பக்தி ச்ரத்தையுடன் இந்த க்ஷேத்திரத்தில் பிண்டம் கொடுக்கிற மனிதனுக்கு பித்ருக்கள் ப்ரளயகாலம் வரை அதிக ஸந்தோஷமடைகிறார்கள். நிறைய் செல்வமளிக்கிறார்கள்.

क्षेत्रेऽस्मिन् दिवसे प्राप्ते पुण्डरिकसरोजलैः।
प्रक्षाल्य सर्वगात्राणि भक्तियुक्तेन चेतसा ॥ (३४)

*34.* இந்த (பங்குனி உத்தர) நன்னாளில் புண்டரீக புஷ்கரிணீயின் தீர்த்தத்தினால் பக்தி நிறைந்த உள்ளத்துடன் தன் சரீர அவயவங்களை ஶுத்தம் செய்து

भूदानमन्नदानं च कन्यादानं विशेषतः।
गोदानं विष्णुभक्तेभ्यो यो ददाति मुदान्वितः॥ (३५)

*35.* பூமிதானம், அன்னதானம், மேலும் விசேஷமாக கன்யா தானம், கோதானம் முதலியவற்றை மிகவும் ஸந்தோஷத்துடன் விஷ்ணு பக்தர்களுக்கு அளிக்கிறவன்.

स याति विष्णुभवनं मुनीनामपि दुर्लभम्।
तस्यावलोकनादेव वाजपेयफलं लभेत्॥ (३६)

*36.* முனிவர்களும் கூட அடைய முடியாத மஹாவிஷ்ணுவின் இருப்பிடமான வைகுந்தத்தை அடைகிறான். அப்படிப்பட்ட மனிதனைக் கண்ணால் தரிசிப்பதாலேயே மற்றவர்கள் வாஜபேயம் என்கிற யாகம் செய்த பலனைப் பெறுகின்றனர்.

तस्य सन्दर्शनादेव पितृतृप्तिर्न संशयः।
युगक्रमेण फलदं तीर्थमत्यद्भुतं मुने॥ (३७)

*37.* அந்த மனிதனுடைய தரிசனத்தாலேயே பித்ருக்கள் த்ருப்தி அடைகின்றனர். இதில் யாதொரு ஸம்சயமுமில்லை. முனிவரே! அத்யத்புதமான இந்த தீர்த்தம் யுகத்துக்குத் தக்கவாறு பலனைக் கொடுக்கிறது

एतत् कृतयुगे दानात् फलदं मुनिसत्तम।
त्रेतायां यजनादेव द्वापरेत्ववलोकनम्॥ (३८)

*38. முனிச்ரேஷ்டரே ! இது க்ருதயுகத்தில் இங்கு தானம் செல்வதாலும், த்ரேதாயுகத்தில் யாகம் முதலியன செய்வதாலும், த்வாபரயுகத்தில் இதைத் தரிசிப்பதாலும்*

कलौ सङ्कीर्तनादेव महाक्रतुफलप्रदम्।
पुण्डरीकसरस्नानं सर्वतीर्थावगाहनम ।। (३९)

*39. கலியுகத்தில் நாம ஸங்கீர்த்தனத்தாலும் பெரிய யாகம் செய்த பலனைத் தர வல்லது. புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்வது மற்றெல்லா தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதைக் காட்டிலும் சிறந்தது.*

ऋषिस्तु सर्वतीर्थस्य कण्वो गोविन्दनायकः।
देवता चित्रकूटेशः कुमुदस्तीर्थरक्षकः।। (४०)

*40. தீர்த்தங்கள் எல்லாவற்றுக்கும் மேலான புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்யும் போது சொல்ல வேண்டிய மந்திரத்திற்கு ரிஷி கண்வமுனிவர். சித்ரகூடாதிபதியான கோவிந்தராஜன் தேவதை. திருவாயில் காப்பாளரான குமுதாக்ஷரோடு இருக்கும் குமுதர் தீர்த்தரக்ஷகனாவார்.*

कण्व गोविन्दराजं च कुमुदं च गणाधिपौ। or पम्
प्रणम्य तेषां नामानि सङ्कीर्त्य च विभावयेत्।। (४१)

*41. கண்வரையும் கோவிந்தராஜனையும் தவிர மற்ற விஷ்வக்ஸேநருடைய ஆள்களான பரமபதக் காப்பாளர்கள் கூட்டத்திற்கு தலைவராய் இருக்கிற குமுதனையும் ஸேவித்து அவர்களது நாம ஸ்ங்கீர்த்தனம் செய்து அவர்கள் உருவங்களை மனதில் நிலைப்படுத்த வேண்டும்.*

तेषां स्वरुपं प्रथमं स्नात्वा पुण्यसरोवरे।
प्रसन्नहृदयः शुद्धो मन्त्रमेनं वदेद्बुधः।। (४२)

*42. வித்வானாகயிருப்பவன் தெளிந்த அறிவுள்ளவன் சுத்தமாயும் ஸந்தோஷமாயும் உள்ள உள்ளத்துடன் புண்ய தடாகத்தில் நீராட உத்திரவு வேண்டும்படியுள்ள இந்த மந்த்ரத்தை உச்சரிக்க வேண்டும்.*

पाहि मां चित्रकूटेश! संसारार्तिप्रपीडितम्।
त्वत्तीर्थमज्जनेष्वाज्ञां प्रयच्छ मम माधव।। (४३)

*43.* திருச்சித்ரகூடப்பெருமானே ஸம்ஸார துக்கத்தால் பீடிக்கப்பட்டிருக்கிற என்னை ரக்ஷிப்பாயாக. மாதவனே ! உன்னுடைய இந்த தீர்த்தத்தில் நீராட எனக்கு அனுமதி அளிப்பாயாக

एवं मन्त्रं समुच्चार्य पुण्डरीकसरोजले।
गोविन्दराजमभ्यर्च्य श्रीमदष्टाक्षरेण वै ।। (४४)

*44.* இவ்வாறு மந்த்ரோச்சாரணம் செய்து புண்டரீக புஷ்கரிணியின் ஜலத்தில் நீராடி அஷ்டாக்ஷர மந்த்ரத்தால் கோவிந்தராஜப் பெருமானை அர்ச்சித்து

स नरो मोक्षमाप्नोति जन्मसंसारबन्धनात्।
दर्शे दर्शेच यः स्नात्वा पुण्डरीकसरोजले।। (४५)

*45.* ஒவ்வொரு அமாவாசையின் போதும் புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்த மனிதன் தன்னுடைய பிறப்பு மற்றும் இந்த ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுப்பட்டு மோக்ஷமடைகிறான்.

तिलोदकप्रदानानि कुरुते स्वपितॄन् प्रति।
भवन्ति पितरस्सर्वे तृप्ता मुक्ता भवन्ति च।। (४६)

*46.* தங்கள் பித்ருக்களைக் குறித்து எள் கலந்த தீர்த்தம் (தர்ப்பணம்) எவர் விடுகிறாரோ அவ்வாறு விடுபவர்களின் பித்ருக்கள் எல்லோரும் த்ருப்தி அடைகிறார்கள். தங்கள் பந்தங்களினின்றும் விடுபடுகிறார்கள். மோக்ஷமடைகிறார்கள்.

अलभ्ययोगेषु तथा चन्द्रसूर्योपरागयोः।
विषुवायनकलेषु चतुर्थीनवमीतिथौ।। (४७)

*47.* சந்த்ர ஸூர்ய க்ரஹணகாலங்களிலும், சித்திரை, ஐப்பசி மாத முதல் நாட்களிலும், தக்ஷிணாயன, உத்தராயண காலங்களிலும், சதுர்த்தி, நவமி திதிகளிலும்

अर्कवारे तथाऽष्टम्यां षष्ट्यां हरिदिने शुभे।
पुण्डरीकसरस्नानं गोविन्देशावलोकनम्।। (४८)

*48. ஞாயிற்றுக்கிழமையிலும், ஷஷ்டி, அஷ்டமி, ஏகாதசி திதிகளிலும் புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்வதும் கோவிந்தராஜப் பெருமானை ஸேவிப்பதும்,*

कृष्णक्षेत्रनिवासश्च भवबन्धविनाशनम्। सञ्च
कर्तव्यं मज्जनं तस्मात् पुण्डरीकसरोवरे॥ (४९)

*49. ஸ்ரீக்ருஷ்ண க்ஷேத்திரத்தில் வஸிப்பதும் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுதலைப் பெற்றுத் தரும். எனவே, புண்டரீக புஷ்கரிணியில் ஸ்நானம் செய்வது அவசியமாகும்.*

कल्ये समुत्थाय हरिं शयानं श्रीचित्रकूटे फणिराजतल्पे।
प्रणम्य तीर्थार्पितपद्मतीर्थे यः स्नाति नित्यं स नरो हि धन्यः॥ (५०)

*50. தகுந்த நேரத்தில் (விடியலில்) துயிலெழுந்து திருச்சித்ரகூடத்தில் ஆதிசேஷன் மீது ஶயனித்திருக்கும் கோவிந்தராஜனை ஸ்மரித்து, அனைத்து தீர்த்தங்களும் கூடியிருக்கின்ற பத்ம தீர்த்தமென்னும் புண்டரீக புஷ்கரிணியில் நீராடி கடமைகளைச் செய்கிற (தேவரிஷி பித்ருதர்ப்பணாதிகளை முறைப்படி செய்கிற) மனிதன் தந்யனாகிறான்.*

इति नवमोऽध्यायः।

ஒன்பதாம் அத்யாயம் நிறைவுற்றது.

## பத்தாம் அத்யாயம்

जैमिनिः ஜைமினி

पुण्डरीकाख्यसरसो माहात्म्यतुलं स्मृतम्।
अन्येषामपि तीर्थानां श्रोतुमिच्छाम्यहं प्रभो॥ (१)

*1. ஈடு இணையற்ற புண்டரீக தீர்த்தத்தின் மாஹாத்ம்யம் அறிந்து கொள்ளப்பட்டது. ப்ரபுவே மற்ற தீர்த்தங்களின் பெருமைகளையும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.*

व्यासः வ்யாஸர்

प्रीतये वासुदेवस्य चतुर्वक्त्रः पुरा मुने।
अश्वमेधसहस्राणि कृत्वा विधिवदत्र वै॥ (२)

*2. ஹே முனிவரே ! முன்னொரு ஸமயம் சதுர்முக ப்ரம்மா, வாஸுதேவனான ஸ்ரீமந்நாராயணனை த்ருப்தி செய்வதற்காக, இங்கு ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்திரத்தில் ஶாஸ்த்ர முறைப்படி ஆயிரம் அச்வமேத யாகங்கள் செய்து*

अध्वरान्तेष्ववभृथस्नानार्थं स्वस्य विश्वसृक्।
सृष्ट्वा सरोवरं तस्मिन्न्यमज्जल्लोकपावनः॥ (३)

*3. அந்த ப்ரம்மா யாகத்தின் முடிவில் தன்னுடைய அவப்ருத ஸ்நானத்துக்காக ஒரு தடாகத்தை ஸ்ருஷ்டித்து அதில் ஸ்நானம் செய்தார்.*

तदा प्रभृति तत्तीर्थं ब्रह्मतीर्थमिति स्मृतम्।
ब्रह्मणो मनसोत्पन्नं मानसाख्यसरोपमम्॥ (४)

*4. ப்ரம்ம தேவனின் மனஸால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு, மானஸ ஸரோவரத்துக்கு ஸமமான இந்த தீர்த்தம் அன்று முதல் ப்ரம்ம தீர்த்தம் என்பதாகச் சொல்லப்பட்டது.*

पवित्रं मङ्गलाकरं सर्वपापनिषूदनम्।
नेत्रकौतूहल हृद्यं निर्दुष्टं निर्मलोपमम्। (५)

5. மிகவும் பரிசுத்தமானதும், மங்களத்தை தரக்கூடியதும் பாபங்களனைத்தையும் நீக்க வல்லதும், கண்களுக்கு மகிழ்ச்சியை அளிப்பதும், உள்ளத்துக்கு ஹிதமாயயும், தோஷமற்றதும், நிர்மலாகவும் உள்ளது இந்த தீர்த்தம்.

तज्जलस्पर्शनाद्दानात् कीर्तनात् स्मरणादपि।
रुन्धन नारक मार्गं सर्वप्राणिभयङ्करम्।। (६)

6. அந்த தீர்த்தத்தை ஸ்பர்ஸிப்பதாலும், நீராடுவதாலும், இங்கு தானங்கள் செய்வதாலும், நாமஸ்மரணம் செய்வதாலும், மனதால் த்யானிப்பதாலும், எல்லா ஜீவராசிகளுக்கும் பயத்தைக் தரக் கூடிய நரகத்தின் வழி தடைபடுகிறது.

ब्रह्मतीर्थं मुनिश्रेष्ठ! त्रिषु लोकेषु पूजितम्।
तस्य तीरे हुतं जप्तं दत्तमप्यक्षय भवेत्।। (७)

7. முனிச்ரேஷ்டரே இந்த ப்ரம்ம தீர்த்தம், மூன்று உலகத்தாராலும் பூஜிக்கப்பட்டது. அதன் கரையில் செய்யப்படும் ஹோமங்கள், ஜப தபங்கள், கொடுக்கப்படும் தானம் முதலானவை குற்றமற்ற வளர்ச்சியை உடையவையாகும்.

माघमासे मखर्क्षे तु ब्रह्मतीर्थावगाहनम्।
सर्वारिष्टप्रशमनं पुनरावृत्तिनाशनम्।। (८)

8. மாசி மாதம் மக நக்ஷத்திரம் கூடிய நன்னாளில் ப்ரம்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வது, எல்லா ஆபத்துகளும் நீங்கி மறுபிறப்பு இல்லாமல் செய்கிறது.

माघमासे संप्राप्ते मासमेकं निरन्तरम्।
ये ब्रह्मतीर्थसलिले प्रातस्स्नानं प्रकुर्वते।। (९)

9. மாசி மாதம் பிறந்தவுடன் அந்த மாதம் முழுவதும் இடைவெளியின்றி தொடர்ந்து இந்த ப்ரம்ம தீர்த்தத்தில் காலையில் நீராடுபவர்கள்

गङ्गास्नानफलं तेषां प्रत्यहं विद्यते मुने।
दृष्ट्वा नरोत्तमं दर्शे ब्रह्मतीर्थजलाप्लुतम्॥ (१०)

*10. முனிவரே ! ப்ரதி தினமும் கங்கையில் நீராடிய பலனைப் பெறுகிறார்கள். தெளிவான ப்ரம்ம தீர்த்தத்தில் அமாவாசையன்று ஸ்நானம் செய்யும் மனிதனைப் பார்த்து*

नृत्यन्ति पितरस्तस्य व्योममध्ये मुदान्विताः।
ब्रह्मतीर्थ जले स्नात्वा वैष्णवाय द्विजातये॥ (११)

*11. அவனுடைய பித்ருக்கள் மிகவும் ஸந்தோஷத்துடன் ஆகாயத்தின் நடுவில ஆனந்த நர்த்தனம் செய்கின்றனர். ப்ரம்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும் ஸ்ரீ வைஷ்ணவ ப்ராமணனை*

दत्वा वित्तानुसारेण वित्त प्रीतिकरं हरेः।

ऋषिस्तु तस्य तीर्थस्य ब्रह्मलोकपितामहः॥ (१२)

*12. அந்த தீர்த்தத்தின் ரிஷியாகக் கருதப்படுகிற ப்ரம்ம லோகாதிபதியான ப்ரம்மா, ஶக்திக் கேற்ற வகையில் செல்வத்தை அளித்து பகவானுக்கும் ப்ரீதியுள்ளவனாக ஆக்குகிறார்.*

देवता कौस्तुभोऽरस्को देवकीनन्दनोऽच्युतः

*இதற்கு அதிதேவதை, கௌஸ்துபமணிந்த மார்பை உடைய தேவகீ நந்தநனான அச்யுதன்.*

विष्वक्सेनस्तु भगवान् सेनेशस्तीर्थरक्षकः।
ब्रह्माण देवकीपुत्र विष्वक्सेनं गणाधिपम्॥ (१३)

*13. விஷ்வக்ஸேநர் என்னும் பகவான் ஸேநேசர். இந்த தீர்த்தத்தை ரக்ஷிப்பவர். ப்ரம்மாவையும், தேவகியின் மைந்தனான கண்ணனையும், ஸேனைத்தலைவனான விஷ்வக்ஸேநரையும் ஸ்மரித்து*

धृत्वा क्रमेण विधिवत् ब्रह्मतीर्थजलाप्लुतः।
शुद्धवस्त्रधरः श्वेतमृत्स्नया चोर्ध्वपुण्ड्रवान्॥ (१४)

*14. முறைப்படி, தெளிந்த ப்ரம்ம தீர்த்தத்தில் நீராடி, ஶுத்த வஸ்த்ரமணிந்து, திருமண் காப்புகளை ஶாஸ்த்ர விதிப்படி தரித்து*

गोविन्दराजमभ्यर्च्य भक्त्या परमया युतः।
जपेन्नामत्रयममुं योऽष्टोत्तरसहस्रकम्॥ (१५) नुं

*15. அதிக பக்தியுடன் கோவிந்தராஜனை ஆராதித்து (அச்யுத, அநந்த, கோவிந்த என்னும்) அவனது மூன்று நாமக்களையும் 1008 முறை*

अष्टोत्तरशत वाऽपि गोविन्देशस्य सन्निधौ।

*அல்லது 108 முறை கோவிந்தராஜனின் ஸந்நிதியில் ஜபிக்க வேண்டும்.*

स गत्वा वैष्णवं धाम मोदते विष्णुसन्निधौ॥

*அப்படிப்பட்டவன் வைகுந்தத்தை அடைந்து மஹாவிஷ்ணுவின் ஸந்நிதியில் ஸந்தோஷத்தை அடைகிறான்.*

तीर्थेष्वेतेषु सर्वेषु ब्रह्मतीर्थमनुत्तमम्।
स्मृत्वा यः स्नाति स नरो मुच्यते सर्वकिल्बिषात्॥ (१६)

*16. இந்த தீர்த்தங்கள் எல்லாவற்றினும் ப்ரம்மதீர்த்தம் மேலானது. இதனை நினைத்து ஸ்நானம் செய்யும் மனிதன் ஸகல பாவங்களினின்றும் விடுபடுகிறான்.*

प्रत्यूषे ब्रह्मतीर्थस्य स्मरणं पुण्यवर्धनम्।
ब्रह्मतीर्थजले स्नानं सर्वक्रतुफलप्रदम्॥ (१७)

*17. விடியற்காலையில் ப்ரம்மதீர்த்தஸ்மரணம் புண்ணியத்தை வளரச் செய்கிறது. ப்ரம்ம தீர்த்தத்தில் நீராடுவது யாகங்கள் பல செய்த பலனை அளிக்கிறது.*

ब्रह्मतीर्थस्य पारे यष्टव्यं दिजपुङ्गवैः।
श्रावणे मासि सिंहस्थे भानौ कृष्णाष्टमीतिथौ।। (१८)

*18. ஸிம்மராஶியில் சூர்யன் பிரவேஶிக்கிற ஆவணி மாஸத்தில் க்ருஷ்ணபக்ஷம் அஷ்டமி திதியில், ப்ரம்ம தீர்த்தத்தின் கரையில் பிராமண ச்ரேஷ்டர்களாலே யாகம் செய்யப்படவேண்டும்.*

प्राजापत्यर्क्षसयुक्ते प्रोष्ठपद्यामथापि वा।
ब्रह्मतीर्थजले स्नात्वा विधिना चोर्ध्वपुण्ड्रकम्।। (१९)

*19. ப்ரம்மாவை அதிதேவதையாக உடைய ரோஹிணி நக்ஷத்திரத்திலாவது, பூரட்டாதி அல்லது உத்தரட்டாதி நக்ஷத்திரத்திலாவது ப்ரம்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து முறைப்படி திருமண் காப்புகளணிந்து,*

जम्बूफलानि पक्वानि मृदूनि सरसानि च।
विष्णुभक्ताय विप्राय दत्वा चक्राङ्किताय वै।। (२०)

*20. ம்ருதுவான, நன்கு பழுத்த, ரஸம் நிறைந்த நாவல் பழங்களை ஶங்க சக்ரம் அடையாளமிட்ட (பஞ்சஸம்ஸ்காரம் செய்துள்ள) ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அளித்து,*

अन्यान्यपि च दानानि कृत्वा शक्त्यनुसारतः।

*தன்னுடைய ஶக்திக்கு ஏற்ற வகையில் வேறு வேறான தானங்களையும் செய்து,*

निशीथे समनुप्राप्ते ब्रह्मतीर्थं तदालयम्।
वासुदेवं जगद्योनिं देवकीनन्दनं परम्।। (२१)

*21. நடுஇரவு வேளை அடைந்ததும், ப்ரம்ம தீர்த்தத்திலும், ஆலயத்திலும், லோக நாயகனும்; தேவகியின் மைந்தனுமான ஸ்ரீ கோவிந்தராஜனை*

अभ्यर्च्य विधिना सम्यक् विशुद्धेनान्तरात्मना।
तिथिष्वन्ते वा रात्रौ उत्सवान्तेषु पारणाम्॥ (२२)

22. பரிசுத்த ஹ்ருதயத்தோடு முறைப்படி நன்றாக ஆராதித்து, இரவில் மேற்படி (க்ருஷ்ணாஷ்டமி) திதியின் முடிவிலாவது அல்லது ஆராதனை முடிந்தவுடனாவது பாரணையை (போஜநாதிகளை),

भक्तैर्भागवतैस्साक विप्रैर्वा कुरुते तु यः।
एकदापि मुनिश्रेष्ठ परात्मन्येवमादरात्॥ (२३)

23. ஹே முனிபுங்கவரே! தன் உள்ளத்திலிருக்கிற பரமாத்மாவினிடமுள்ள ஆதரவினால், பக்தர்கள், பாகவதர்கள், பிராமணர்களுடனும் ஒருமுறையாவது செய்கிற மனிதன்

तस्य वैकुण्ठसरणिः सुलभा प्राणिदुर्लभा।
वैशाखपूर्णिमाया तु नक्षत्रेन्द्राग्निदैवते॥ (२४)

24. உயிர்களால் அடையமுடியாக வைகுந்த பதவியை மிகவும் ஸுலமாகப் பெறுகிறான். வைகாசி மாதம் பௌர்ணமியில், இந்திரனையும், அக்னியையும், தேவதையாகக் கொண்ட விசாக நக்ஷத்திரத்தில்

कृत्वा रसायनं ब्रह्ममतीर्थतोयेन शीतलम्।
कदलीफलगन्धाढ्यं सुगन्धैश्च रसैर्युतम्॥ (२५)

25. குளிர்ச்சியான மிகுந்த ப்ரம்ம தீர்த்தத்தின் ஜலத்தினால், நல்ல வாஸனையுள்ள திரவ பொருள்களாலும், வாழைப்பழம் போன்ற கனிகளாலும், ஆயுர்வ்ருத்தியை அளிக்கும் ரஸாயனம் என்னும் பருகப் படும் திரவ பதார்த்தத்தை (ஔஷதத்தைத்) தயார் செய்து,

तृष्णावद्भ्यो यो ददाति तद्रसायनमुत्तमम्।
तृष्णा न जायते तस्य मार्गेऽमुत्र परत्र च॥ (२६)

26. அந்த உத்தமமான ரஸாயனத்தைத் தாகம் உள்ளவர்களுக்குக் கொடுக்கும் மனிதனுக்கு இந்த உலகத்திலும், மேலுலகத்திலும் பசி, தாகத்தால் ஏற்படும் ச்ரமங்கள் இல்லை.

नैत्र१त्यां ब्रह्मतीर्थस्य गोविन्देशस्य शार्ङ्गिणः।
शेषतीर्थमिति ख्यातं तृतीयं तीर्थमुत्तमम्॥ (२७)

27. இந்த ப்ரம்ம தீர்த்தத்தின் தென்மேற்கு திசையில் ஶார்ங்க பாணியான கோவிந்தராஜனுக்கு ஶேஷ தீர்த்தம் என ப்ரஸித்தமான, உத்தமமான, மூன்றாம் புஷ்கரிணி உள்ளது.

एतत्+गोविन्दराजस्य प्रतीच्यां दिशि जैमिने।
सर्वपापप्रशमनं सर्वाभीष्टफलप्रदम्॥ (२८)

28. ஜைமினியே இந்த ஶேஷதீர்த்தம் கோவிந்தராஜனுடைய ஆலயத்தின் மேற்கு திசையில் பாபங்களை நீக்குவதாயும், விருப்பமான பலன்களை அளிப்பதாயும் உள்ளது.

पुरा तु गरुडाद्भीतः शेषो भुजगनायकः।
चिन्तयामास धर्मात्मा भीतिनाशनकारणम्॥ (२९)

29. முன்னொரு ஸமயம் கருடனிடத்தில் பயமடைந்த ஸர்ப்பங்களின் நாயகனான தர்மாத்மாவான ஆதிஶேஷன், இந்த பீதியை போக்குவதற்கான காரணங்களை ஆலோசித்தான்.

एवं चिन्तयतस्तस्य बुद्धिरासीन्महात्मनः।
मदीयां नाशयेद्भीतिं श्रीपतिः+लोकनायकः॥ (३०)

30. இவ்வாறு ஆலோசித்த அந்த மஹாத்மாவான ஆதிஶேஷனின் மனதில் ஒரு எண்ணம் தோன்றியது. என்னுடைய இந்த பயத்தை லோக நாயகனான ஸ்ரீமந்நாராயணனே நீக்குவான்.

हरि सन्तर्प्य मनसा प्राप्स्यामीति मनोरथम्।
ए५ बुद्ध्वा तु सुमतिस्तपस्तप्तुं समीहते॥ (३१)

31. அந்த ஸ்ரீஹரியை த்ருப்தி செய்து என் மனோரதத்தை அடையப் போகிறேன். இவ்வாறு மனஸால் நிச்சயித்து புத்தி கூர்மையுள்ள அந்த ஆதிஶேஷன் தபஸ் செய்யத் தொடங்கினான்.

आत्मनः स्नानपानार्थ+इदं पूर्व(अ)सृजत्सरः।
सृष्ट्वा सरस्तस्य तटे तपश्चक्रे सुदुष्करम्॥ (३२)

32. தன்னுடைய ஸ்நானபானாதிகளுக்காக தன் இருப்பிடத்துக்கு முன்னால் தடாகம் ஒன்றை ஸ்ருஷ்டித்து, குளத்தை உண்டு பண்ணி அதன் கரையில் மிகவும் கடுமையாகத் தபஸ் செய்தான்.

अब्भक्षो वायुभक्षश्च निराहारो निरामयः।
ग्रीष्मे घर्माभितप्तस्सन् हेमन्ते हिमपीडितः॥ (३३)

33. தண்ணீரையும், காற்றையும் உட்கொண்டு வேறு ஆஹாரமின்றி அஜீரணம், வியாதி முதலியவை இல்லாமல் (கோடை) வெயிலில் நின்றும், பனிக்காலத்தில் பனியினால் பீடிக்கப்பட்டும்,

प्रावृट्सुवर्षैश्शीतैश्च शैशिरे समुपस्थिते।
पञ्चाग्निमध्ये निस्तन्द्रश्चिरकालमधश्शिराः॥ (३४)

34. வர்ஷா காலத்தில் மழையினாலும், ஶிஶிர ருதுவில் குளிராலும், கோடையில் பஞ்சாக்னி மத்தியில் களைப்பு, சோம்பல், தூக்கம் முதலானவை இல்லாமலும், தலைகீழாகப் பல காலங்கள்

एवं तपस्यतस्तस्य शरदामयुत ययौ।
ततः प्रसन्नो भगवान् लक्ष्मीनारायणः प्रभुः॥ (३५)

35. இவ்வாறு தபஸ் செய்து வருகிற அந்த ஆதிஶேஷனுக்கு பதினாயிரம் வருஷங்கள் சென்றன. பிறகு ஸந்தோஷமடைந்த பகவான் ப்ரபு லக்ஷ்மீ நாராயணன்,

आविरासीदहीशाग्रे वरदानाय जैमिने।
श्रीमन्नारायणं दृष्ट्वा वरदानार्थमागतम्॥ (३६)

36. ஜைமினியே! அந்த ஆதிஶேஷனின் எதிரில் வரம் கொடுப்பதற்காகத் தோன்றினார். வரமளிப்பதற்காகத் தன் முன்னால் வந்து நிற்கிற ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்து

स्तुत्वा तु बहुभिस्स्तोत्रैः नत्वा मूर्ध्ना पुनःपुनः।
अतिप्रसन्नहृदयो शेषो वरमयाचत ॥ (३७)

37. பல வித ஸ்தோத்ரங்களால் ஸ்தோத்ரம் செய்து, மறுபடி மறுபடி தலையால் வணங்கி மிக ஸந்தோமடைந்த உள்ளம் உடையவனாக ஆதிஶேஷன் வரத்தை யாசித்தான்.

मद्भोगतल्पे भगवान् योगनिद्रां सदा कुरु।
त्रस्तस्य गरुडाद्भीतिं निवारय ममाच्युत ॥ (३८)

38. ஹே பகவானே ! என்னுடைய, இந்த விரிந்த தலைகளை உடைய உடம்பாகிற, ஸுகமான படுக்கையில் ஏப்போதும் யோக நித்திரை செய்வாயாக. அச்யுதனே ! கருடனிடமிருந்து நடுங்கிக் கொண்டிருக்கிற என்னுடைய பயத்தை நீக்குவாயாக.

इत्युक्त्वा श्रीमतेर्लब्ध्वा वरं सुप्रीतमानसः।
अभवद्भुजगाधीशः शेषस्तु तपतां वरः ॥ (३९)

39. தபஸ் செய்பவர்களில் சிறந்தவனும் ஸர்ப்பராஜனுமான ஆதிஶேஷன் இவ்வாறாக ஸ்தோத்ரம் செய்து., ஶ்ரீமந்நாராயணனிடமிருந்து வரம் பெற்று த்ருப்தி அடைந்த மனதை உடையவனான்.

तदाप्रभृति तत्तीर्थं शेषतीर्थमिति स्मृतम्।
संसारतापहरणं निर्मलं कलिनाशनम् ॥ (४०)

40. அது முதல் இந்த தீர்த்தம் 'ஶேஷ' தீர்த்தம் என்பதாகப் போற்றப்பட்டது. நிர்மலமான இந்த தீர்த்தம் ஸம்ஸார துக்கங்களையும், கலியுகத்தால் ஏற்படும் தோஷங்களையும் நீக்கவல்லது.

मानौ तुलायां सम्प्राप्ते नक्षत्रे सर्पदेवते।
शेषतीर्थे तु यो स्नाति सर्वपापात्प्रमुच्यते ॥ (४१)

*41. துலாராஸியில ஸுர்யன் ப்ரவேஸிக்கிற ஐப்பசி மாதத்தில் ஸர்ப்பத்தை அதி தேவதையாக உடைய ஆயில்ய நக்ஷத்திரத்தில் இந்த ஶேஷ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கிறவன் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.*

शेषतीर्थे तु यः स्नाति सर्पभीतिर्न जायेत।

*ஶேஷ தீர்த்தத்தில் நீராடுபவர்களுக்கு ஸர்ப்பத்தால் ஏற்படும் பயம் இல்லை.*

शैषतीर्थं पिवेद्यस्तु मासमेकं निरन्तरम्।
सर्वरोगात्प्रमुच्यन्ते सर्वेऽपि मनुजाः प्रजाः॥ (४२)

*42. ஒரு மாத காலம் தொடர்ந்து ஶேஷதீர்த்தத்தைப் பருகுகிற எல்லா மனிதர்களும், எல்லா பிணிகளிலிருந்தும் விடுபடுவர்.*

तुलासङ्क्रमिते मित्रे शेषतीर्थेऽवगाहयेत्।
दुःखी दुःखात्प्रमुच्येत वन्ध्या पुत्रवती भवेत्॥ (४३)

*43. ஸுர்யன் துலாராஸியில் சேருகிற ஐப்பசி மாதப் பிறப்பு நாளில் ஶேஷ தீர்த்தத்தில் நீராடுவதால் மனிதன் வருத்தமுடையவனாயின் அதனின்றும் விடுபடுவான், மலடான ஸ்த்ரீ பிள்ளைப்பேற்றை அடைவாள்.*

प्राप्नुवन्ति नराः+सर्वे क्रतूनां+ अयुतं फलम्।

*மனிதர்கள் எல்லோரும் பதினாயிரம் யாகம் செய்த பலனைப் பெறுவர்.*

यस्तु रामनवम्यां तु शेषतीर्थजले प्लुतः।
महादानानि विप्रेभ्यो वैष्णवेभ्यो विशेषतः॥ (४४)

*44. ஸ்ரீராமநவமி நன்னாளில் ஶேஷ தீர்த்தத்தில் நீராடி சிறப்பாக வைஷ்ணவர்களுக்கும் பிராமணர்களுக்கும் நிறைய தானங்களை,*

कुरुते जानकीनाथप्रीत्यै श्रद्धासमन्वितः।
स राजश्रियमाप्नोति विजयं च लभेत्सदा॥ (४५)

45. மிகவும் ச்ரத்தையுடன் ஸ்ரீராமசந்த்ர ப்ரீதிக்காகச் செய்கிறவன் ராஜ்ய லக்ஷ்மியை அடைகிறான். எப்போதும் வெற்றியே பெறுகிறான்.

नागतीर्थे यः स्नात्वा विष्णुभक्ताय जैमिने।
यत्किञ्चिदपि दद्याच्चेत् वित्तशक्त्यनुसारतः॥ (४६)

46. ஜைமினியே! ஶேஷ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தன் சக்திக்கேற்ற வகையில் விஷ்ணு பக்தர்களுக்கு சிறிதளவாவது தானம் செய்ய வேண்டும்.

अदत्वा+अनन्ततीर्थे यो निमज्जेद्यदि निष्फलम्॥

அப்படிக்கொடுக்காமல் இந்த அனந்த தீர்த்தத்தில் நீராடுவது நிஷ்பலமாகும்.

सर्वेष्वपि च मासेषु दर्शे दर्शे च जैमिने।
शेषतीर्थजले स्नात्वा पितॄन् सन्तर्प्य तज्जलैः॥ (४७)

47. ஜைமினியே! எல்லா மாதங்களிலும், ஒவ்வொரு அமாவாஸையிலும், ஶேஷதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பிதருக்களுக்கு அந்த ஜலத்தினால் தர்பணம் செய்து,

पक्वान्नं कनकैस्सार्धं कुरुते यस्तु शक्तितः।
तुष्टाश्च पितरस्तस्य तस्मै कुर्वन्त्यनुग्रहम्॥ (४८)

48. தன் சக்திக்கு ஏற்ற வகையில் நன்கு பக்குவம் செய்யப்பட்ட அன்னத்தை தக்ஷிணையான ஸ்வர்ணத்துடன் தானம் செய்பவனை அவனுடைய பித்ருக்கள் ஸந்தோஷமடைந்து அவனுக்கு அனுக்ரஹம் செய்கிறார்கள்.

सर्वेषु पुण्यकालेषु शेषतीर्थे निमज्जनात्।
सर्वान्कमानवाप्नोति नरो निर्मुक्तकिल्बिषः॥ (४९)

49. எல்லா புண்ணிய காலஙகளிலும ஶேஷதீர்த்தத்தில் நீராடுகிற மனிதன், பாபங்களெல்லாம் விடுபட்டு தன் விருப்பங்களைப் பெறுகிறான்.

ऊर्जे मासेऽग्निदैवत्ये नक्षत्रे यो नरोत्तमः।
शेषतीर्थाम्बुनि स्नात्वा गोविन्देशस्य शार्ङ्गिण.॥ (५०)

50. கார்த்திகை மாதத்தில் அக்னியை அதி தேவதையாகக் கொண்ட கார்த்திகை நக்ஷத்திரத்தில், ஶேஷ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, சார்ங்கபாணியான கோவிந்தராஜனுக்கு,

दीपोत्सवं च कुरुते भक्त्या वित्तानुसारतः।
स नरो राजतुल्यां श्री निस्तुलां महतीं लभेत्॥ (५१)

51. பக்தியுடன், தன்னிடமுள்ள செல்வத்திற்கு ஏற்றவாறு தீ போத்ஸவம் செய்கிறவன் ஏராளமான செல்வத்தையும், அரசனுக்குச் சமமாக அடைவான்.

शाश्वती च समा स्वर्गे देवैरपि च पूजितः।
सर्वतीर्थोत्तम तीर्थं रसानामधिकं महत्॥ (५२)

52. மேலும், தேவர்களால் பூஜிக்கப்பட்டு ஶாச்வதமாக ஸ்வர்க்க வாஸமும்செய்கிறான். எல்லா தீர்த்தங்களைக் காட்டிலும் சிறந்த இந்த தீர்த்தம், அதிக ருசியுள்ளதாயும் இருக்கிறது.

प्रख्यातं सकलप्राणि जीवनप्रदमद्भुतम्।
शेषतीर्थं महापुण्यं सर्वपापविनाशनम्॥ (५३)

53. இந்த ஶேஷ தீர்த்தம் ஸகல ப்ராணிகளையும் உஜ்ஜீவிப்பதாயும், விரும்பத்தக்கதாயும் ஸர்வ பாபங்களையும் நீக்குவதாயும், மிகவும் புண்ணியமானதாகவும் இருக்கிறது.

ऋषिस्तु शेषतीर्थस्य शेषस्सर्पकुलाधिपः।
लक्ष्मीनारायणो देवो देवता जगतीपतिः॥ (५४)

54. இந்த ஶேஷதீர்த்த ஸ்நானமந்திரத்துக்கு ஸர்ப்பகுலாதிபதியான ஆதிசேஷனே ரிஷி. லோக நாயகனான ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் தேவதையாவார்.

वामनस्तीर्थगोप्ता च विध्दयेतान् क्रमशो मुने।
अनन्तं श्रीपतिं तीर्थरक्षणोद्यमवामनम्॥ (५५)

55. முனிவரே ! வாமணர் தீர்த்ரக்ஷகர் என்பதாக அறிவீராக. ஆதிசேஷனையும், ஸ்ரீபதியையும், தீர்த்தரக்ஷகனான ஸேனை முதலிகளின் பரிகரமான வாமனரையும்,

कायेन मनसा वाचा नत्वा स्तुत्वा विचिन्त्य च।
अनुमन्त्र्य च तान् पश्चात् शेषतीर्थावगाहने॥ (५६)

56. சரீரத்தால் வணங்கியும், மனஸால் நினைத்தும், வாயால் துதித்தும், எல்லோரையும் த்யானித்து உத்தரவு பெற்ற பிறகு சேஷ தீர்த்தத்தில்,

नामत्रयममुं जप्त्वा तत्तीर्थं + चावगाहयेत्। नुं

மூன்று தடவை ஸ்ரீஹரியின் நாமத்தை ஜபித்து ஸ்நானம் செய்ய வேண்டும்.

अवगाह्य विशुद्धात्मा गोविन्देशस्य सन्निधौ।
अष्टाक्षरमहामन्त्रं जपेदष्टोत्तरं शतम्॥ (५७)

57. நீராடிய பிறகு ஶுத்த ஹ்ருதயத்துடன் கோவிந்தராஜனின் ஸன்னதியில் அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை 108 தடவை ஜபம் செய்ய வேண்டும்.

इत्येवमुक्त्वा फणिराजतीर्थस्नाने विधिं जैमिनये मुनीन्द्रः।
व्यासः पुनर्वक्तुमुपाक्रमत्तीर्थान्तरं तत्वविदां वरिष्ठः॥ (५८)

58. முனிவர்களில் ச்ரேஷ்டரான வ்யாஸபகவான், ஜைமினி முனிவருக்கு சேஷதீர்த்தத்தின் ஸ்நான விதிகளை இவ்வாறாகச் சொல்லி, பிறகு தத்துவ போதகர்களில் சிறந்தவரான இந்த முனிவர், வேறு தீர்த்தம் பற்றி சொல்லத் தொடங்கினார்.

इति दशमोध्यायः

## பத்தாம் அத்யாயம் முற்றிற்று.

## अथ एकदशोऽध्याय:

## பதினொராவது அத்யாயம்

चतुर्थं गारुडं तीर्थं गरुडेनैव निर्मितम्।

நான்காவது கருட தீர்த்தம் கருட பகவானாலேயே உண்டாக்கப்பட்டது.

साक्षाछन्दोमयो देवो भगवान् गरुडः पुरा।
हरेर्वाहनतां प्राप्तुं तपश्चक्रे सुदुष्करम्।। (१)

1. ஸாக்ஷாத் வேத ஸ்வரூபனான பகவான் கருடன் முன்னொரு சமயம் ஸ்ரீஹரிக்கு வாஹனமாகும் தன்மையை அடைய மிகவும் கடுமையாக தபஸ் செய்தார்.

आत्मनः स्नानपानार्थं+ अर्णवाम्भः प्रकीर्तितम्।
अब्दानां बहुसाहस्रं तस्य तीरेऽतपन्मुने।। (२)

2. முனிவரே ! தன்னுடைய ஸ்நான, பானாதிகளுக்காக, ஸமுத்ரஜலத்தால் உண்டான மேகங்களால் வர்ஷிக்கப்பட்ட ஜலாசயம் (தடாகம்) ஏற்படுத்தி, அதன் கரையில் ஆயிரம் வருஷங்கள் தபஸ் செய்தார்.

तत. प्रीत्या हरेर्लब्ध्वा वरं तार्क्ष्योऽहिभूषणः।
प्रसन्नहृदयो विष्णोः रथत्वमगमत्पुरा।। (३)

3. பிறகு ஸர்ப்பாபரணம் தரித்த கருடன் ப்ரீதியுடன் விஷ்ணுவிடமிருந்து வரம் பெற்று, மகிழ்ச்சி அடைந்த உள்ளத்துடன் ஸ்ரீமந்நாராயணன் பொருட்டு வாஹன பதவியை அடைந்தான்.

ततः प्रभृति तत्तीर्थं गारुडं तीर्थमुच्यते।

அது முதல் அந்த தீர்த்தம் 'கருட தீர்த்தம்' என்று சொல்லப்படுகிறது.

मुक्तिदं गारुडं तीर्थं प्राच्यामम्भोनिधौ पुनः।
चतुष्षष्टिकलाविद्याप्रदमज्ञाननाशनम्॥ (४)

4. கிழக்கு திசையில் அதிக நீர்வளம் செறிந்திருக்கும் இந்த கருட தீர்த்தம் முக்தியைத் தரக் கூடியதாகவும், அறுபத்து நான்கு கலைகளையும் அளிக்கத்தக்கதாயும், அஜ்ஞானத்தை நீக்க வல்லதாயும் உள்ளது.

सर्वरोगोपशमनं सर्वसिद्धिकरं परम्।
पावनं गारुडे तीर्थे पुण्ये मकरसंक्रमे॥ (५)

5. ரோகங்களனைத்தையும் நீக்கி ஸகல ஸித்திகளையும் தர வல்லது. பரிஶுத்தமான இந்த கருட தீர்த்தத்தில் புண்ணியமான மகரஸங்க்ரமத்தில் (தை மாதப்பிறப்பில்)

यः स्नात्वा दश दानानि दद्याच्चोभयतोमुखीम्।
अलङ्कारयुतां गां च कपिलामुत्तमामपि॥ (६)

6. தச (பத்துவித) தானங்களைச் செய்ய வேண்டும். இரண்டு பக்க முகமுள்ள (பிரஸவித்துக் கொண்டிருக்கும் கன்றை உடைய) பழுப்பு நிறமுள்ள உத்தமமான பசுவை அலங்கரித்து,

अन्नदानेन यो दद्यात् तस्य मुक्तिर्न संशयः।

அன்னதானம் செய்து கொடுக்கிறவனுக்கு மோக்ஷம் கிடைப்பதில் ஸந்தேஹமில்லை.

यक्षराक्षसवेतालाः तथा बालग्रहादयः।
शकुनी पूतना चैव स्कन्दवैनायकीकथाः॥ (८)

7. கருடதீர்த்தத்தில் நீராடிய அங்கங்களை உடைய வைஷ்ணவோத்தமனைப் பார்த்து, பூத, ப்ரேத, பைசாசங்கள், சாகிநீ, டாகிநீ, போன்ற துஷ்ட பெண் தேவதைகள்,

दृष्ट्वा गरुडतीर्थाम्बुसिक्ताङ्गं वैष्णवोत्तमम्।
भूतप्रेतपिशाचाश्च शाकिनी डाकिनी तथा॥ (७)

8. யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், வேதாளங்கள், பாலக்ரஹங்கள், முதலியனவும், சகுனி, பூதனை போன்ற ராக்ஷஸிகளும், ஸ்கந்த விநாயகர் போன்ற தேவதாந்தரங்களின் கதைகளும்,

ब्रह्मराक्षसबृन्दाश्च तथा नादविकारिणः।
जलग्रहाश्च कम्पन्ते दूरं धावन्ति कम्पिताः॥ (९)

9. ப்ரம்ம ராக்ஷஸங்களின் கூட்டங்களும், கொடூரமான குரலை உடைய பிராணிகளும், ஜலத்தில் வாஸம் செய்யும் துஷ்ட பிராணிகளும் பீதியால் நடுக்கமுற்று ஓடி விடுகின்றன.

वातपित्तकफोद्भूतादामयादखिलादपि।
नरो गरुडतीर्थाम्बुमज्जनान्मुच्यते भृशम्॥ (१०)

10. வாதம், பித்தம், கபம் முதலியவற்றால் உண்டாகும் வ்யாதிகளனைத்தும் உடைய மனிதன் கருடதீர்த்தத்தில் நீராடுவதால் அவற்றினின்றும் முற்றிலும் விடுபடுகிறான்.

ब्राह्मे मुहूर्ते चोत्थाय प्रत्यहं वै त्र्यृतुत्रयम्।
स्नात्वा तु गारुडे तीर्थे शुद्धवस्त्रधरः शुचिः॥ (११)

11. விடியற்காலையில் எழுந்து, பிரதிதினம் கருட தீர்த்தத்தில் ஆறுமாதங்கள் நீராடி, ஶுத்தவஸ்த்ரமணிந்து

पीत्वा गारुडतीर्थाम्बु गरुडेनाभिमन्त्रितम्।
कवीनामग्रणीर्विद्वान् भवेन्मूकोऽपि निस्तुलः॥ (१२)

12. கருடமந்த்ரத்தால் மந்த்ரிக்கப்பட்ட தீர்த்தத்தைப் பருகி வரும் மனிதன், ஊமையாக இருந்தாலும், கவிகளில் சிறந்த வித்வானாக இணையற்று இருப்பான்.

प्रतिमास सिनीवाल्या गारुड तीर्थमुत्तमम्।
स्थित्वा तु गारुडं मन्त्र जप्त्वा निश्चलमानसः॥ (१३)

13. பிரதிமாஸம் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தஶி திதியில் உத்தமமான கருடதீர்த்தத்தில் நின்று கொண்டு, சலநமற்ற மனத்துடன் கருட மந்த்ரத்தை ஜபித்து,

अर्चयित्वा तु विधिवत् वैनतेयमनामयम्।
गुडान्नं पायसान्न च मधुमिश्रं घृतप्लुतम्॥ (१४)

*14. வியாதிகளை குணமாக்குகிற வைநதேயனை முறைப்படி ஆராதித்து, சர்க்கரைப் பொங்கல், பாயஸம் முதலியவற்றையும் தேன், நெய் முதலியவற்றுடன் கலந்து இருக்கிற இனிமையான உணவு வகைகளையும்,*

अतिस्वादुफलोपेतं पीयूषकलशैर्युतम्।
निवेद्य तस्मै विधिवत् वैनतेयाय भक्तितः॥ (१५)

*15 அதிகமான இனிப்பு உடைய பழங்களோடு சேர்த்து அம்ருதகலசங்களுடன் கூடிய யாவற்றையும் முறைப்படி பக்தியுடன் கருட பகவானுக்கு நிவேதனம் செய்து,*

वैष्णवान् भोजयेद्यस्तु पायसं च निवेदितम्।
सुप्रीतो विनतापुत्रो तस्मै दद्यादभीप्सितम्॥ (१६)

*16. அந்த நிவேதிக்கப்பட்ட பாயஸத்தை ஸ்ரீவைஷ்ணவர்களை சாப்பிடச் செய்கிற மனிதனுக்கு, விநதையின் குமாரனான கருடன், அவனுடைய விருப்பங்களை நிறைவேற்றுகிறார்.*

स्नातश्चेत् गारुडे तीर्थे सर्पभीतिर्न जायते।
सर्वरोगोद्भवा रोगाः प्रणश्यन्ति न सशय. ॥ (१७)

*17. இந்த கருடதீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் எந்த வித பாம்பு பீதியும் ஏற்படாது. சரீரத்தில் ஏற்படக் கூடிய வியாதியால் ஏற்படக் கூடிய பயங்களும் நீங்கி விடும் என்பதில் ஸந்தேஹமில்லை.*

तारातारानुताराणां सिद्धिः स्नानाद्भवेध्द्रुवम्॥

*நக்ஷத்திரங்களாலும், க்ரஹங்களாலும், ஏற்படக் கூடிய நல்ல பலன்கள் ஸ்நானத்தால் ஸித்திக்கின்றன.*

चन्द्रसूर्योपरागेषु तीर्थे गारुडसञ्ज्ञके।
स्नात्वा च तीर्थमध्ये तु जप्त्वा गारुडमुत्तमम्॥ (१८)

18. சந்த்ர, ஸூர்ய க்ரஹண காலங்களில் கருடனின் பெயரைக் கொண்ட இந்த தீர்த்தத்தில் நீராடி, தீர்த்தத்தின் நடுவில் நின்று, உத்தமமான கருட மந்த்ரத்தை ஜபித்தால்,

भवेत्तत्कोटिगुणितं शतमप्यक्षय भवेत्।

நூறு கோடிக்கணக்கில் பலன்கள் குறையாததாய் ஏற்படும்.

धनुर्मासे विरिञ्चाख्यमुहूर्ते चित्तशुद्धिदे।
यः स्नात्वा गारुडे तीर्थे गोविन्देश समर्चयेत्॥ (१९)

19. மார்கழி மாதம் விடியற்காலையில் சித்த ஶுத்தியைத் தரும் தீர்த்தத்தில் நீராடி, ஸ்ரீகோவிந்தராஜனை அர்ச்சிப்பானேயாகில்

तस्मै दद्याच्च गा भूमि पुण्यानामभिवृध्दये।

அவன் செய்த புண்ணியங்களின் அபிவ்ருத்திக்காக, பசுக்களையும், பூமியையும், பலனாகக் கொடுக்கிறான்.

ऋषिर्गारुडतीर्थस्य वैनतेयः खगेश्वर.।
देवता पुण्डरीकक्षो जगत्सर्गावनान्तकृत्॥ (२०)

20. இந்த கருட தீர்த்த ஸ்நான மந்திரத்துக்கு பக்ஷிராஜனான கருடன் ரிஷியாவார். ஜகத்தை ஆக்கி, அளித்து, ஆண்ட ஜகத்ரக்ஷகனான புண்டரீகாக்ஷன் தேவதையாவார்.

किङ्करो जगदीशस्य सुमुखः तीर्थरक्षकः।

ஜகதீசன் ஸ்ரீமந்நாராயணனின் ஸேவகரான ஸுமுகர் தீர்த்த ரக்ஷகராவார்.

गारुडं पुण्डरीकाक्षं सुमुखं च गणाधिपम्।
एतान् प्रणम्य गरुडगायत्रीमेकदा वदन्॥ (२१)

21. கருட பகவானையும், புண்டரீகாக்ஷனான ஸ்ரீமந்நாராயணனையும், ஒரு தடவை கருட காயத்ரியை சொல்லி,

सेचयेत्सर्वगात्राणि पश्चाद्गरुडतीर्थके ॥

அதன் பிறகு கருடதீர்த்தத்தில் சரீரத்தை நனைக்க வேண்டும்.

जले गारुडतीर्थस्य स्नाने चैव विधिः स्मृतः।
स्नातव्यं विधिना तेन नान्यथा निष्फलं भवेत्॥ (२२)

22. கருடதடாக தீர்த்தத்தில் ஶாஸ்த்ர விதிப்படி நீராடவேண்டும். அப்படிச் செய்வதால் எந்தக் காரியமும் நிஷ்பலம் ஆவதில்லை. இல்லாவிடில் வீணாகும்.

तस्मात्त्व गारुडे तीर्थे स्नानं पर्वणि पर्वणि।
कृत्वा संपूजयेद्विष्णुं प्राप्स्यसे परमं पदम्॥ (२३)

23. எனவே, பௌர்ணமி தோறும் நீ கடதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்து, மிக உயர்ந்ததான வைகுந்த பதவியை அடையப் போகிறாய்.

माघमासे तु पौर्णम्यां मघर्क्षे प्रतिवत्सरम्।
गारुडेन महाभक्तिश्रद्धायुक्तेन वै हरिः॥ (२४)

24. மாசி மாதப் பௌர்ணமியில் மகநக்ஷத்திர நன்னாளில் வருஷம் தோறும் மிகவும் பக்தி ச்ரத்தையுடன் உள்ள கருடனாலே ப்ராத்திக்கப்பட்டு

प्रार्थितस्सकलैर्देवैर्मुनिभिर्मनुजैर्वतः।
गोविन्दराजो भगवान् श्रीभूनीलासहायवान्॥ (२५)

25. ஸ்ரீபூமிநீளா தேவியுடன் கூடின கோவிந்தராஜ பகவான் எல்லா தேவர்களாலும், முனிவர்களாலும், மனிதர்களாலும், கூடினவராய்

पावनार्थाय लोकनां प्रीतये गरुडस्य च।
आयात्येव समुद्रस्य सेवार्थाय जगत्पतिः॥(२६)

26. லோகத்தை பரிஸுத்தமாக்கி ரக்ஷிப்பதற்காகவும், கருடனின் ப்ரீதிக்காவும், ஜகதீசனான ஸ்ரீமந்நாராயணன், எல்லா உயிர்களுக்கும் ஸேவை ஸாதிப்பதற்காக ஸமுத்ரத்துக்கு எழுந்தருளுகிறார்.

गरुडावाहनः श्रीमान्
[illegible] सेवार्थं सर्वदेहिनाम्। ([illegible])
क्टाक्षेणैव तस्य त्वं मुक्तिमाप्नुहि जैमिने॥(२७)

27. கருடன் மீது ஆரோஹணித்து அனைத்து ஜீவராசிகளுக்கும் ஸேவை ஸாதிப்பதற்காக ஸமுத்ரத்துக்கு எழுந்தருளுகிறார். பகவானை ஸேவித்து, அவருடைய கடாக்ஷத்தால், ஜைமினியே ! நீர் முக்தி அடையும் என்று வ்யாஸர் கூறினார்.

इति गरुडतीर्थवर्णनं नाम एकादशोऽध्यायः

பதினோராம் அத்யாயம் முற்றிற்று.

## ஸ்ரீ பவிஷ்யத் புராணத்திலுள்ள

## ஸ்ரீ சித்ரகூட மாஹாத்ம்யம் நிறைவு பெற்றது.

# பகுதி 6

## ஸ்ரீப்ரம்ஹாண்ட புராணத்திலுள்ள சித்ரகூட மாஹாத்ம்யத்தில் ப்ரஹ்மா நாரத ஸம்வாதத்தில் முதல் அத்யாயம்

एतत्सर्गावनन्तादिकारणस्य जगत्पतेः।
शासनं शाश्वतं श्रीमद्गोविन्देशस्य वर्धताम्॥ (१)

*1. ஆதியும் அந்தமுமில்லாதவனும், இந்த லோகஸ்ருஷ்டிக்குக் காரணமாயிருப்பவனும், லோகநாயகனுமான ஸ்ரீகோவிந்தராஜனின் அருளரசு என்றும் பரந்து நிலைத்திருப்பதாக.*

शिवकाल्योर्नर्तनार्थं श्रिया भाति सभापति.।
देवाना रक्षणार्थाय देवाधीशो विराजते॥ (२)

*2. ஈசன், காளி இவர்களின் நாட்யத்துக்காக ஸபாபதியான ஸ்ரீமந்நாராயணன் மஹாலக்ஷ்மியுடன் பிரகாஶிக்கிறான். தேவர்களின் ரக்ஷணத்துக்காக தேவாதீஶனான ஸ்ரீகோவிந்தராஜன் எழுந்தருளியிருக்கிறான்.*

कण्वप्रार्थनया भाति कामदः पार्थसारथिः।
प्रार्थनया पतञ्जलेर्भाति वैकुण्ठनायकः॥ (३)

*3. கண்வமுனிவரின் ப்ரார்த்தனையால் விரும்பியதை அளிக்கும் பார்த்தஸாரதி ப்ராகாஶிக்கிறான். பதஞ்ஜலி முனிவரின் ப்ரார்த்தனையால், வைகுண்டபதியான ஸ்ரீமந்நாராயணன் பிரகாஶிக்கிறான்.*

कुशीलपालराजर्षेः प्रार्थनास्तोत्रवैभवात्।
पट्टाभिरामो भाभाति पालयन्क्ष्मां परात्परः॥ (४)

*4. குசீலபாலன் என்னும் ராஜரிஷியினுடைய ப்ரார்த்தனையாலும், ஸ்தோத்ரங்களின் மஹிமையாலும் பரமாத்மாவான பட்டாபிராமன் இந்தப் பூதலத்தை ரக்ஷித்துக் கொண்டு ஶோபையுடன் ப்ரகாஶிக்கிறான்.*

एवं पञ्चप्रकरेण मणिसिंहासने स्थितः।
देवादिदेवो भगवन् भाति गोविन्दनायकः॥ (५)

5. இவ்வாறாக, ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் ஐந்து ப்ரகாரமாக எழுந்தருளியிருக்கிற தேவாதிதேவனான பகவான் ஸ்ரீகோவிந்தராஜன் ப்ரகாஶித்துக் கொண்டிருக்கிறான்.

तिल्लीकान्तारमध्ये प्रथितसितनदीदक्षिणे पश्चिमाब्धेः
कवेर्याश्चोत्तरेऽस्मिन् किटिपुरपुरतः पत्तने चित्रकूटे।
सात्विकाख्ये विमाने कनकमणिसभामध्यतः शेषशायी
श्रीभूनीलासमेतश्शिवविधिविनुतः पातु गोविन्दराजः॥ (६)

6. தில்லீவனத்தின் நடுவில் வலது பக்கம் பிரஸித்தமான, வெள்ளி போன்ற தெளிந்த நீரை உடைய, வெள்ளாறு நதியையும், ஸமுத்ரத்திற்கு மேற்கிலும், காவிரிக்கு வடக்கிலும், கிடி புரம் என்னும் நகருக்கு எதிரில் அமைந்துள்ள திருச்சித்ரகூட நகரில் ஸாத்வீக விமானமுடைய கனகமணி ஸபாமண்டபத்தின் நடுவில் ஆதிஶேஷன் மீது ஶயனித்திருக்கும் ஸ்ரீபூமிநீளாஸமேதனாக முக்திக்கான விதியை அறிவிக்கிற ஸ்ரீகோவிந்தராஜன் நம்மை ரக்ஷிப்பாராக.

मूर्धानं दक्षिणस्यां दिशि पदयुगलं चोत्तरस्यां विधाय
प्राची सवीक्षमाणः करयुगलविलसच्चक्रमप्योपधाय।
ऊरौ पाणिं मनोज्ञे परमपरभुजं चोपधायाऽहितल्पे
निद्राणो ब्रह्मलक्ष्मीक्षितिविनुतपदः पातु गोविन्दराजः॥ (७)

7. தென் திஶையில் ஶிரஸை வைத்தும், இரண்டு பாதங்களை வடதிஶையில் நீட்டியும், கிழக்குத்திஶையில் பார்வையைச் செலுத்தியும், இரண்டு கைகளிலும் ஒளி பொருந்திய ஶங்க சக்ராதிகளைத் தரித்தும், மனோஹரமான துடையில் ஒரு புஜத்தை வைத்தும், மற்றொரு புஜத்தை ஆதிஶேஷனாகிற படுக்கையில் அமர்த்தியும், பாதஙகளின் அருகில் ப்ரஹ்மா, லக்ஷ்மீ, பூதேவி முதலானோர் அமர்ந்திருக்க, (யோக) நித்ரை புரிந்து கொண்டிருக்கும் ஸ்ரீகோவிந்தராஜன் நம்மை ரக்ஷிப்பாராக.

कृत्वैकं रत्नपीठे पदमितरपदं न्यस्य हस्ताब्जपङ्क्तौ
शङ्खं चक्रं च तोत्रं क्रमशतविलसज्ज्ञानमुद्रां दधानः।
श्रीभूनीलाप्रतिश्रीमणिमकुटमुखैर्भूषणैर्भूषिताङ्गः
श्रीमान्देवादिदेवो मणिकनकसभानायको भाति नित्यम्॥ (८)

8. ரத்னமயமான பீடத்தில் ஒரு திருவடியை வைத்தும், மற்றொரு (மடித்த) திருவடி மீது வைக்கப்பட்ட தாமரைக்கு ஒப்பான கையை உடையவராயும், மூன்று கைகளிலும் முறையே ஶங்கம், சக்ரம் தாற்றுக்கோல் (மெல்லிய உறுதியான கயிறுடன் கூடிய கதை போன்ற உருவமுள்ள ஆயுதம்) முதலானவற்றைத் தாங்கியும், நான்காவது ஹஸ்தத்தில் ஞானமுத்ரை தரித்தும், ஸ்ரீ, பூ, நீளாதேவியுடன் மணிமகுடம் தரித்த ஶிரஸை உடையவராயும், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியை உடைய, தேவாதிதேவன், மணி கனக ஸபாநாயகனான ஸ்ரீகோவிந்தராஜன், அழகாக ஒளி வீசுகிறான்.

अग्रे न्यस्य कमलचरणं जानुनैकेन तिष्ठन् पश्चात्पार्थप्रणयरसजुट्चक्षुषा प्रेक्षमाणः
सव्ये तोत्रं करसरसिजे दक्षिणे ज्ञानमुद्रा आबिभ्राणो रथमधिवसन् पातु नरसूतवेषः॥ (९)

9. முன்னால் தாமரையை போன்ற திருவடியை வைத்து, ஒரு காலை மடித்துக் கொண்டு வீற்றிருந்த திருக்கோலத்துடன் தனக்குப் பின்னால் அமர்ந்திருக்கிற பார்த்தனைக் கருணாரஸம் நிரம்பிய கண்களால் கடாக்ஷித்துக் கொண்டு, தாமரை மலருக்கு ஒப்பான இடது கையில் சாட்டையைத் தாங்கியும், வலது கையால் ஞானமுத்ரை காண்பித்தும், தேரைச் செலுத்திக் கொண்டு தேரோட்டியின் வேஷத்திலிருக்கிற பார்த்தஸாரதி நம்மை ரக்ஷிப்பாராக.

व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम्।
पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम्॥ (१०)

10. வஸிஷ்ட முனிவரின் (பெண் வயிற்றுப்) பேரனும், சக்தியின் பௌத்ரனும், பராசரமுனிவரின் குமாரனும், ஶுகப்ரஹ்ம முனிவரின் தந்தையும், தோஷங்களவற்றவரும், தபோநிதியுமான வ்யாஸ முனிவரை வணங்குகிறேன்.

चित्रकूटे भुजङ्गेन्द्रश्रीभूम्यामधिशायिने।
ब्रह्मेशेन्द्रादिसेव्याय गोविन्दायाऽस्तु मङ्गलम्॥ (११)

11. திருச்சித்ரகூடத்தில், ஸ்ரீ, பூமி, நீளா, நாச்சிமாரோடு ஆதிஶேஷன் மீது ஶயனித்திருப்பவரும், சதுர்முகன், பரமேச்வரன், இந்த்ரன் முதலான தேவர்களால் துதிக்கப்டுகிற ஸ்ரீகோவிந்தராஜனுக்கு மங்களம் உண்டாகட்டும்.

पुरा तु नैमिशारण्ये शौनकाद्या महौजसः।
ऋषिश्रेष्ठा द्वादशाब्ददीक्षितास्तत्र भासत॥ (१२)

12. முன்னொரு காலத்தில் முனிவர்களில் சிறந்தவர்களும், மஹான்களுமான ஶௌனகர் முதலான ரிஷிகள் நைமிசாரண்யத்தில் பன்னிரண்டு வருஷங்கள் தீக்ஷை பெற்றவர்களாக அங்கு வஸித்தனர்.

तदा दिग्भ्यस्समाहूताः वेदवेदाङ्गपारगाः।
सर्वशास्त्रार्थतत्वज्ञाः आगताः ब्रह्मवादिन :॥ (१३)

13. அப்போது அங்கு திஶைகள் எல்லாவற்றுக்கும் சென்றவர்களாயும், வேத, வேதாந்தங்கங்களில் சிறந்த புலமை பெற்றவர்களாயும், எல்லா ஶாஸ்த்ரார்த்த தத்வங்களை அறிந்தவர்களாயும், வேதாந்திகளுமான அந்தணர்கள் வந்தனர்.

वसिष्ठोऽत्रिर्भृगुर्धौम्यो भरद्वाजोऽङ्गिरास्सुधीः।
मृगण्डुर्गौतमो दाल्भ्यो गर्गोऽगस्त्योऽथ मौद्गलः॥ (१४)

14. வஸிஷ்டர், அத்ரி, ப்ருகு, தௌம்யர், பரத்வாஜர், ஆங்கிரஸர், மிருகண்டு, கௌதமர், தால்ப்யர், கர்கர், அகஸ்தியர், மௌத்கலர் முதலான ஞானிகளும்,

शतानन्दश्च दुर्वासा गालवः पुलहोक्षपात्।
पुलस्त्यो याज्ञवल्क्यश्च शङ्खो बोधायनो गुरुः॥ (१५)

15. ஶதாநந்தர், துர்வாஸர், காலவர், ஸூர்யனைப் போல் ஒளி வீசுகிற புலஹர், புலஸ்த்யர், யாஜ்ஞவல்க்யர், ஶங்கர், போதாயனர் போன்ற ஆசார்யர்களும்,

आपस्तम्बो मतङ्गश्च वत्सः कौशिक एव च।
विश्वामित्रो महातेजा सानन्दश्च पराशरः॥ (१६)

*16. ஆபஸ்தம்பர், மதங்கர், வத்ஸர், கௌஶிகர், மஹாதேஜஸ்விகளான விச்வாமித்ரர், பராஶரர் போன்ற முனிவர்களும்,*

एते चान्ये च बहवो मुनयः संशितव्रताः।
क्षमावन्तो महात्मानः स्वशिष्यैः संघशो बहुः॥ (१७)

*17. வ்ரதானுஷ்டானங்களில் சிறந்தவர்களாயும், பொறுமைஶாலிகளாயும், மஹான்களாயுமிருக்கிற இன்னும் அநேக முனிவர்களும் தங்கள் சிஷ்யர்களோடு அங்கே கூடினார்கள்.*

तानागतान् समालोक्य नैमिशारण्यवासिनः।
शौनकादिमुनिश्रेष्ठाः मुनिश्रेष्ठान् महौजसः॥ (१८)

*18. நைமிசாரண்யவாஸிகளான ஶௌனகர் முதலான முனிபுங்கவர்கள், அங்கு வந்துள்ள தவச்சீலர்களும், மஹான்களுமான ரிஷிகளை,*

संपूज्य विधिवत्तांस्तु प्रत्युत्थानादिवन्दनैः।
कुर्वन्त : कुशलप्रश्नमन्योन्यं प्रीतिपूर्वकम्॥ (१९)

*19. விழுந்து எழுந்து செய்யும் ப்ரணாமங்களுடன் முறைப்படி உபசரித்து, ஒருவொருக்கொருவர் ப்ரீதிபூர்வமாக குஶலப்ரச்னங்கள் செய்து,*

आसनेषूपविष्टास्ते हृष्टा मुनिचयास्तदा।
क्षणं विमृश्य सौहार्दान् अपृच्छन् धर्ममुत्तमम्॥ (२०)

*20. அப்போது அந்த முனிவர்கள் மிகவும்ஸந்தோஷமடைந்தவர்களாக ஆஸனங்களில் அமர்ந்தனர். சிறிது நேரம் ஸௌஹ்ருத்துக்களான முனிவர்களிடம் உயர்ந்த தான தர்மங்களை ஆராய்ந்து கேட்டனர்.*

केचिद्यज्ञविधानेषु श्रुतिस्मृतिषु सङ्गतः।
केचित्तर्कादिशास्त्रेषु केचिच्छब्दादिषु क्रमात्॥ (२१)

21. சிலர் யாக விதிகளைப் பற்றியும், ச்ருதி, ஸ்ம்ருதி ஸம்பந்தமான விஷயங்களையும், தர்க்கம் முதலான ஶாஸ்த்ரங்கள் பற்றி சிலரும், ஶப்த ப்ரதானமான விஷயங்கள் பற்றி சிலரும்,

केचिद्वेदान्तमार्गेणु केचिन्मीमांसोक्तिषु।
पृथक् पृथक् वादयन्तः पूरयन्ति स्वनैर्दिशः॥ (२२)

22. சிலர் வேதாந்த மார்க்கங்களிலும், சிலர் மீமாம்ஸா சாஸ்த்ரங்களிலும் தங்கள் தங்கள் வதனத்தில் உண்டாகும் சொற்களால் தனித்தனியாக வாதம் செய்து பூர்த்தி செய்தனர்.

एकदा मुनयस्सर्वे कृत्वा पूर्वाह्णिकीः क्रियाः।
विधिवद्विष्णुमाराध्य यज्ञकर्म प्रसाध्य च॥ (२३)

23. ஒரு ஸமயம் முனிவர்கள் எல்லோரும் முற்பகலில் செய்ய வேண்டிய கர்மாக்களை முடித்து, முறைப்படி விஷ்ணுவை ஆராதித்து, யாகாதி கார்யங்களைச் செய்து,

फलमूलाशना दान्ताः हृष्टाः पूर्णजितेन्द्रियाः। (२४)

24. ஜிதேந்த்ரியர்களான முனிவர்கள்; கனி, கிழங்கு முதலியவற்றால் பசியாறி மகிழ்ச்சியுடனிருந்தனர்.

नानाक्षेत्रमाहात्म्यं पृच्छन्तोऽन्योन्यमास्थिता। (२५)

25. பலவித க்ஷேத்ரங்களின் மாஹாத்ம்யங்களை பரஸ்பரம் கேட்டுக் கொண்டுமிருந்தார்கள்.

एतस्मिन्नन्तरे सूतस्सर्वज्ञो विनयान्वितः।
यज्ञार्थमागतान् श्रुत्वा मुनींस्तांस्तत्र चागत॥ (२६)

26. இதன் நடுவில் ஸர்வஜ்ஞரும், விநயத்துடன் கூடினவருமான 'ஸூத' முனிவர் யாகம் செய்வதற்காக வந்திருப்பததைக் கேட்டு,

आगतं सूतमालोक्य सानन्दा मुनयोऽखिलाः।
संपूज्य कुशल पृष्टाः ददुरासनमुत्तमम्॥ (२७)

27. எல்லா முனிவர்களும் மிக்வும் ஆனந்தத்துடன் அங்கு வந்திருக்கிற ஸூதமுனிவரைப் பார்த்து, அவரை உபசரித்து, குஶலம் விசாரித்து உத்தமமான ஆஸநம் அளித்தார்கள்.

सूतोऽपि तान् प्रणम्याऽथ बध्दाञ्जलिपुटो मुदा।
तदाज्ञयोपविष्टस्सन् सर्वविद्भुवि विश्रुतः॥ (२८)

28. இந்த பூதலத்தில் அனைத்து விஷயங்களையும் அறிந்திருக்கிற ஸூதமுனிவர் அங்குள்ள ரிஷிகளை வணங்கி, அஞ்ஜலி ஹஸ்தராக இருந்து, அந்த முனிவர்களின் ஆக்ஞைக்கு இணங்கி ஆஸனத்தில் அமர்ந்தார்.

ऋषय. भो(:) भो(:) सूत महापूज्य पुराणकथनाग्रणीः।
त्वयाऽखिलपुराणानि सेतिहासानि यानि च॥ (२९)

29. ரிஷிகள் ஸூதமுனிவரைப் பார்த்துக் கூறுகின்றனர். 'பூஜிக்குத்தக்க முனிவரே ! தேவரீர் புராணங்களைப் ப்ரவசனம் செய்வதில் முதன்மையானவர். உம்மால் இவ்வுலகில் உள்ள இதிஹாஸ புராணங்கள் அனைத்தும்,

विविधानि च शास्त्राणि कथाश्च विविधा भुवि।
भूतं भव्यं भविष्यं च यानि यानि महामते॥ (३०)

30. பலவிதமான ஶாஸ்த்ரங்களும், இவ்வுலகில் நடந்ததும், நடக்கிறதும், நடக்கவிருக்கிறதுமான பலவித கதைகளும்

अष्टादशपुराणानां कर्त्तुर्व्यासस्य धीमतः।
महतोऽनुग्रहात्सर्वं करस्थमिव वेत्सि किम्॥ (३१)

31. பதினெண் புராணங்களை இயற்றிய ஜ்ஞானியான வ்யாஸ முனிவரின் மஹத்தான அநுக்ரஹத்தால் எல்லாவற்றையும் மிகவும் நன்றாக அறியப்பட்டுள்ளது.

हरेर्हरस्य भूलोके क्षेत्राणां परमाद्भुतम्।
माहात्म्यं त्वत्कृतं पूर्वमस्माभिस्सूत पावनम्॥ (३२)

32. ஸூத முனிவரே ! இந்த பூலோகத்தில் எங்களால் முன்பு ஸ்ரீஹரியினுடையவும், பரமேஸ்வரனுடையவும், க்ஷேத்திரங்களில் மிக அற்புதமானதும் பலவித கதை அத்புதமானதும், மிகவும் பாவனமானதுமான மாஹாத்ம்யம்,

सत्यलोके पुरा ब्रह्मा पृच्छन्तं नारद मुनिम्।
सभायां सनकदीनां शृण्वतां योगिनां पुरः॥ (३३)

33. ஸத்யலோகத்தில் முன்னொரு ஸமயம், நாரமுனிவரிடம் ஸபையில் ஸனகாதி முனிவர்களின் எதிரில் ப்ரம்ஹ தேவர் கேட்டு அறிந்து கொண்டதும்,

सर्वकमप्रदं नित्यं सर्वेषामघनाशनम्।
सर्वारिष्टहरं लोके शृण्वतां पठता नृणाम्॥ (३४)

34. ஶாச்வதமான விருப்பங்களைத் தரக்கூடியதும், எல்லோருடைய பாபங்களைப் போக்கக் கூடியதும், காதால் கேட்டும் வாயினால் பாராயணம் செய்கிற இவ்வுலக மனிதர்களின் ஆபத்துக்களை அழிக்க வல்லதும்,

पुण्यदं धर्मकमार्थमोक्षदं लोकविश्रुतम्।
चित्रकूटमाहात्म्यमब्रवीदिति विश्रुमः॥ (३५)

35. புண்ணியத்தையும், தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நால்வகை புருஷார்த்தங்களைத் தரக்கூடியதும், உலகப் புகழ் பெற்றதுமான திருச்சித்ரகூட மாஹாத்ம்யம் தேவரீரால் சொல்லப்பட்டது என்று நாங்கள் அறிகிறோம்.

तदद्य विस्तरेणैव श्रोतुमिच्छावतां तु नः।
ब्रूहि तत्वं समालोच्य सूत सर्वं यथाक्रमम्॥ (३६)

36. அதை இப்போது விஸ்தாரமாக கேட்க விரும்புகிற எங்களுக்குத் தேவரீர் எல்லாவற்றையும் முறைப்படி ஆலோசித்துச் சொல்வீராக.

इति पृष्टस्तदा सूतस्तपोधनवरैः सुधीः।
ध्यात्वा मुहूर्तं तत्सर्वं प्रोवाच मुदितो मुनिम्॥ (३७)

37. இவ்வாறு ஞானியான ஸூதமஹரிஷி தபோவனத்தில வஸிக்கின்ற முனிவர்களாலே கேட்கப்பட்டு, மிகவும் ஸந்தோஷமடைந்தவராக சிறிது ஆலோசித்து முனிவர்களைப் பார்த்துக் கூறலானார்.

ऋषयो यूयमार्याग्र्याः सर्वज्ञाः खलु भूतले।
तथाप्यनुग्रहाद्वक्ष्ये शृणुध्वं सावधानतः॥ (३८)

38. ரிஷிகளே! நீங்கள் மேன்மையானவர்களிலும் சிறந்தவர்கள். இந்த பூவுலகில் நீங்கள் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர்கள். அப்படியிருப்பினும் உங்களது அநுக்ரஹத்துடன் சொல்லத் தொடங்குகிறேன். கவனமாகக் கேட்பீர்களாக.

इति श्रीस्वगूरुं व्यास नत्वा ध्यात्वा श्रियःपतिम्।
श्रीचित्रकूटमाहात्म्यं प्रवक्तुमुपचक्रमे॥ (३९)

39. என்பதாகச் சொல்லி ஸூதமுனிவர் தனது குருவான வேதவ்யாஸரை வணங்கி ச்ரிய:பதியான ஸ்ரீமந்நாராயணனை மனதால் த்யானித்து ஸ்ரீசித்ரகூட மஹாத்ம்யத்தை சொல்லத் தொடங்கினார்.

पुरा कृतयुगे भूम्यां कदाचित्सहतुम्बुरुः।
नारदो विविधान्देशान् महानद्रिसरिद्द्रुमान्॥ (४०)

40. முன்னொரு ஸமயம் க்ருதயுகத்தில் பூலோகத்தில் நாரதமுனிவர் தும்புரு ரிஷியுடன் கூட பல தேசங்களையும், வதங்கள், நதிகள், வனாந்தரங்களையும்,

विचित्राण्यपि भूलोके क्षेत्राण्यालोक्य सर्वतः।
सत्यलोकं ततो गत्वा सभायामासने स्थितम्॥ (४१)

41. விசித்ரமான க்ஷேத்ரங்கள் எல்லாவற்றையும் பார்த்து பிறகு ஸத்யலோகம் சென்று, ஸபையில் ஆஸனத்தில் அமர்ந்திருப்பவரும்,

अतिरक्तमुदाराङ्गं चतुर्वक्त्रं शशिद्युतिम्।
किरीटहारकेयूरकुण्डलाभरणोज्वलम्॥ (४२)

42. நல்ல சிவந்த நிறமுடன் கம்பீரமான ஶரீராவயவங்களையுடைவரும், நான்கு முகங்களையுடைவரும், சந்திரனைப் போன்ற காந்தியுடையவரும், கிரீடம், தோள்வளையம், ஹாரம், குண்டலங்கள் முதலான ஆபரணங்களனிந்து ப்ரகாஶிப்பவரும்,

कम्बुकण्ठं विशालाक्षं सुकपोलं सुनासिकम्।
स्वर्णोपवीतविभ्राजत्पीनविस्तारवक्षसम्॥ (४३)

43. அழகான கழுத்தையும், விஶாலமான கண்களையும், அழகான கன்னங்களையும், மூக்கையும், ஸ்வர்ணமயமான உபவீதமணிந்த பரந்த மார்பையும் உடையவரும்,

सिंहस्कन्धं स्फुरद्रत्नहारपुष्पस्रगुज्वलम्।
पीतांबरधरं राजत्कटिसूत्रं सुमध्यमम्॥ (४४)

44. ஸிம்ஹம் போன்ற திரண்ட தோள்களையுடையவரும், ப்ரகாஶமான ரத்னஹாரத்தையும், மிக அழகான புஷ்பமாலை அணிந்தவரும், பீதாம்பரம் அணிந்தவரும், ம்ருதுவான கடிஸூத்ரம் (அரைஞாண்) அணிந்தவரும்,

दिव्योदरतलं लोलत्कटकाङ्गदमण्डलैः।
मण्डितोद्दण्डदोर्दण्डषण्डशोभितजानुकम्॥ (४५)

45. திவ்யமான உதரத்தின் மேற்புறத்தை உடையவரும், ப்ரகாஸமான தோள்களை, காப்பு முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களையும், கால்வளை போன்ற ஆபரணங்களின் ஶோபையுடன் கூடிய முழங்கால்களை உடையவரும்,

मन्दहासस्फुरद्वक्त्रचन्द्रसच्चन्द्रिकोज्वलम् ।
आकुञ्चितपदाम्भोजराजत्सिंहासने स्थितम् ।। (४६)

46. புன்சிரிப்பினால் ஒளி வீசுகின்ற, சந்த்ரகிரணம் போன்று குளிர்ச்சியுடன் ப்ராகஸிக்கின்ற முகமுடையவரும், தாமரை மொட்டுப் போன்று பாதங்களை உடையவரும் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவரும்,

सनकादिभिरार्यैश्च ब्रह्मनिष्ठैस्सदाऽवृतम् ।
ऋग्यजुस्सामाथर्वाख्यैर्वेदपूषैर्निषेवितम् ।। (४७)

47. ப்ரம்ஹ நிஷ்டர்களான ஸனகாதி முனிவர்களால் சூழப்பட்டிருப்பவரும், ரிக், யஜுர், ஸாம, அதர்வ வேதங்களால் பூஜிக்கப்படுபவரும்,

सरूपैश्च षडङ्गाख्यदेवैः कालादिदैवतैः ।
महापुण्यफलप्राप्तदिव्यरूपैर्नरोत्तमैः ।। (४८)

48. நல்ல உருவமுடையவர்களாயும், ஆறுவித அங்கலக்ஷணங்களுடன் கூடிய தேவர்களாலும், காலன் (ம்ருத்யு) முதலான தேவதைகளாலும், அதிக புண்யம் செய்ததால் நல்ல பலனைப் பெற்று திவ்யமான உருவங்களையுடைய உத்தமமான மனிதர்களாலும்,

इन्द्रादिलोकपालैश्च पूजितं पुरुषोत्तमम् ।
सिध्दचारणसाध्यैश्च विद्याधरमहोरगैः ।। (४९)

49. இந்திரன் முதலான அஷ்ட திக்பாலர்களாலும், ஸித்த, ஸாரணர், வித்யாதரர் முதலான மஹா புருஷர்களால் பூஜிக்கப்பட்ட புருஷோத்தமனை

यक्षराक्षससङ्घैश्च देवासुरगणैर्नुतम् ।
गन्धर्वरागमुखरं सवीणातालमर्द्दलम् ।। (५०)

50. யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் முதலான கூட்டங்களாலும், தேவாஸுர கணங்களாலும் வீணை, தாளம், மத்தளம் முதலான வாத்யங்களுடன் கந்தர்வ ராகத்தாலே பூஜிக்கப்படுபவரும்,

दयापूर्णाक्षियुगलं दीप्यमानं स्वतेजसा ॥ (५१)

51. திவ்யமான அப்ஸரஸ்களின் நாட்யத்தை பார்த்துக் கொண்டிருப்பவரும், லோக நாயகனும், தன்னுடைய தேஜஸால் கருணை நிரம்பிய கண்களோடு இருப்பவரும், ப்ரகாசமாயிருப்பவரும்,

सर्वसृष्टिकरं देवं सर्वाभीष्टफलप्रदम् ।
महावीर्यं महासत्वं महासौन्दर्यशोभितम् ॥ (५२)

52. அனைத்து ஜீவராசிகளுக்கும் ஸ்ருஷ்டி கர்த்தாவாகவும், நமது விருப்பங்களுக்குத் தகுதியான பலனை அளிப்பவராகவும், வீர்யம் நிறைந்தவராயும், ஸத்வகுணமுள்ளவரும், ஆதிக வீர்யம் நிறைந்தவராயும், ஸத்வகுணமுள்ளவரும், அதிக ஸௌந்தர்யம் நிறைந்த சோபையுடன் கூடிய தேவரும்

ब्रह्माणं ब्रह्मसभूतं सर्वेषां च पितामहम् ।
सिम्हासने स्थितं देव्या सरस्वत्या विराजितम् ॥ (५३)

53. தேவர்கள் எல்லோரைக் காட்டிலும் மிகப் பெரியவரும், பரப்ரம்மத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவரும், தேவியான ஸரஸ்வதியரோடு கூடி ப்ரகாசிப்பவரும், ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவரும்

जगन्मात्रा श्रिया सार्धं साक्षाद्विष्णुमिव स्थितम् ।
तदाऽपश्यन्मुनिश्रेष्ठः परमेष्ठिनमव्ययम् ॥ (५४)

54. ஜகந்மாதாவான மஹாலக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் போல் இருப்பவரும், அழிவற்றவருமான ப்ரம்ஹதேவனை,

बध्दाञ्जलिर्नमस्कृत्य नारदस्सहतुम्बुरुः ।
अभूतपूर्वैर्वेदादिवाक्यै. तुष्टाव सादरम् ॥ (५५)

55. தும்புரு முனிவருடன் கூடின நாரதமுனிவர் அஞ்ஜலி ஹஸ்தராக ஸேவித்து, இதற்கு முன்னர் யாராலும் சொல்லப்படாத வேத வாக்யஙகளாலே மிகவும் விநயத்துடன் ஸ்தோத்ரம் செய்தார்.

देवदेव जगन्नाथ जगदानन्दकारक ।
विश्वरूप नमस्तेऽस्तु महादेव दयाम्बुधे ॥ (५६)

56. தேவர்களுக்கெல்லாம் தேவரே ! லோக நாயகரே ! இந்த லோக மக்களின் ஆனந்தத்துக்குக் காரணமாயிருப்பவரே ! விச்வ ரூபரே ! மஹாதேவ ! கருணாகரரே ! தேவரீருக்குப் ப்ரணாமங்கள்.

नमो विष्णुस्वरूपाय नमश्शङ्कररूपिणे।
नमो वेदान्तवेद्याय जगन्मङ्गलकारिणे॥ (५७)

57. விஷ்ணு ஸ்வரூபியான உம்மை ஸேவிக்கிறோம். ஶங்கரனுக்கு அந்தர்யாமியாக விளங்கும் உம்மை ஸேவிக்கிறோம். வேத வேதாந்தங்களை அறிந்த உம்மை ஸேவிக்கிறோம். இந்த லோக மக்களுக்குக் காரண பூதரான உம்மை ஸேவிக்கிறோம்.

यज्ञकर्त्रे जगद्धर्त्रे विधात्रे लोकसाक्षिणे।
इन्द्रार्काग्निस्वरूपाय धर्मचन्द्रस्वरूपिणे॥ (५८)

58. யஜ்ஞங்களைச் செய்பவரே ! ஜகந்நாயகரே ! ப்ரம்ம தேவரே ! இந்த லோகத்துக்கு ஸாக்ஷியாக இருப்பவரே ! இந்த்ரன், ஸூர்யன் அக்னி ஸ்வருபமாயிருப்பவரே ! தர்மமே உருவானவரே ! தேவரீரை ஸேவிக்கிறோம்.

ग्रहनक्षत्रस्वरूपाय ग्रहस्थाय नमो नम.।
धर्मरूपाय कालाय धनदानिलरूपिणे॥ (५९)

59. க்ரஹங்கள், நக்ஷத்ரங்களின் ஸ்வரூபரே ! க்ரஹங்களுக்கெல்லாம் இருப்பிடமானவரே, தர்ம தேவதையான யமன், குபேரன், வாயு முதலானவர்களின் ஸ்வரூபமானவரே உம்மை நமஸ்கரிக்கிறோம்.

वरुणाय दिगीशाय वागीशाय नमो नमः।
ब्रह्मण्याय नमस्तुभ्यं बृहद्रूपाय ते नमः॥ (६०)

60. வருண ரூபியாயும், திஶைகளின் அதிபதியாயும், வாக்தேவதையாகவும் இருக்கிற உமக்கு நமஸ்காரம். ப்ரம்மதேவரே உயர்ந்த உருவமுடையவரே ! உம்மை ஸேவிக்கிறோம்.

नमः स्रष्ट्रेऽस्तु रक्षित्रे संहर्त्रे विश्वमूर्तये।
पितामहाय सर्वेषा मत्पित्रेऽतु नमो नम.॥ (६१)

*61. இந்த உலகத்தை ஸ்ருஷ்டிப்பவராயும், ரக்ஷிப்பவராயும, ஸம்ஹாரம் செய்பவராயும், இந்த லோகத்தையே தன்னுருவமாகக கொண்ட தங்களுக்கு நமஸ்காரம. எல்லோருக்கும பிதாமஹராயும், எனக்குத் தந்தையாயுமிருக்கிற உம்மை ஸேவிக்கிறேன்.*

इत्येव बहुभि स्तोत्रै. स्तुवन्त नारदं मुनिम्।
ब्रह्माऽब्रवीदये वत्स कस्माल्लोकादिहाऽगत ॥ (६२)

*62. இவ்வாறாகப் பலவித ஸ்தோத்ரஙகளாலே துதிககிற நாரத முனிவரைப் பார்த்து, ப்ரமஹா பேசத் தொடஙகினார். குழந்தாய், எந்த லோகத்திலிருந்து நீ இங்கே வந்திருக்கிறாய் ?*

नारदः- देवदेव जगत्स्रष्ट भूलोकादहमागत.। (६३)

*63. நாரதர் - தேவாதிதேவனே ! உலகத்தைப் படைபபவரே ! நான பூலோகத்தினின்றும் இஙகே வந்திருககிறேன்.*

ब्रह्मा- कि माश्चर्यं त्वया दृष्ट तत्र नारद शस मे। (६४)

*64. ப்ரமமா - நாரத ! பூலோகத்தில உன்னால் பார்க்கபபட்ட அதிஶயமானவிஷயத்தை என்னிடம் சொலவாயாக*

नारद.-जगत्समस्त भगवन् भवता सृष्टमच्युत।
तस्मिन्न विदित किंचित् आश्चर्यमधुनाऽस्ति हि॥ (६५)

*65. நாரதர் - ஹே பகவந் ! அழிவற்றவரே ! இந்த உலகம் பூராவும் உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. இதில் தாஙகள் அறியாதது இருக்கிறதென்றால இபபோது ஆச்சரியமேறபடுகிறது*

तथाऽपि त्वत्प्रसादेन दृष्टमाश्चर्यमद्य यत्।
तत्तत्वं भगवन्ब्रह्मन् किंचिद्विज्ञापयाम्यहम्॥ (६६)

*66. அப்படியிருந்தபோதிலும், தேவரீரது அநுக்ரஹத்தால் என்னால் பார்க்கப்பட்டஅந்த தத்வத்தை, ப்ரஹ்மதேவரே ! நான் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.*

कावेरीश्वेतनद्योश्च मध्याब्धेस्तु पश्चिमे।
श्रीमुष्णमिति सत्क्षेत्रमेकमस्ति हि तत्पुरः॥ (६७)

*67. வெள்ளி போன்ற தெளிந்த நீரையுடைய காவேரி நதியின் மத்தியபாகத்தில், கடலுக்கு மேற்கில் ஸ்ரீமுஷ்ணம் என்கிற ஒரு நல்ல க்ஷேத்ரம் இருக்கிறது.*

एतन्मध्ये महापुण्यं कृष्णक्षेत्रमिति श्रुतम्।
तन्मध्ये मुनिभिस्सेव्य हृद्यं श्रीनन्दनोपमम्॥ (६८)

*68. இதன் அருகில் மிகவும் புண்யம் நிறைந்த க்ருஷ்ண க்ஷேத்ரமும் அதன் மத்தியில முனிவர்களால் ஸேவிக்கத்தக்க மனோஹரமான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவுக்கு இணையான*

तिल्लीवनमिति ख्यातं तन्मध्ये लोकविश्रुतम्।
चित्रकूटमिति ख्यात नगरं नाकसन्निभम्॥ (६९)

*69. தில்லீவனமென்கிற புகழ் பெற்ற ஸ்தலமுள்ளது. அதன் மத்தியில்' லோகப்ரஸித்தமான சித்ரகூடம் என்னும நகரம் ஸ்வர்க்கத்துக்கு ஸமானமாக உள்ளது,*

तन्मध्ये महती हृद्या प्राकारैर्गोपुरैर्युता।
कनकाख्यसभा काचिद्विश्रुताऽस्ति महाप्रभो॥ (७०)

*70. இதன்நடுவில் மிக மனோஹரமானதும், ப்ராகாரங்களும், கோபுரங்களும் கூடிய ஸ்வர்ணமயமான ஸபை (அரங்கம்) அதிக சோபையுடன் கூடியதாக இருக்கிறது.*

तन्मध्ये शेषशायी च मणिसिंहासनेऽद्भुते।
एकस्सभापतिस्तिष्ठन् नाट्यं पश्यति कौतुकात्॥ (७१)

71. இதன் மத்தியில் ஶேஷஶாயியான ஸ்ரீமந்நாரயணன் அத்யத்புதமான ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து, ஸபையின் தலைவராக, மிக்க ஆவலுடன் நாட்டியத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

एकस्तत्पादनिकटे सदा नटति हर्षतः।
एतदेव मया दृष्टमाश्चर्यं भुवि नाऽन्यथा॥ (७२)

72. ஸ்ரீமந்நாராயணின் பாதகமலங்களுக்கு அருகில் பரமேச்வரன் தான் ஒருவனாக ஸதா காலமும், மிக்க ஸந்தோஷத்தோடு ஆடிக் கொண்டே இருக்கிறார். பூவுலகில் இதுதான் அதிஶயமாக என்னால் பார்க்கப்பட்ட விஷயம். வேறு எதுவுமில்லை.

कदाचित्कुत्रचित्वेतत् श्रूयते न च दृश्यते।
तस्मात् किञ्चिदहं ब्रह्मन् पृच्छामि शृणु सादरम्॥ (७३)

73. எப்பொழுதாவது, சில இடங்களில் இந்த விஷயம் என்னால் கேட்கப்பட்டது. ஆனால் பார்க்கப்படவில்லை. ஆகையால், ப்ரஹ்ம தேவரே ! இந்த விஷயமாக நான் சில (ஸந்தேகஙகளைக்) கேட்கிறேன். கருணையுடன் செவி சாய்ப்பீராக.

किमर्थं वादकृद्देव्या पार्वत्या कालिरूपया।
विष्णुपादाब्जपार्श्वस्थस्सदा नटति शङ्करः॥ (७४)

74. காளி உருவத்துடன் தோற்றமளிக்கும் பார்வதி தேவியால் எதற்காக வாதம் செய்யப்பட்டது ? பகவான் ஶஙகரன் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாத கமலங்களுக்கு அருகில் எப்போரும் ஏன் நடனம் செய்கிறார் ?

किमर्थं शेषपर्यङ्के मणिसिंहासने स्थितः।
गोविन्दराज इत्येव देवाधीश इति पृथक्॥ (७५)

75. ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில் ஆதிஶேஷயனாகிற படுக்கையில் யோகாஶனத்தில் (ஸ்ரீஹரி) ஏன் அமர்ந்திருக்கிறார் ? கோவிந்தராஜன் என்ற பெயர் பெற்றவர் எதற்காக தேவாதீஶன என்ற மற்றொரு

नाम धृत्वा हरिर्दिव्यं देवैरीड्यः श्रिया भुवि।
तिष्ठन् सभापतिर्नित्यं शम्भुनाट्यं प्रपश्यति॥ (७६)

76. பெயரையும் தரித்து தேவர்களால் துதிக்கப் படுபவராக ஸபையின் தலைவராக இருந்து கொண்டு பரமேசுவரனின் ஆடலைத் தீவரமாக பார்த்துக் கொண்டிருக்கிறார்?

कावेरीति च नामासीत् केन श्वेतनदीति च।
श्रीमुष्णमिति कस्मात् कृष्णक्षेत्रमिति प्रभो॥ (७७)

77. வெள்ளி போன்ற தெளிந்த நீரை உடைய நதிக்குக் காவேரி என்று ஏன் பெயர் ஏற்பட்டது ? ப்ரபுவே ! ஸ்ரீமுஷ்ணம் என்றும், ஸ்ரீக்ருஷ்ணக்ஷேத்ரம் என்றும் பெயர்கள் ஏற்படக் காரணமென்ன ?

तिल्लीवनमिति श्रीमच्चित्रकूटमिति क्षितौ।
पुण्डरीकपुरं कस्मात् पुण्डरीकसरस्त्विति॥ (७८)

78. இந்த பூமியில் தில்லீவனமென்றும், ஸ்ரீமத் சித்ரகூடம் என்றும், புண்டரீக புரமென்றும், புண்டரீகஸரஸ் என்றும் எதனால் பெயர்கள் ஏற்பட்டன ?

कनकाख्या सभा कस्मात् कस्मान्नृत्तसभेति च।
देवानां राजराजानां आसन्दिव्यसभाः कृताः॥ (७९)

79. கனகஸபை என்னும் இந்த கூடம, தேவர்களுக்கும், ராஜாதி ராஜாக்களுக்கும் எவ்வாறு திவ்யஸபையாக ஆகியது ? நடன அரங்கம் என ஏன் பெயர் ஏற்பட்டது ?

पतञ्जलिश्च कण्वश्च व्याघ्रपादादयस्सदा।
किमर्थं मुनयः ब्रह्मन् तपः कुर्वन्ति दुष्करम्॥ (८०)

80. பதஞ்ஜலியும், கண்வரும், வ்யாக்ரபாதர் முதலான ரிஷிகளும் மிகவும் கடுமையான தவத்தை ஏன் செய்கிறார்கள் ?

तस्मिन् क्षेत्रवरे दिव्ये रङ्गनाथ इतीरितः।
वेङ्कटेश इति श्रीमान् सर्वाभीष्टप्रदो हरिः॥ (८१)

81. இந்த ச்ரேஷ்டமான திவ்யக்ஷேத்ரத்தை ஸர்வா பீஷ்டஙகளையும் தரக் கூடிய ஸ்ரீஹரி, ஸ்ரீரங்கநாதன் எனறும், திருவேஙகடவன் என்றும பெயர் கொண்டு

वेणुगोपाल इत्येव नृसिह इति विश्रुत.।
पट्टाभिराम इत्येवं कस्माद्वसति नामभृत्॥ (८२)

82. வேணுகோபாலன் என்றும், ந்ருஸிம்ஹன் என்றும், பட்டாபிராமன் என்றும் திருநாமங்களுடன் எழுந்தருளியிருப்பதற்குக் காரணம் என்ன ?

तस्मिन् क्षेत्रवरे ब्रह्मन् के वा मुक्ति गता जनाः।
के वा धर्मान् प्रकुर्वन्तः प्राप्नुयु स्व मनोरथम्॥ (८३)

83. ஹே ப்ரஷ்ம தேவரே ! இந்த திவ்யமான க்ஷேத்ரத்தில முக்தி அடைந்தவர்கள் யார் ? தர்மஙகளைச் செய்து தங்களது மனோரதஙகளை பெற்றவர்கள் யார் ?

के वाऽकुर्वन्नृपतयो गोपुरावरणादिकन्।
मण्डपाश्च हरेर्भक्त्या नित्योत्सवमहोत्सवान्॥ (८४)

84. ஸ்ரீஹரியினிடம் உள்ள பக்தியால், எந்த அரசர்கள், கோபுரங்களையும், பாதுகாப்பு அரண்களையும், மண்டபங்களையும், நித்யோத்ஸவஙகளையும், மஹோத்ஸவஙகளையும் ஏற்படுத்தி இருக்கிறார்கள் ?

तीर्थानि कति पुण्यानि कुत्रस्थानानि तेषु च।
कस्मिन् मासे दिने स्नातु पुण्यकलो विधीयतं॥ (८५)

85. புண்யம் நிறைந்த தீர்த்தங்கள் யாவை ? அவை எங்கே உள்ளன ? அவற்றில் ஸ்நானம் செய்வதற்கேற்ற புண்யகாலமான மாதங்களும், நாட்களும் என்னென்ன ?

कस्मिन्मासे दिने कस्मिन्नक्षत्रे शुभदे महान्।
श्रीमद्गोविन्दराजस्य सद्रथाऽवमृथोत्सवः॥ (८६)

*86. எந்த மாதத்தில், எந்த நாளில், எந்த நக்ஷத்திரத்தில் ஸ்ரீபகவான் கோவிந்தராஜனுக்கு ரதோத்ஸவமும், அவப்ருதோத்ஸவமும் நடைபெறுகின்றன ?*

तस्मिन्क्षेत्रेऽद्य भगवान् तपसा केन तुष्यति।
कुर्याद्यदि तपो घोरं किं फलं तस्य शंस मे॥ (८७)

*87. அந்த க்ஷேத்ரத்தில் இப்போது எவரின் தபஸ்ஸைக் கண்டு பகவான் ஸந்தோஷப்படுத்தப்படுகிறார் ? கடுமையாகத் தவம் செய்யப்படுமாகில் அதற்குப் பலன் என்ன ? என்பதை எனக்கு எடுத்து உரைப்பீராக !*

तस्मिन् कति क्षेत्रपालाः तीर्थपालाः कति प्रभो।
देवास्तेषा हि नामानि स्थानानि च वद क्रमात्॥ (८८)

*88. அங்கு க்ஷேத்ர ரக்ஷகர்களும், தீர்த்த ரக்ஷர்களுமான தேவதைகளையும், அவர்களது பெயர்களையும், இருப்பிடங்களையும் உரைப்பீராக !*

एतेषा कारणं ब्रह्मन् प्रभावं श्रोतुमिच्छतः।
कृपया वद सर्वज्ञ विस्तरेण ममानघ॥ (८९)

*89. ஹே ப்ரஹ்ம தேவரே ! இவற்றிற்கெல்லாம் காரணகர்த்தாகவாக இருப்பவர்களின் பெருமைகளைக் கேட்க விரும்புகிறேன். ஸர்வஜ்ஞரே ! குற்றங்களற்றவரே ! கருணையுடன் இவற்றையெல்லாம் எனக்கு உரைப்பீராக !*

इति वदति मुनौ प्रहृष्टचेताः सदसि सदा सनकादियोगिमध्ये।
विधिरतुललसत्सुचित्रकूटप्रकटचरित्रमुवाच तं मुनीन्द्रम्। (९०)

*90. இவ்வாறாக ப்ரம்மா - நாரத ஸமவாதமாக - ஸூத முனிவர் மற்ற ரிஷிகளைப் பார்த்து, ஈடு இணையற்ற திருச்சித்ரகூட மாஹாத்ம்யத்தை எடுத்துச் சொல்லத் தொடங்கினார்.*

ப்ரம்மாண்ட புராணம் முதல் அத்யாயம் முற்றிற்று.

# ப்ரம்மாண்ட புராணம்
## இரண்டாம் அத்தியாயம்

सूतः उवाच - *ஸூதபௌராணிகர் கூறினார்*

नारदः=ब्रह्मन्नुत्तरदेशस्थः कवेरः कान्तया सह।
कथं तिल्लीवनं प्राप्य मोक्षं प्रापेति मा वद॥ (१)

*1. நாரதர் - ப்ரஹ்மதேவரே ! வடநாட்டிலிருக்கிற கவேர மன்னன் பத்னியுடன் கூட தில்லீவனம் (திருச்சித்ரகூடம்) அடைந்து எவ்வாறு மோக்ஷத்தை அடைந்தான் என்பதைக் கூறுவீராக.*

ब्रह्मा- यदा स्वपुत्री कावेरीत्यगस्त्येन गता सती।
तद्वियोगजदुःखानि त्वसहन्नात्मजं मुने॥ (२)

*2. ப்ரஹ்மா - முனிவரே ! தன்னுடைய புத்ரியான காவேரீ அகஸ்திய முனிவருடன் திருமணமாகிச் சென்றவுடன் அவளது பிரிவால் ஏற்பட்ட துக்கங்களைத் தாங்க முடியாமல், கவேர மன்னன் தன்னுடைய புத்ரனை,*

स्वराज्येषु परिस्थाप्य सवनमामन्त्र्य पौरजान्।
कावेरी तनूजा स्मृत्वा विरक्तो भार्यया सह॥ (३)

*3. தன்னுடைய ராஜ்யத்தில் தனக்கு வாரிசாக நகர மக்களுடன் கலந்து, ஆலோசித்து, மகனை நியமித்து, தன்னுடைய புத்ரியான காவேரியை த்யானித்து, லோகப்பற்று அற்றவனாகி, பத்நியுடன் கூட*

विनिर्गत्य बहिः पुर्या (:)द्वादशाब्दं सुदुःखदम्।
भूमि प्रदक्षिणं कृत्वा अगमत् दक्षिणां दिशम्॥ (४)

*4. மிகுந்த வருத்தத்துடன் நகரத்திலிருந்து வெளியேறி பன்னிரண்டு வருஷங்கள் பூமியை ப்ரதக்ஷிணம் செய்து தெற்கு திசையை நோக்கிச் சென்றான்.*

तत्र ब्राह्मणभूयिष्ठान् स कुटुम्बान् स बान्धवान्।
नानादेशागतान् विप्रान् ज्वलतो विविधाः कथा.॥ (५)

5. அங்கு அந்தணர்கள் நிறைந்த குடும்பத்துடனும், பந்துக்களுடனும், பல தேசங்களிலிருந்து வந்திருக்கிறவர்களின் பலவகையான வரலாறுகளைக் கேட்டும்,

नानासहारसयुक्तान् स शेष संघशो भृशम्।
समन्तात् सप्रयातारस्तान् नानाजातिजनान् बहून्॥ (६)

6. மிகத் தீவிரமாகவும் கூட்டங்களாகவும், சேர்ந்தும் ஸஞ்சரிக்கிறவர்களும், மிக அருகில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிற பலவகையான ஜாதியினரையும்,

समालोक्य क्वेरस्तु साश्चर्यहृदयो मुदा।
आगत्य त्वरया कश्चित् साञ्जलिर्ब्राह्मणोत्तमम्॥ (७)

7. கவேரமன்னன் ஆச்சர்யத்துடனும் ஸந்தோஷத்துடனும் பார்த்து விரைந்து அவர்களிடம் வந்து அவர்களில் ஒரு ப்ராமணோத்தமரை நோக்கி அஞ்ஜலி ஹஸ்தனாக

कवेर.- भो भो द्विजेन्द्र तिष्ठाऽद्य स कुटुम्बा. सबान्धवा।
क्व प्रयाता भवन्तो हीत्यपृच्छत्त द्विजोऽब्रवीत्॥ (८

8. ஹே ப்ராமண ச்ரேஷ்டரே ! நீற்பீராக. குடும்பத்துடனும், பந்துக்களுடனும் தாங்கள் எங்கு செல்கிறீர்? என்று கேட்ட அரசனைப் பார்த்து அந்தணன் சொன்னான்.

भो भो पान्थ न जानासि क्व चित्त्वं कुत्र चाऽगत.।
क्व जातिर्वद भो ब्रह्मन् क्षत्रियश्चोत्तरागतः॥ (९)

9. ஹே வழிப்போக்கரே ! நீர் எங்கிருந்து வருகிறீர் என்பது எனக்குத் தெரியாது. நீர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்பதைச் சொல்லும் என்று கேட்க, அரசன் - ஹே ப்ராமணச்ரேஷ்டரே ! நான் க்ஷத்ரியன் வடதிசையிலிருந்து வருகிறேன் என்று கூறினான்.

ब्राह्मण.- शृणु राजन्नदीना या श्रेष्ठा गङ्गा हि साऽधुना।
द्वादशाब्दस्येक्वार माघमासे मघर्क्षके॥ (१०)

10. அந்தணர் :- அரசரே ! கேளும் நதிகளில் சிறந்த கங்கை இப்போது பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை மாசி மாதத்தில் மக நக்ஷத்திரத்தில்,

श्रीरङ्गे कुम्भकोणे च कावेर्यां स्नातुमागता।
तस्मात् पुण्यकालो श्व(:) इति मत्वा जना भृशम्॥ (११)

11. ஸ்ரீரங்கத்திலும், கும்பகோணத்திலும் காவேரியில் ஸ்நானம் செய்ய வந்திருக்கிறாள். அதனால் நாளைய தினம் புண்யகாலம் என்றெண்ணி ஜனங்கள்,

स्नातु उभयकावेर्योः स कुटुम्बास्सहबान्धवाः।
आगतास्यभितस्त्वं हि पत्न्या सहेति सोऽब्रवीत्॥ (१२)

12. (வட திருக்காவேரி, தென் திருக்காவேரி) இரண்டு காவேரியிலும ஸ்நானம் செய்வதற்காக வருகின்றனர். நீயும் பக்தியுடன் வருவாயாக என்று சொன்னார்.

कवेरः - कस्मात् द्विविधा ब्रह्मन् कवेर्यासीत् शुभा कदा।
ब्रूहि मे सर्वविद्ब्रह्मन् इत्यपृच्छत् स विस्तरम्॥ (१३)

13. கவேரன் :- ப்ராஹ்மண ச்ரேஷ்டரே ! மங்களகரமான காவேரீ எப்போது இரண்டாகப் பிரிந்தாள் ? எல்லாவற்றையும் விஸ்தாரமாக எனக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்டான்

ब्राह्मणः- शृणुष्व राजन् कवेरी गंगाधिक्यं स्वय भृशम्।
प्राप्तुं श्रीरङ्गराजन्तमतपत्तप उत्तमम्॥ (१४)

14. ப்ராஹ்மணன் :- அரசரே ! கேளும், காவேரி கங்கையைக் காட்டிலும் அதிகமான மஹத்வத்தைத் தான்அடைவதற்கு மிக உயர்ந்ததான தபஸை ஸ்ரீரங்கநாதனைக் குறித்து செய்தாள்.

ततः श्रीरङ्गराट् साक्षादागत्य स कवेरजाम्।
हे भद्रे शृणु जानामि सर्वं तेऽद्य मनोरथम्॥ (१५)

15. அதன்பிறகு ஸ்ரீரஙகராஜன் கவேரன் புத்ரியான காவேரியின் முன்தோன்றி, மங்களமானவளே ! கேட்பாயாக. உன்னுடைய மனோரதங்கள் அனைத்தையும் நான் அறிவேன்.

गङ्गा तु मत्पदस्याग्रतस्संभवादभूद्वरा।
त्वं हि मत्पादयुग्माग्रमाश्रयोभयपार्श्वतः॥ (१६)

16. கஙகாதேவி என்னுடைய ஒரு பாதத்தின் முனையில் உண்டானதால் ச்ரேஷ்டமான தன்மையை அடைந்தாள். நீ என்னுடைய இரண்டு பாதங்களையும் ஆச்ரயித்து எனது இரண்டு பக்கத்திலும்,

प्रवहस्वेह हे भद्रे गङ्गाधिक्यमवाप्स्यसि।
इति श्रीशो वरं तस्यै दानात् सा द्विविधा नृप॥ (१७)

17. ப்ரவாஹிப்பாயாக. ஸுபமானவளே ! நீ கஙகையை விட உயர்ந்த தன்மையை அடையப் போகிறாய். இவ்வாறு ஸ்ரீமந்நாராயணன் அவளுக்கு வரமளித்ததால், அரசனே ! அவள் இரண்டு நதியாக ஆனாள்.

दक्षिणोत्तरकवेरीत्विति कीर्तिमती सती।
गंगाधिक्या प्रवहतीत्याह पार्श्वद्वये वचः॥ (१८)

18. தென் திருக்காவேரி, வட திருக்காவேரி என்று புகழ் பெற்றவளாக, கங்கையை விட அதிக ப்ரவாஹம் உடையவளாக இரண்டாகப் பிரிந்தாள்.

इत्युक्त वचनं श्रुत्वा ब्राह्मणेऽजमहाद्भुतम्।
अहोभाग्यमहोभाग्यं गङ्गाधिक्या ममात्मजा॥ (१६)

19. ப்ராஹ்மணனிடமிருந்து உண்டான அத்யத்புதமான இப்படிப்பட்ட வார்த்தையைக் கேட்டு, (அரசன்) அஹோ ! பாக்யம், அஹோ ! பாக்யம் என்னுடைய புத்திரி கங்கையை விட உயர்ந்தவள் ஆனாள்,

आसीत्खल्विति हर्षेण श्लाघयन् भार्यया द्रुतम्।
श्रीरङ्गकुम्भकोणादिक्षेत्रेष्वम्बुधिसङ्गमे॥ (२०)

20. என்று மிகுந்த ஸந்தோஷத்தோடு ச்லாகித்துக் கொண்டு, சீக்ரமாக மனைவியுடனும், ஸ்ரீரங்கம், கும்பகோணம், ஸமுத்ர ஸங்கமம் முதலான இடங்களில்

महामखस्यतीव समारम्य त्र्यह मादरात्। ?
स तु दक्षिण कवेर्यां स्नात्वा तां प्रार्थयत्तदा॥ (२१)

21. மஹாமகத்தில் மிகவும் ஆதுரத்துடன் சென்றடைந்து, அந்தக கவேரன் தென்திருக்காவேரியில் ஸ்நானம் செய்து, காவேரியை ப்ரார்த்தனை செய்தான்.

स्वप्ने सोत्तरकावेरी गच्छ तातेत्युवाच तम्।
कवेरस्तु पुनर्गत्वा नत्वा श्रीरङ्गनायकम्॥ (२२)

22. அவனது கனவில் "தந்தையே ! வடதிருக்காவேரியில் சென்று ஸ்நானம் செய்வீராக" என்பதாகக் காவேரி சொன்னாள். கவேரன் மறுபடி அங்கு சென்று ஸ்ரீரங்கநாதரை வணங்கி,

स्नात्वा सोत्तरकावेरी पुत्रीमप्रार्थयन्मुने।
तदा सोत्तरकावेरी हर्षेणागत्य कन्यका॥ (२३)

23. வடதிருக்காவேரியில் ஸ்நானம் செய்து தன் புத்ரியிடம் ப்ரார்த்தனை செய்தான். அப்போது வடதிருக்காவேரி ஒரு பெண்ணுருவமாக அங்கு வந்து மகிழ்ச்சி அடைந்தவளாக

प्रणम्य पितरौ भक्त्या बध्दाञ्जलिरभाषत।
हे अंस तात क्षेमं वा स्वागतं वास्ति वो दृढम्॥ (२४)

24. தாய் தந்தையரை வணங்கி பக்தியுடன் அஞ்ஜலி ஹஸ்தங்களுடன் சொன்னாள். தந்தையே ஸௌக்யமா உங்களிருவருடைய வரவும் நல்வரவாகட்டும்.

सर्वं जानामि मत्सिन्धुसङ्गमोत्तरदिग्तटे।
नानालताभिराश्लिष्टै: कान्ताभि: कमुकैरिव॥ (२५)

25. நான் எல்லாவற்றையும் அறிவேன். என்னோடு ஸங்கமமாகிற வடதிசையின் கரையில் காதலர்களோடு கூடிய காதலிகளைப் போல, பலவகையான கொடிகளால் தழுவப்பட்ட,

नानावृक्षैस्सदा स्पर्धिमेघसङ्घैर्विराजितम्।

नानापक्षिमृगीशावमुखरोकृतादेङ्मुखम् ॥ (२६)

26. பலவகையான வ்ருக்ஷங்களோடு ஃபோட்டியாடுகிற மேக கூட்டங்களாலே ப்ராகாஶிக்கின்றனவும், பலவகையான பக்ஷிகளுடையவும், ம்ருகங்களுடையவும் குஞ்சு, குட்டிகளின் ஶப்தங்களாலே எதிரொலிக்கிற திசைகளை உடையதாயும்,

नानासरस्तटाकैश्च नानापुष्पोपशोभितम् ।
नानाकन्दफलैयुक्तं नाना. चाश्रमसंयुता ॥ (२७)

27. பலவகையான நதிகளாலும், குளங்களாலும், பலவகையான புஷ்பங்களாலும் ஶோபையை உடையதாயும், பலவகையான கிழங்குகளையும், பழங்களையும் உடைய ஆச்ரமங்களை உடையதும்,

नानायज्ञसमाकीर्णं मुनीनां भावितात्मनाम् ।
नानाशास्त्रत्रयीघोषभूषितब्रह्मलोककम् ॥ (२८)

28. அநேக யாகயஜ்ஞாதிகளைச்செய்கிற முனிவர்களுக்கு இருப்பிடமானதும், பலவகையான ஶாஸ்த்ரங்கள், வேதகோஷங்கள் முதலியவற்றால் ஒளிவிடுகிற ப்ரஹ்ம லோகத்தைப் போன்றதும்,

तिल्लीवनमिति ख्यातं साक्षात् श्रीनन्दनोपमम् ।
अस्त्येकं वनमच्छिद्रं दृष्टमात्रात् सुमुक्तिदम् ॥ (२९)

29. தில்லீவனமென்று புகழ் பெற்றதும், ஸாக்ஷாத்தாக ஸ்ரீநந்தகுமாரனான கண்ணன் வஸிக்கிற நந்தகோகுலத்துக்கு ஸமமானதும், குற்றங்களற்றதும், பார்த்த மாத்திரத்திலேயே முக்தியைத் தரக் கூடியதுமான திருச்சித்ரகூடமடைந்து,

तत्र स्थित्वा मयि स्नात्वा ध्यात्वा श्रीशं जनार्दनम् ।
अष्टाक्षरं जपन्नेव भार्यया सह निर्भरः ॥ (३०)

30. அவ்விடம் வஸித்துக் கொண்டும், என்னிடத்தில் ஸ்நானம் செய்து கொண்டும் ஜனார்த்தனான ஸ்ரீமந்நாராயணனை த்யானித்தும், உலகப் பற்று அற்றவனாக மனைவியுடன் கூட அஷ்டாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டு இருப்பீர்களேயாகில்

तत्रागत्य हरिर्मोक्षं युवयोर्दास्यति ध्रुवम् ।
इति मोक्षपथं प्रोक्त्वा कवेर्यन्तर्दधे मुने ॥ (३१)

31. ஸ்ரீமந்நாராயணன் அங்கு உங்களிருவருக்கும் மோக்ஷத்தை அளிக்கப் போகிறார். இது நிச்சயம் என்பதாக காவேரி மோக்ஷ மார்க்கத்தைக் கவேரனுக்குச் சொல்லிவிட்டு மறைந்து விட்டாள்.

तथैवाऽथ दिनं कुर्वन् स तस्मिन् निर्भरस्थितः।
गतेऽथ कतिचित्काले तन्मोक्षं दातुमादरात्॥ (३२)

32. பிறகு அந்தக்கவேர மன்னன் திருச்சித்ரகூடத்தில் வஸித்தும், பற்றற்றவனாகவுமிருந்து கொண்டு, ப்ரதிதினம் அநுஷ்டானங்களைச் செய்து கொண்டும், இருந்து வந்தான். சில காலம் சென்றவுடன் அவருக்குக் கருணையுடன் மோக்ஷமளிப்பதற்காக

वेदात्मानं महावीर्यं विबुधावलिसंस्तुतम्।
कञ्चनादिसमं मूर्त्या कञ्च्या कान्तिपराक्रमम्॥ (३३)

33. வேதஸ்வரூபனாயும், அதிக வீர்யமுள்ளவனும், தேவர் உருவமுடையவரும், பராக்ரமமுடையவரும்,

पक्षपातसमुद्भूतविपक्षव्यूहसध्दृतिम्।
मनःपवनवेगघ्नं महावेगं महाबलम्॥ (३४)

34. இரு பக்கங்களிலும் இறக்கையுடையவரும், எதிரிகளின் வ்யூஹத்தை அழிப்பவரும், காற்று, மனஸைக் காட்டிலும் அதிக வேமுள்ளவரும், அதிக பலம் வாய்ந்தவரும்,

स्फुरत्किरीटकयूरहारोज्ज्वलितवक्षसा।
नागमालोज्वलद्ग्रीवं नानानागविभूषणम्॥ (३५)

35. ஒளிவீசுகின்ற க்ரீடம், கங்கணம், ஹாரம் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட மார்பை உடையவரும், ஸர்ப்ப மாலைகளால் ப்ரகாஸிக்கிற கழுத்தை உடையவரும், பலவகையான ஸர்ப்பங்களை ஆபரணங்களாக அணிந்தவரும்,

पीताम्बरधरं राजत् कटिसूत्राङ्घ्रिकङ्कणम्।
हरिपादद्वयोद्वाहि सकङ्कणकरद्वयम्॥ (३६)

36. கங்கணம் அணிந்த இரு கைகளாலும், பீதாம்பரமணிந்தும், இடுப்பில் அரைஞாண், கையில் கங்கணம் ஆகியவற்றை அணிந்தும், ஸ்ரீமந்நாராயணனின் இரண்டு பாதங்களைத் தாங்கியிருப்பவரும்,

त्रिनेत्रं त्रिदशश्रेष्ठं त्रिविक्रममिवापरम् ।
त्रिनेत्रांशकमार्योऽढ्यं त्रिपदात्मकमच्युतम् ।। (३७) ?

37. மூன்று கண்களை உடையவரும், தேவர்களில் சிறந்தவரும், த்ரிவிக்ரமாவதாரம் செய்த மஹாவிஷ்ணுவைப் போன்றவரும், முக்கண்ணனாகிய பரமேச்வரனைப் போன்றவரும், மூன்றடி மண்ணளந்த த்ரிவிக்ரம ரூபியான அச்யுதனைத் தாங்கியவரும்,

तृणीकृताहिवेतालपिशाचादिमहाभयम् ।
त्रिषु लोकेषु विख्यातं क्षेमाय प्रार्थितं मुने ।। (३८)

38. அரவு, வேதாள, பிசாசங்களால் ஏற்படக் கூடிய பயத்தைப் போக்குகிறவரும், மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தரான கருட பகவானை க்ஷேமம் ஏற்பட ப்ரார்த்தித்தார்.

अथारुह्य गरुत्मन्तं मेरुशृङ्गमिवाम्बुदः ।
अप्रमेयप्रथाव्यूहशोभिताखिलदिङ्मुखः ।। (३९)

39. உடனே, மேருமலையின் ஶிகரம் போல் ப்ரகாஶிக்கிற கருடன் மீது ஏறியவராக, அளவற்ற ஶோபையால் எல்லாத் திஶைகளையும் ப்ரகாஶிக்கச் செய்பவராயும்,

नित्यैर्मुक्तैश्च मुनिभिर्देवैस्संपूजितस्तथा ।
श्रिया सार्धं हरिः श्रीमान् आविरासीच्च तत्पुरः ।। (४०)

40. நித்ய முக்தர்களான முனிவர்களாலும், தேவர்களாலும், பூஜிக்கப்படுகிற ஸ்ரீமந்நாராயணன் மஹாலக்ஷ்மியுடன் கூட அந்த அரசனின் எதிரில் தோன்றினார்.

तदा स्नात्वा क्वेररसन्तूर्ध्वपुण्ड्राणि धारयन् ।
सङ्कल्पाय च गोविन्देत्युक्त्वैवालोक्य सर्वतः ।। (४१)

41. அப்போது கவேரன் ஸ்நானாதிகளை முடித்துக் கொண்டு, பன்னிரு திருநாமங்களைத் தரித்து, ஸங்கல்பத்துக்காக 'ஸ்ரீகோவிந்த, ஸ்ரீகோவிந்த ! கோவிந்த ' என்று சொல்லி நான்கு பக்கங்களிலும் பார்த்து,

कृष्णभूतेयमवनि. समासीच्च क्विमत्यलम् ।
साश्चर्यमसकृत्पश्यन् तदोत्थाय पुरतःस्थितम् ॥ (४२)

42. இந்த உலகம் முழுவதும் க்ருஷ்ணமயம் (ஸ்ரீக்ருஷ்ண, ஸ்ரீக்ருஷ்ண, ஸ்ரீக்ருஷ்ண) என்று தொடர்ந்து சொல்லி, எழுந்து தற்செயலாக ஆச்சர்யமாகப் பார்த்தபோது, தனக்கு முன்னால் நின்று கொண்டிருந்த

नीलकोमलमेघाभां नीरजायतलोचनमा् ।
नीलकुन्तलसम्राजत्किरीटोज्ज्वलमस्तकम् ॥ (४३)

43. அழகிய கருநீலமான மேகத்தின் ஶோபையைப் போன்றவரும் தாமரை மலர் போன்ற கண்களை உடையவரும், கருமை நிறமான கேஶங்களால் ப்ரகாஶிப்பவரும், ஒளி வீசுகிற கிரீடத்தால் அலங்கரிக்கப்பட்ட ஶிரஸை உடையவரும்,

कस्तूरीतिलके भ्राजत् पूर्णचन्द्रमुखद्युतिम् ।
मन्दहासस्फुरत्तुङ्गगण्डमण्डलशोभितम् ॥ (४४)

44. கஸ்தூரி திலகமிட்டு ப்ரகாஶிக்கிற பூர்ண சந்த்ரனைப் போன்ற முககாந்தியை உடையவரும், புன் சிரிப்புடன் ப்ரகாஶமான கன்ன ப்ரதேஶங்களை உடையவரும்,

सानु संसुभ्रुवं लोलत् करुणापूर्णवीक्षणम् । ?
कुन्ददन्तावळिस्निग्धं बिबाधरपुटोज्वलम् ॥ (४५)

45. அழகிய வளைந்த புருவங்களால் ப்ரகாஶிக்கிற கருணை நிரம்பிய கண்களை உடையவரும், மல்லிகை மொக்குகளைப் போன்ற பற்களின் வரிசையுடனும், கோவைப்பழம் போன்ற ப்ரகாஶமான உதடுகளுடனும் மிளிர்பவரும்,

सद्रक्तकुण्डलोद्भ्राजत् विस्तारश्रवणद्वयम् ।
सिंहस्कन्धं कम्बुकण्ठं केयूरकटकोज्वलम् ॥ (४६)

46. நல்ல சிவப்பான குண்டலங்களுடன் ப்ரகாஸிக்கிற அகன்ற காதுகளை உடையவரும், ஸிம்ஹத்தைப் போன்ற தோள்களை உடையவரும், பல நிறமுள்ள ஆபரணங்களால் ப்ரகாஸிக்கிற கழுத்து ப்ரதேஸத்தை உடையவரும், கேயூரம், கடகம் என்கிற ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களை உடையவரும்,

चतुरं जानु संराजत् ज्रुरूद्वासितं शुभैः ।?
भुक्ताचन्द्रादिहारश्रीवत्सोज्ज्वलवक्षसम् ।। (४७

47. அழகிய முழங்கால்களையும் ஸுபகரமாக ப்ரகாஸிக்கிற துடைகளை உடையவரும், முத்துக்கள் நிறைந்த சந்த்ரஹாரத்தோடு கூடின இடுப்பை உடையவரும், ம்ருதுவான பீதாம்பரம் அணிந்த அழகிய கால்களை உடைவரும்,

ज्वलत्कुक्षिं पद्मनाभिं रशनाराजितोत्कटिम् ।
पीतांबरधरं मुग्धरम्भोरुद्वयमञ्जुलम् ।। (४८)

48. ப்ரகாசமான வயிற்று ப்ரதேஸத்தையும், தாமரை மலர் போன்ற நாபியையும், இடைக்கச்சத்துடன் கூடின இடுப்பை உடையவரும், ம்ருதுவான பீதாம்பரம் அணிந்த அழகிய கால்களை உடையவரும்,

कहळिर्मुखसुस्निग्धजानुतूणीरजङ्घकम् ।
सद्रत्नकटकैर्हृद्यैः जृम्भिताब्जपदद्वयम् ।। (४९)

49. பரமேச்வரனின் முக காந்தியைப் போன்ற அம்பறாத் தூளியுடன் கூடிய வில்லேந்தியவரும், ரத்ன கடகங்களால் அலங்கரிக்கப்பட்ட மலர்ந்த செந்தாமரை போன்ற மனோஹரமான பாதங்களை உடையவரும்,

अङ्गुलीयकरत्नाभरणकोमलाङ्गुलिपल्लवम् ।
आकण्ठपादपर्यन्तं शोभितद्वन्द्वमालया ।। (५०)

50. ரத்னக்கற்களாலான மோதிரமணிந்த ம்ருதுவான தளிர் போன்ற விரல்களை உடையவரும், கழுத்து முதல் பாதம் வரை ஸோபிக்கிற இரட்டை மாலைகளால் ப்ரகாஸிப்பவரும்,

वैजयन्त्या च संराजत्सुन्दरोज्वलविग्रहम् ।
कोटिकन्दर्पलावण्यं कोटिसूर्यसमप्रभम् ।। (५१)

51. வைஜயந்தி மாலை அணிந்து அழகாக ப்ரகாஶிக்கிற உருவமுடையவரும், கோடி மன்மதர்கள் சேர்ந்தாற்போன்ற அழகுடையவரும், கோடி ஸூர்யர்களுக்கு ஸமமான காந்தியுடையவரும்,

कोटिस्फुरत्तटिद्भासु श्रिया युक्तमिवाम्बुदम्।
नित्यमुक्तमुनिप्रातैरनेकैस्संयुत विभुम्॥ (५२)

52. ஒளி வீசுகிற கோடி மின்னல்களுக்கு ஸமமான ப்ரகாஶமுடையவரும், மஹாலக்ஷ்மியுடன் கூடியவரும் மேகம் போல் இருப்பவரும், நித்யமுக்தர்களான அநேக முனிவர்கள் சூழ ப்ரகாஶிப்பவரும்,

गरुडोपरि राजन्त श्रीपति पुरुषोत्तमम्।
कुबेरस्तत्र सवीक्ष्य विस्मयाविष्टचेतनः॥ (५३)

53. கருடன் மேல் ஏறி ப்ரகாஶிப்பவரும், புருஷ ச்ரேஷ்டனுமான ஸ்ரீமந்நாராயணனை, குபேரன், அங்கு பார்த்து ஆச்சர்யமடைந்தவனாக,

पुनः पुनः प्रणम्योच्चैः तुष्टावाश्रितवत्सलम्।
कुबेरः- नमोऽखिलेशाय समस्तरूपिणे
समस्तवाच्याय समस्तसाक्षिणे।

மறுபடி மறுபடி வணங்கி ஆச்ரிதவத்ஸலனான ஸ்ரீஹரியை வாயாரப் புகழ்ந்தான்.

समस्तविद्यानिलयाय विष्णवे
समस्तहृन्मध्यनिवासिने नमः॥ (५४)

54. குபேரன் - எல்லா இடத்திலும் நிறைந்து இருப்பவனும், எல்லா உருவங்களையுடையவனும், எல்லோராலும், போற்றத்தக்கவனும், எப்பொருளுக்கும், ஸாக்ஷியாக இருப்பவனும், வித்யைகள் அனைத்துக்கும் இருப்பிடமானவனும், எல்லா உயிர்களிலும் இதயத்தில் வஸிப்பவனுமான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை ஸேவிக்கிறேன்.

अणोरणीयान्. महतो महीयान्
सर्वेषु पूर्णास्तिलतैलवद्धि:। ?
अन्तर्बहिर्व्याप्य च सर्वनामा
त्वमेव तिष्ठस्यखिलात्मरक्षः॥ (५५)

55. அணுவுக்குள் அணுவாக இருப்பவனும், பெரியதைக் காட்டிலும் பெரியதாக இருப்பவனும், எல்லாப் பொருட்களிலும் எள்ளில் எண்ணெயைப் போன்றிருப்பவனும், உள்ளும், புறமும் வ்யாபித்து இருக்கிற நீயே அனைத்து உயிரினங்களுக்கும் ரக்ஷகனாக இருக்கிறாய்.

त्वं ब्रह्म शङ्करश्चेन्द्रश्चन्द्रार्काग्निमरुद्गणः।
तारा चातपमुखा देवाः सर्वं त्वं जगदात्मकः॥ (५६)

56. ப்ரஹ்மா, சங்கரன், இந்த்ரன், சந்த்ரன், ஸூர்யன், அக்னி, மருத்கணங்கள், நக்ஷத்ரங்கள், ஒளிமிகுந்த தேவர்கள் எல்லாமும் ஜகத்ரக்ஷகனான நீயாகவே இருக்கிறாய்.

त्वां विना तृणमप्यद्य न चलत्यखिलाण्डभृत्।
तस्मात्त्वां सज्जनाः प्राप्य मुक्ता मुक्ता भवन्त्यघात्॥ (५७)

57. நீ இல்லாமல் இந்த உலகில் ஒரு துரும்பு கூட அசையாது. ஆதலால் நல்ல ஜனங்கள் எல்லோரும் உன்னை ஶரணடைந்து பாபத்திலிருந்து விடுபட்டு முக்தியடைகின்றனர்.

कामाख्यसुपङ्काड्ये क्रोधकण्टकसंवृते।
लोभदुष्फलसंवीते मोहान्धतमसावृते॥ (५८)

58. காமமாகிற சேறு நிறைந்த குளத்தில், க்ரோதம் என்கிற முட்கள் நிறைந்ததும், லோபம் என்னும் கெடுதி விளைவிக்கும் பழங்கள் நிறைந்த, மோஹம் என்னும் கும்மிருட்டு நிறைந்த

मदपादपसङ्घाते मात्सर्यपथदन्तुरे।
अहङ्कारादिसञ्चारे दुःखव्याधिमृगाकुले॥ (५९)

59. மதம் (திமிர்) என்னும் வ்ருக்ஷங்கள் நிறைந்ததும், மாத்ஸர்யம் என்னும் கூர்மையான விஷக்கற்கள் நிறைந்த மார்க்கங்களை உடையதும், அஹங்காரம், துக்கம், வ்யாதி முதலான மிருகங்கள் ஸஞ்சரிக்கிறதும்,

द्वेषगुल्मलताक्रान्ते तृषापुष्पादिशोभिते।
भार्यापुत्रधनक्षेत्रमृगतृष्णोदकावृते॥ (६०)

60. த்வேஷம் என்னும் கொடிய புதர்கள் நிரம்பியதும, தாஹம் (பசி) முதலான பூக்கள் நிரம்பியதும், பத்நீ, புத்ரன், பணம், நிலம் ஆகிய கானல் நீர்நிலைகளால் சூழப்பட்டிருக்கிற

संसारघोरकान्तारे निस्सारे नित्यभीकरे।
अगतिं सततं भ्रान्तं त्राहि मां दयया हरे॥ (६१)

61. ஸம்ஸாரமென்னும் கோரமான, ஸாரமற்ற, எப்போதும் பீதியை உண்டாக்குகிற வனத்தில் ஸஞ்சரிக்கிற என்னை ஹே ஹரியே ! ரக்ஷிப்பாயாக.

इति स्तुवन्त राजर्षि भार्यया शरणागता।
त कृत्वाऽथ दयापात्रं हर्षात्प्रोवाच माधव.॥ (६२)

62. இவ்வாறு ஸ்தோத்ரம் செய்கிறவனும், பத்நீயுடன் ஶரணாகதி செய்தவனுமமான ராஜர்ஷியான தயைக்குரிய கபேரனை, மாதவனான ஸ்ரீமந்நாராயணன் கருணையுடன் நோக்கி ஸந்தோஷத்துடன் சொல்லத் தொடங்கினார்.

भगवान्- भो(:) भो(:) कबेर तुष्टोऽस्मि भक्त्या स्तोत्रेण चाद्य ते।
यद्याच्छित्तेऽस्ति ते भद्रे दास्यानीत्याह केशव॥ (६३)

63. 'பகவான் :- கபேரனே ! உன்னுடைய பக்தியாலும், ஸ்தோத்திரத்தினாலும் ஸந்தோஷமடைந்திருக்கிறேன். உன்னுடைய மனதில் என்ன நினைக்கிறாயோ அதைக் கேள், தருகிறேன்' என்று கேஶவன் சொன்னார்.

कबेरः- प्रसन्नो यदि विश्वात्मन् भवान् मयि विनोऽधुना।
भार्यया सह मे देव देहि तत्परम पदम्॥ (६४)

64. 'விச்வநாதரே ! ப்ரபுவே ! தேவரீர் மிகவும ஸந்தோஷமடைந்திருப்பீரேயானால்' மனைவியோடு கூட எனக்கு மிக உயர்ந்ததான வைகுந்த பதவியை அளிப்பீராக.

क्षीराब्धौ तव यद्रूपं त दर्शय ममाऽधुना।
इति भूपोऽपतत्याशु भगवान् भक्तवत्सलात्॥ (६५)

65. திருப்பாற்கடலில் தேவரீர் எப்படி ஸேவை ஸாதிக்கிறீரோ, அந்த திவ்ய தர்ஶனத்தை இப்போது எனக்கு காண்பிப்பீராக என்று அந்த மன்னன் அவரது பாதங்களில் பணிந்தான். பகவான் ஸ்ரீமந் நாராயணன் பக்தவத்ஸலன் ஆனதாலே,

शेषशायी श्रिया भूम्या नीळया च परिवृत.।
दर्शयामास तस्याग्रे स्वस्वरूपं सुरार्चितम्॥ (६६)

66. ஸ்ரீ தேவி, பூதேவி, நீளாதேவி முதலானோர் சூழ்ந்திருக்க ஶேஷஶாயியாக அந்த மன்னனின் எதிரில் தேவர்களால் அர்ச்சிக்கப்படுபவனாகக் காக்ஷியளித்தான்.

तदा कुबेरस्त वीक्ष्य नत्वा स्तुत्वा हरेऽधुना।
मम सङ्कल्पवेलायामाविर्भवनतो भवान्॥ (६७)

67. அப்போது குபேரன் அவரைப் பார்த்து வணங்கி, ஸ்தோத்ரம் செய்து, ஸ்ரீஹரியே ! நான் ஸங்கல்பம் செய்தபோது தேவரீர் என் முன்னே தோன்றினீர்கள்.

गोविन्द इति नामाद्य धारयाश्रितवत्सल।
सर्वैरे बभवान् लक्ष्म्या सर्वाभीष्टप्रदो नृणाम्॥ (६८)

68. ஆச்ரிதவத்ஸல ! இப்போது தேவரீர் கோவிந்த என்னும் நாமத்தை ஏற்றுக் கொள்ளும், இவ்வாறு எல்லோராலும் அழைக்கப்பட்டு, தேவரீர் மானிடர்களுக்கு எப்போதும் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் கூட ஸர்வாபீஷ்டத்தையும் எல்லா விருப்பங்களையும் அளிப்பீராக.

कुरुष्व वासमत्रैव देह्यद्य तान् वरान् मम।
इति प्रार्थयति स्मासौ अब्जाक्षः प्राह सादरम्॥ (६९)

69. இங்கேயே தேவரீர் வாஸம் செய்ய வேண்டும். இந்த வரங்களை எனக்கு அளிப்பீராக என்பதாக ப்ரார்த்தனை செய்தான். தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீஹரியும் ஆதரவோடு பதில் கூறினான்.

ப்ரம்மாண்ட புராணம் இரண்டாம் அத்யாயம் நிறைவுற்றது.

# ஸ்ரீ ப்ரம்மாண்ட புராணம்
## மூன்றாம் அத்யாயம்

तदा झिल्लीति तिल्लीति दण्डकस्य सुते ह्युभे।
तयोस्तु झिल्लिका ज्येष्ठा प्रणम्य हरिमच्युतम्।। (१)

1. தண்டகன் என்னும் அசுரனுக்கு ஜில்லீ என்றும், தில்லீ என்றும் இரண்டு குமாரிகள் இருந்தனர். அவர்களில் மூத்தவளான ஜில்லீ என்பவள் ஸ்ரீமந்நாராயணனை ஸேவித்து,

भगवन्नत्र त्वत्सेवा कृत्वा नत्वा वसाम्यहम्।
अनुगृह्णीष्व मां चेति सा प्रार्थयन्ती प्रभुम्।। (२)

2. பகவந், நான் இங்கேயே வஸித்துக் கொண்டும், உம்மை ஸேவித்துக் கொண்டும், உமக்குத் தொண்டு செய்து கொண்டிருக்க எனக்கு அருள் புரிவீராக என்று பகவானை ப்ரார்த்தித்து

नित्यवासं कुरुष्वेति प्रार्थयामास झिल्लिका।
तथाऽस्त्वित्यहमत्रैव वराहाङ्गो वसाम्यहम्।। (३)

3. இங்கேயே நித்ய வாஸம் புரிவீராக என்றும் ஜில்லிகா ப்ரார்த்தித்தாள். அப்படியே ஆகட்டும். நான் இங்கேயே வராஹ ரூபியாக வாஸம் செய்கிறேன்.

इति तस्यै वरं दत्वा सर्वाभीष्टप्रदायकः।
श्रिया भूम्या मुदा युक्तः श्रीमुष्णेऽद्यापि राजते।। (४)

4. அபீஷ்ட வரதனான ப்ரபு அவளுக்கு இவவாறு வரமளித்து ஸ்ரீ தேவி, பூதேவி ஸமேதராக மிகவும் ஸந்தோஷத்துடன் இப்போதும் ஸ்ரீ முஷ்ணத்தில் ஸேவை ஸாதிக்கிறார்.

ततस्तिल्ली वराहं तं स्तुत्वा नत्वा मुहुर्मुहुः।
भगवान्नत्र वैकुण्ठे वासं कर्तुं वरं प्रद।। (५)

5. பிறகு இளையவளான தில்லீ என்பவள் அந்த வராஹ ரூபீ பகவானை வணங்கி, துதித்து, பகவானே வைகுந்த நகரமான இங்கேயே வஸிப்பதற்கு வரமளிப்பாயாக.

इति सत्यां प्रार्थयन्त्यां तिल्लीमाह वराहराट्।
मत्क्षेत्रस्य पुरोभागे योजनद्वितयाऽवधौ॥ (६)

6. என்று ப்ரார்த்திக்கிற ஸத்யவதியான தில்லீயைப் பார்த்து வராஹ பகவான் சொல்லத் தொடங்கினார். என்னுடைய இந்த க்ஷேத்ரத்துக்கு எதிரே இரண்டு யோஜனை தூரத்தில்

पुण्डरीकपुरश्चेति हृद्स्थानं मम तिल्लिके।
प्रख्यातं पुण्डरीकाख्यं मुनिकल्पितमस्ति हि॥ (७)

7. தில்லிகையே! புண்டரீகபுரமென்னும் க்ஷேத்ரம் என்னுடைய ஹ்ருதயஸ்தானமாக பிரஸித்தி பெற்று புண்டரீகர் என்ற முனிவரால் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது.

तत्राऽहमेव शेषाङ्करत्नसिंह्मासने शुभे।
सभापतिस्सदा तिष्ठन् लोकान् रक्षामि शोभने॥ (८)

8. அழகானவளே! அங்கு நான் ஆதிசேஷனின் மடியில் மங்களகரமான ரத்ன ஸிம்ஹாஸனத்தில் ஸபாபதியாக எப்போதும் இருந்து கொண்டு லோகங்களை ரக்ஷிக்கிறேன்.

तत्र गत्वा महाभक्त्या सर्वाभीष्टार्थसिद्धये।
पुण्डरीकसरस्तीरे तपः कुरु जितेन्द्रिया॥ (९)

9. அங்கு சென்று மிகவும் பக்தியுடன் அபீஷ்டங்களனைத்தும் (விருப்பங்கள்) ஸித்திப்பதற்காக புண்டரீக புஷ்கரிணீயின் கரையில் இந்த்ரிய நிக்ரஹத்துடன் தபஸ் செய்வாயாக.

इत्युक्ता सा वराहेण पुण्डरीकसरस्तटे।
चिरमानन्दगोविन्दं ध्यात्वा घोरमतप्यत॥ (१०)

10. வராஹ பகவானால் இவ்வாறு சொல்லப்பட்டதும், அந்த தில்லீ என்பவள் புண்டரீக புஷ்கரிணியின் கரையில் வெகு காலம்

ஆனந்தமாக ஸ்ரீகோவிந்தராஜனைக் குறித்து த்யானித்து மிகக் கடுமையான தவம் இயற்றினாள்.

तदा हरिः प्रसन्नात्मा श्रिया भूम्या समावृतः।
आविरासीत् पुरस्तस्याः सर्वलोकनमस्कृतः॥ (११)

11. ஸ்ரீஹரி மிகவும் ஸந்தோஷமடைந்து ஸ்ரீ தேவி, பூமிதேவி ஸமேதராக, லோகத்தாரனைவராலும் ஸேவிக்கப்பட்டு அந்த தில்லியின் முன்னால் தோன்றினார்.

तं दृष्ट्वा कोटिकन्दर्पलावण्योज्वलविग्रहम्।
कस्तूरितिलके भ्राजत् मन्दस्मितमुखाम्बुजम्॥ (१२)

12. புன் சிரிப்பினால் மலர்ந்த தாமரை போன்ற முகமுடையவரும், கஸ்தூரி திலகத்தால் பிரகாசிக்கிற நெற்றியை உடையவரும், கோடி மன்மதர்களின் அழகு நிறைந்த திருமேனியுடையவருமான அந்த ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்து,

सुकपोलं सुनासान्तं बिम्बोष्ठं सुभ्रुवं शुभम्।
सुश्रोत्रं करुणाब्जाक्षं सिंहस्कन्धं सुकन्धरम्॥ (१३)

13. அழகிய கன்னங்களையும், அழகான மூக்கையும, கோவைப் பழம் போன்ற உதடுகளையும், சுபகரமான புருவங்களையும், அழகிய காதுகளையும், கருணை நிரம்பிய கண்களையும், சிங்கம் போன்ற தோள்களையும் அழகான கழுத்தையும் உடையவரும்,

किरीटहारकेयूरमण्डलानि विभूषणम्।
श्रीवत्सेन श्रिया राजत् विस्तारोज्वलवक्षसम्॥ (१४)

14. கிரீடம், ஹாரம், தோள் வளை முதலான ஆபரணங்களால் அலங்காரமானவரும், ஸ்ரீவத்ஸம் எனும் மருவினாலும், ஜ்வலிக்கின்ற அகன்ற ப்ரகாசமான மார்பையுடையவரும்,

शङ्खचक्रगदाशार्ङ्गनन्दकायुधशोभितम्।
पीताम्बरधरं विष्णुं कटकोज्वलबाहुकम्॥ (१५)

15. ஶங்கம், சக்ரம், கதை, ஶார்ங்கம், கத்தி முதலான பஞ்ச ஆயுதங்களைத் தரித்தவரும், பீதாம்பர வஸ்த்ரமணிந்தவரும், வளைகளணிந்து ப்ரகாசமான கைகளையும் உடைய ஸ்ரீமஹா விஷ்ணுவைப் பார்த்து,

वनमालावैजयन्तीरत्नहारादिशोभितम् ।
वैनतेयकरद्वन्द्वविन्यस्ताब्जपदद्वयम् ।। (१६)

16. வன (துளஸீ) மாலை, வைஜயந்தீ மாலை, ரத்னஹாரம் முதலியவற்றால் ஶோபிக்கிறவரும், கருட பகவானின் கைகளில் இரண்டிலும் வைக்கப்பட்ட தாமரை போன்ற திருவடிகளை உடையவரும்,

गोविन्दराजं देवेशं ब्रह्मरुद्रादिसेवितम् ।
लोकनाथं दयासिन्धुं नत्वा तुष्टाव सादरम् ।। (१७)

17. தேவாதி தேவனும், ப்ரஹ்மருத்ராதிகளால் ஸேவிக்கப்பட்டுபவரும், லோகநாதனும், தயாஸாகரனுமான ஸ்ரீகோவிந்தராஜனை ஆதரவுடன் ஸேவித்து ஸந்தோஷமடைந்தாள்.

तिल्ली- नमस्ते पुण्डरीकाक्ष पुण्डरीकपुराधिप ।
पुण्डरीकलतानाथ पुण्यलोक नमोऽस्तु ते ।। (१८)

18. தில்லீ:- புண்டரீக புரத்தலைவனே, தாமரை மலர்க்கண்களையுடையவனே, புண்டரீகவல்லி நாச்சியாரின் நாதனே, புண்ய லோகாதிபனே ! உன்னை ஸேவிக்கிறேன்.

नमो गोविन्दराजाय गोपिकानन्दमूर्तये ।
नमो वेदान्तवेद्याय योगिमानससद्मने ।। (१९)

19. கோபிகாஸ்த்ரீகளின் ஆனந்த மூர்த்தியான கோவிந்தராஜனுக்கு நமஸ்காரம். யோகிகளின் மனதில் வஸிப்பவனும் வேதங்களால் போற்றப்படுவருமான ஸ்ரீஹரிக்கு நமஸ்காரம்.

इति स्तुत्वा बहुविधं भगवद्ध्यानतत्परा ।
बध्दाञ्जलिपुटा हर्षात् स्थाणुवत् सन्धितमुने ।। (२०)

20. இவ்வாறு பலவாறாகத்துதித்து, பகவத் த்யானத்தில் ஈடுபட்டவளாக அஞ்ஜலி ஹஸ்தையாக, ஸ்தம்பம் போல் அசையாமல் நின்றாள்.

भगवान्-अथ कल्याणि भद्रन्ते स्तोत्रेण तपसाऽधुना।
वरान् वरय मां देवि तान् ददामि न संशयः॥ (२१)

21. பகவான் :- கல்யாணியே ! உனக்கு மங்களமுண்டாகட்டும். உன்னுடைய ஸ்தோத்ரத்தாலும், தபஸாலும் மகிழ்ச்சியடைந்தேன். தேவியே ! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள். கொடுக்கிறேன். இதில் ஸம்சயம் வேண்டாம்.

तिल्ली -त्वत्सेवां सन्ततं कर्तुं वैकुण्ठेऽत्र च माधव।
वनमेतन्महापुण्यं मन्नामाऽस्तु सुखावहम्॥ (२२)

22. மாதவனே ! இந்த (பூலோக) வைகுந்தத்தில் உனக்கு எப்போதும் கைங்கர்யம் செய்ய அருள வேண்டும். இந்த வனம் மிகவும் புண்யம் நிறைந்ததும், ஸுகம் தரக்கூடியதாயும் என்னுடைய பெயருடன் விளங்க வேண்டும்.

अस्मिन् मद्वनसुक्षेत्रे निवसन्ति बुधा जनाः।
तेभ्योऽत्र सम्पदं पुत्रान् दत्वाऽन्ते देहि त्वत्पदम्॥ (२३)

23. நான் வஸிக்கும் இந்த வனப்ரதேசத்தில் பெரிய மஹான்கள் வஸிக்கின்றனர். இவ்வுலகில் அவர்களுக்கு நிறைய செல்வத்தையும், மக்களையும் கொடுத்து, கடைசியில் உன்னுடைய ஸ்தானமான மோக்ஷத்தையும் அருள வேண்டும்.

त्वन्नामपूर्वकं श्रीमन् मम नामाऽद्य धारय।
शिवश्च कलिं मन्नामपूर्वं धातुं प्रसाधि हि॥ (२४) श्रा

24. ஸ்ரீமந் ! உன்னுடைய பெயருக்கு முன்னால் என்னுடைய பெயரைச் சேர்ப்பாயாக. அதேபோல் பரமேச்வரனும், காளியும் தங்களது பெயருக்கு முன்னால் என் பெயரைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

एतान् वरान् मे देहि त्वं रक्ष मां शरणागताम्।
इत्युक्तः श्रीपतिः श्रीमान् वरान्दत्वा रराज ह॥ (२५)

35. இந்த வரங்களை எனக்கு அளிப்பாயாக. உன்னை ஶரணாகதி செய்கிற என்னை ரக்ஷிப்பாயாக என்று கேட்ட தில்லிக்கு ஸ்ரீமந்நாராயணன் அவள் கேட்ட வரங்களை அளித்து ஸேவை ஸாதிக்கிறார்.

तदा प्रभृति श्रीतिल्लीवनमित्यभिकीर्तितम्।
तिल्लीगोविन्दराजेति नामासीत् तिल्लनायकः॥ (२६)

36. அது முதற்கொண்டு இந்த நகரம் தில்லீ (தில்லை) வனம் என்று பிரஸித்தமாயிற்று. தில்லை நாயகனுக்கும், தில்லை கோவிந்தராஜன் எனப் பெயர் உண்டாயிற்று.

शिवस्य तिल्लकालीति लोके ख्यातिरभून्मुने।
केचिज्जना स्वनाम्नोऽग्रे तन्नामाद्य भरन्ति हि॥ (२७)

37. முனிவரே ! ஈச்வரனுக்குத் தில்லை ஈச்வரன் (நடராஜன்) என்றும், காளி மாதாவுக்கு தில்லைக் காளி என்றும் இந்த லோகத்தில் ப்ரஸித்தி ஏற்பட்டது. சில ஜனங்களும் தங்கள் பெயர்களுக்கு முன்னால் 'தில்லை' என்ற நாமத்தைத் தரித்தார்கள்.

वैकुण्ठे तु वरे लोके विष्णोस्सेवां वितन्वति।
राजतेऽद्याऽपि सा तिल्ली द्रुमरूपा मुने शृणु॥ (२८)

38. முனிவரே ! கேளும், இப்போதும் அந்த தில்லீ எனபவள் வ்ருக்ஷ உருவத்துடன் இந்த ச்ரேஷ்டமான வைகுண்ட லோகத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு ஸேவை செய்து கொண்டு விளங்கி வருகிறாள்.

ப்ரம்மாண்ட புராணம் மூன்றாம் அத்யாயம் நிறைவுற்றது.

# ஸ்ரீப்ரம்மாண்ட புராணம்
## நான்காம் அத்யாயம்

ब्रह्मन् शिवश्च काली च तत्रोभगौ केन वाऽगतौ।
तत्कथां विस्तरेणाऽद्य ब्रूहि कौतूहलं हि मे।। (१)

1. ப்ரம்மதேவரே! ஶிவபெருமானும், காளிதேவியும் ஏன் இங்கு வந்தனர்? அதனை இப்போது விஸ்தாரமாகச் சொல்லுங்கள். கேட்க ஆவலாக இருக்கிறேன்.

तेन सार्धं तदा गौरी चक्रे चानन्दताण्डवम्।
तयोरासीद्द्वयोर्वादो नृत्ते चतुरतां प्रति।। (२)

2. பரமஶிவனும அவரது பத்னீயான பார்வதியும் அப்போது ஆனந்த தாண்டவம் செய்தார்கள். அப்போது அவர்களுக்குள் பரஸ்பரம் ந்ருத்யத்தில் யார் வல்லவர்கள் என்பது பற்றிச் சர்ச்சை ஏற்பட்டது.

तदा गुहादिप्रमथान् साक्षीकृत्य च नृत्ततुः।
तें तु सर्वेऽथ पार्वत्या नाट्यं संश्लाघयन्ति हि।। (३)

3. அப்போது இருவரும் குஹன் முதலான கணங்களை ஸாக்ஷியாக வைத்து நடனமாடினார்கள். அவர்களெல்லோரும் பார்வதி தேவியின் நாட்டியமே சிறந்தது எனப் புகழ்ந்தனர்.

तदा हरो महाकोपात् अयिगौर्यद्य मां प्रति ।
मत्वा लक्ष्यं विनिन्दित्वा वादित्वा शत्रुवन्मुहुः ।।(४)

4. அப்போது பரமஶிவன் மிகுந்த கோபத்துடன் - ஏ கௌரி! இப்போது என்னையும், எனது லக்ஷ்யத்தையும் நிந்தித்து என்னிடம் ஶத்ருவைப் போல அடிக்கடி வாதம் புரிந்து வருகிறாய்.

त्वमद्य काव्वि दुर्गासि घोररूपा भयङ्करा।
मद्यमांसाशना नित्यं ग्रामान्ते संवसिष्यसि।। (५)

5. நீ இப்போது காளியாகவும், துர்க்கையாகவும், கோரமான உருவத்துடன் மிகவும் பயஙகரமாக இருக்கிறாய். ஆகையால் மதுபானம், மாம்ஸம் முதலியவற்றை உண்பவளாக கிராம எல்லையில் வஸிப்பாயாக.

इति शप्त्वा प्रियां गौरी कुमारादीन् विनिन्द्य च।
मातर्यधिकप्रक्षत्वात् पक्षपात हि शंसय॥ (६) ?

6. என்பதாகத் தனக்குப் பிரியமுள்ளவளான பார்வதியை ஶபித்து, தனது புத்ரர்களைப் பார்த்து தாயிடம் உள்ள அதிக பாசத்தால் ஒருதலைப் பக்ஷம் ஏற்றீர்கள்.

तस्मादेवाद्य मध्यस्थं माऽस्तु मे वरये परम्।
इति ब्रुवति शर्वे तु कालिरूपा शिवा रुषा॥ (७)

7. அதனாலேயே உங்களது மத்யஸ்தம் எனக்கு வேண்டாம என்று சொன்ன பரமஶிவனைப் பார்த்து காளி உருவமடைந்த பார்வதி கோபமடைந்து,

अन्यायात् शप्तवान्स्त्वं मां रूपेणैतेन सन्ततम्।
यत्र यत्र भवान्यासीत् तत्राऽप्हं त्वामनुव्रजे-॥ (८) त्

8. ந்யாயமில்லாமல் தாங்கள் என்னை ஶபித்தீர்கள். எப்போதும் இந்த ரூபத்துடனேயே நான் எங்கெல்லாம் தாஙகள் செல்கிறீர்களோ அங்கெல்லாம் தங்களைப் பின் தொடருவேன்.

इत्युक्त्वा तेन सार्धं सा मम लोकं गता मुने।
तत्राऽसने समासीनं वाण्या मां मुनिसुवृतम् ॥ (९)

9. என்று சொல்லி அவருடன் (பரமஶிவனுடன்) கூட அந்தப் பார்வதி தேவி, ஸரஸ்வதியுடன் ஸமமான ஆஸநத்தில் முனிவர்கள் சூழ அமர்ந்திருந்த ப்ரம்மாவான என் லோகத்தை அடைந்தாள்.

मां दृष्ट्वोऽभौ प्रणम्याऽथ भवन्तन्नर्तनाय वै।
मध्यस्थं प्रार्थयावोऽद्य दया कुरु चतुर्मुख॥ (१०)

10. இருவரும் ப்ரம்மாவான என்னைப் பார்த்து வணங்கி தாஙகள் எஙகளது நர்த்தனத்துக்கு மத்யஸ்தராக இருக்கப் ப்ரார்த்திக்கிறோம. ப்ரமம தேவரே ! கருணை செய்விராக என்றாள்.

इति कळीशयोश्चाह प्रार्थनावशतस्तदा।
देवैश्च मुनिभिस्सार्धं कळीशाभ्या समागत.।। (११)

11. இவ்வாறு காளியினாலும, ஈசனாலும், அப்போது நான் ப்ரார்த்திக்கப்பட தேவர்கள், முனிவர்களுடன் கூட வந்து சேர்ந்தனர்

वेङ्कटाद्रेर्दक्षिणे तु योजनत्रितयावधौ।
काञ्चीपुरस्य वायव्ये भागे पुण्यतमे शुभे।। (१२)

12. வேஙகடாத்ரி என்னும் திருப்பதிக்குத் தெற்கில் மூன்று யோஜனை தூரத்திலும், காஞ்சீபுரத்துக்கு வாயு திசையில் புண்ணியம் நிறைந்த

वटारण्ये तदा हन्त तयोर्नाट्यं समीक्ष्य च।
युवयोर्नाट्यचातुर्ये जयाजयमहं शिव।। (१३)

13. வடாரண்ய க்ஷேத்ரத்தில் அவ்விருவரின நாட்டியம நடந்தது. ஆகையால் நாட்டியத்தைப் பார்த்து நான், பரமேச்வர, உஙகளிருவரின் நாட்டியத் திறமையில் வெற்றி தோல்வியைச்

वक्तुं न शक्तस्तस्मात् त्व विष्णु प्रार्थनया प्रभुम्।
सं विष्णुरुभयोर्वादं विभज्येतन्न सशयः।। (१४)

14. சொல்வதற்கு தகுதியற்றவனாக இருக்கிறேன். ஆகையால நீஙகள் ப்ரபுவான மஹாவிஷ்ணுவை ப்ரார்த்திப்பீர்களாக. அந்த மஹாவிஷ்ணு, உஙகளிருவரின் வாதத்தை ப்ரிசீலிப்பார். இதில ஸந்தேகமில்லை.

इति मद्वचनं श्रुत्वा काळी शम्भुरुभावपि।
विवादमसकृत्कृत्वा क्षीराब्धितटमेत्य च।। (१५)

*15. என்பதான என் சொல்லைக் கேட்டு காளி, ஶம்பு இருவரும் அடிக்கடி விவாதம் செய்து திருப்பாற்கடலின் கரையை அடைந்து*

कल्लोलहस्तैराप्तानां शीकरव्रजमौक्तिकम्।
अवयन्तमिवाऽऽभान्त दृष्ट्वा क्षीराब्धिमुत्तमम्॥ (१६)

*16. தனக்கு ஆப்தமானவர்களுக்குப் பெரிய அலைகளாகிற கைகளாலே நீர்த்துளிகளின் கூட்டமாகிற முத்துக்களை அளிப்பது, போன்று ப்ரகாசிக்கிற உத்தமமான திருப்பாற்கடலைப் பார்த்து*

ततस्तन्मध्यमे हृद्यं दिव्यरत्नोज्वलं महत्।
बालसूर्यप्रतीकाश विमान वीक्ष्य विस्मितौ॥ (१७)

*17. அதன் மத்தியில் மனோஹரமான திவ்யரத்னம் போல் ப்ரகாசிக்கிறதும் மஹத்தான பால ஸூர்யனைப் போல் ஒளி வீசுகிற விமானத்தை இருவரும் மிக ஆச்சர்யத்துடன் பார்த்து*

तन्मध्ये शेषपर्यङ्के शयानं कमलासखम्।
कोटिकन्दर्पलावण्यं कोटिसूर्यसमप्रभम्॥ (१८)

*18. அதன் நடுவில் ஆதிஶேஷனின் மடியில் ஶயனித்திருப்பவரும் மஹாலக்ஷ்மீநாயகனும், கோடி மன்மதர்களுக்கு ஈடான அழகுள்ளவரும், கோடி ஸூர்யர்களுக்கு ஸமமான காந்தியுடையவரும்,*

लोकनाथं दयासिन्धुं प्रणतार्तिहरं हरिम्।
स्तुत्वा नत्वा मुहुर्भक्त्या बध्दाञ्जलि पुट स्थितौ॥ (१९)

*19. கருணைக் கடலான லோக நாதனை, வணங்கியவரின் துன்பம் போக்குபவனா ஸ்ரீமந்நாராயணனைத் துதித்து, அடிக்கடி வணங்கி கைகூப்பி இறைப்பற்றுடன் நின்றார்.*

तदा हरिः प्रसन्नात्मा समागत्य तयोः पुरः।
किं कार्य युवयोरत्रेत्यपृच्छत् शङ्कर मुने॥ (२०)

*20. முனிவரே! அப்போது ஸ்ரீஹரியானவர் மகிழ்ச்சியடைந்தவராக அவர்கள் எதிரில் வந்து ஶங்கரரைப் பார்த்து நீங்கள் இங்கு எதற்காக வந்திருக்கிறீர்கள்? என்று கேட்டார்.*

शङ्करः- भगवन् मेऽद्य काल्याश्च महान्वादो नटेऽजनि।
तस्मान्नौ नाट्यमुदीक्ष्य कोऽधिक. कथ्यता विभो॥ (२१)

21. ஶங்கரர் - பகவானே! இப்போது எனக்கும, காளி தேவிக்கும நாட்டிய விஷயமாக பெரிய சர்ச்சை ஏற்படடுள்ளது. ஆகையால் ப்ரபுவே எங்களது நாட்டியத்தைப் பார்த்து யார் எஙகளில சிறந்தவா என்பதைக் கூற வேண்டுகிறேன்.

इति ब्रुवति भूतेशे लोकनाथं श्रिय.पतिम्।
काळी तदा नमस्कृत्य स्तुत्वा प्राह मुने शृणु॥ (२२)

22. இவ்வாறு பூதேஶனான பரமஶிவன் லோகநாதனான ஸ்ரீமந்நாராயணனைப் பார்த்து ப்ரார்த்தித்தவுடன், காளி தேவி பகவானை நமஸ்கரித்து ஸ்தோத்ரம் செயது கூறுவாள்.

काली – नाट्येऽय त्वसमर्थस्सन् तत्कोपान्मा प्रिया सतीम्।
अन्यायात् काळ्यसीत्येतदशपद्युक्तमस्ति हि॥ (२३)

23. காளிதேவி கூறுவது. - இவர் நாட்டியததில அஸமாததராக இருந்து அந்தக் கோபததினால பதிவ்ரதையும பரியமானவளுமான என்னை, அநியாயமாக காளியாக ஆவாய் எனறு ஶபித்தா. இது சரியிலலை அலலவா!

इत्थ ब्रुवन्त्या काल्या तु सान्त्वयित्वाऽथ माधव।
आनीय विश्वकर्माण प्राह शिल्पविदा वरम्॥ (२४)

24 இவ்வாறு கூறின காளிமாதவை மாதவனான மஹாவிஷ்ணு ஸமாதானம செய்து, சிறப ஶாஸ்த்ரததில சிறந்த ஞானமுள்ள விசவகர்மாவை வரவழைதது இவவாறு கூறுவாரானா

भगवान्- उत्तरश्रीदकावेर्याश्चोत्तरे वसुधातले।
तिल्लीवनस्य मध्ये त्व मदास्थान मनोहरम्॥

25. பகவான் - இநத பூலோகத்தில வடதிருககாவேரீ எனறும கொளளிட நதியின வடகுப பாகத்தில் உளள திலலீவன ப்ரதேசத்தின் மததியில நீ, நான வஸிப்பதறகேறற மனோஹரமான

सभाभिः कुरु विस्तार पुर सुरपुरोपमम्। amil)
इत्याज्ञाप्य शिवं कालि गच्छत तत्र मा चिरम्॥ (२६)

26. தேவலோகத்துக்கு ஸமமான விஸ்தாரமான ஒரு நகரத்தை (நாட்டிய) அரஙகத்தோடு செய்வாயாக, என்று ஆஜ்ஞாபித்து பரமசி வனையும், காளியையும் நோக்கி, நீஙகள் இருவரும் ஸீகரமாக அஙகு செலவீர்களாக.

इत्युक्तान्तर्दधे विष्णुस्तत. कैलासमुत्तमम्।
शिवः प्राप ततो भूम्यां काळी रामापुरं ययौ॥ (२७)

27. என்பதாகச் சொல்லி மஹாவிஷ்ணு மறைந்து விட்டார் அதன் பிறகு ஈச்வரன் உத்தமமான கைலாஸம சென்றடைந்தார காளி தேவி ராமாபுரம் என்னும் இடத்தை அடைந்தாள்.

विश्वकर्मा ततो हर्षात् सर्वशिल्पविदा वर.।
मनोहर पुर तत्र कर्तुमारब्धवान् मुने॥ (२८)

28. பிறகு சிற்பசாஸ்த்ரம் எல்லாவற்றிலும வலலவரான விச்வகர்மா மிக்க ஸந்தோஷத்துடன் மனோஹரமான நகரம ஒன்றை நிர்மாணிக்கத் தொடஙகினார்.

ப்ரஹ்மாண்ட புராணம் நான்காம் அத்யாயம் நிறைவுற்றது.

# ப்ரம்மாண்ட புராணம்
## ஐந்தாம் அத்யாயம்

नारद ब्रह्मन् किमकरोत्तत्र विश्वकर्मा ततःपरम्।
तत्कथां विस्तरेणाऽद्य कृपया शंस मे प्रभो॥ (१)

1. நாரதர் - ப்ரமம தேவரே ! அதன பிறகு அங்கு விச்வகாமா என்ன செய்தார். ப்ரபுவே ! அந்தக் கதையைத தயவு செயத இபபோது விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுகிறேன்

पुत्रः कस्य वरात् कस्य शिल्पीन्द्रोऽभूद्वद प्रभो।
विश्वकर्मा चित्रकूटं कथ निर्मितवान् स्वयम्॥ (२)

30. சிற்பிகளில் சிறந்த விச்வகர்மா யாருடைய புத்ரன்? ப்ரபுவே! யார் கொடுத்த வரத்தால சிறபிகளின் தலைவனானான்? அந்த விஸ்வகர்மா தானாகவே எவ்வாறு திருச்சித்ரகூடத்தை நிர்மாணித்தான்?

ब्रह्मा- विश्वकर्मा मयश्चेति मच्छक्त्या समवावुभौ।
मद्वरात् शिल्पिनां श्रेष्ठौ देवदानवतक्षकौ। (३)

3. ப்ரஹ்மா - விச்வகர்மா, மயன் எனறு இரணடு தக்ஷாகள (தசசர்கள்) என்னுடைய சத்தியால படைக்கப்படடனா என்னிடமிருந்து பெற்ற வரத்தால் சிறபிகளில சிறந்தவர்களாயும, தேவர்களுக்கும, அஸுரர்களுக்கும் தக்ஷகர்களாயும ஆனாாகள்

स विश्वकर्मा मेरोश्च सागरेभ्यस्समन्ततः।
श्रेष्ठानि नवरत्नानि समाहृत्य शुभे दिने॥ (४)

4. அந்த விச்வகர்மா மேரு பர்வதம் மறறும் ஸமுத்திரத்தினின்றும மிகவும் ச்ரேஷ்டமான நவரத்னஙகளை சேகரித்து ஒரு சுபதினத்தில

आलयञ्च सभा हृद्यां पुरञ्चोद्यानसञ्चयान्।
निर्मित्वाऽथ यथाशास्त्रं क्षीराब्धितटमेत्य च॥ (५)

5. ஒரு ஆலயத்தையும் அதில் ஒரு அழகான அரங்கத்தையும் எதிரில் உத்யானவனத்தையும் ஶாஸ்த்ர முறைப்படி நிர்மானம் செய்து பிறகு க்ஷீராப்தியின் கரையை அடைந்து

क्षीराब्धिशयनं नत्वा भक्त्या स्तुत्वा व्यजिज्ञपत्। त्रि
भवदाज्ञाप्रकरेण तिल्लीकवनमध्यमे ॥ (६)

6. க்ஷீராப்திநாதனான ஸ்ரீஹரியை ஸேவித்து பக்தியுடன் துதித்து இவ்வாறு விஜ்ஞாபனம் செய்தான். பிரபுவே ' தேவரீரது ஆஜ்ஞைப்படி தில்லீவனத்தின் மத்தியில்

सभाञ्चालयमद्याऽहं पुरञ्चोद्यानसञ्चयान्।
वापीकूपतटाकदीन् सर्वाञ्चाऽकरवं प्रभो॥ (७)

7. இப்போது நான் ஒரு ஆலயமும், அதில் ஒரு அரங்கத்தையும் எதிரில் உத்யானவனத்தையும், வாபி, கிணறு, தடாகம் முதலான எல்லாவற்றையும் செய்து முடித்தேன்.

इति ब्रुवति शिल्पेन्द्रे भगवान् विश्वसृट् विभुः।
श्लाघयित्वा च तं हर्षात् तत्र गन्तु मनो दधे॥ (८)

8. என்று கூறிய விச்வகர்மாவின் வார்த்தையைக் கேட்டு லோக ஸ்ருஷ்டி கர்த்தாவான பகவான் அவனை மிகவும் ச்லாகித்து மிக்க ஸ்தோஷத்துடன் அங்குச் செல்லத் திருவுள்ளம் கொண்டார்.

तत्रान्तरे दिगीशाद्या देवाश्चेन्द्रपुरोगमाः।
सायुधा सेनया सार्ध सवाहनपरिच्छदः॥ (९)

9. முடிவில்திக்பாலகர்களான இந்திரன் முதலான தேவர்கள் ஆயுதங்களுடனும், ஸேனைகளுடனும், வாஹனங்களுடனும கூட,

रुद्रदत्तवरोन्मत्तेन असुरेन्द्रेण दारुणम्।
चिर युध्दं प्रकुर्वन्तः तेन वाल्कलिना जिताः॥ (१०)

10. ருத்ரனிடமிருந்து பெற்ற வரத்தினால் உன்மத்தனான 'வால்கலி' என்ற அரக்க அரசனுடன் மிகவும் கடுமையான யுத்தம் பல காலம் செய்து, அந்த அஸுரனால் தோற்கடிக்கப்பட்டனர்.

स्वर्गादिलोकान् सन्त्यज्य तद्भयात् बहुविह्वलाः।
रक्ष रक्षेति मां प्रोक्त्वा चाऽब्रुवन् तस्य चेष्टितम्।। (११)

11. அந்த பயத்தால் மிகவும் க்லேசமடைந்தவர்களாகி, ஸ்வர்க்காதி லோகங்களை விட்டு விட்டு, எங்களைக் காப்பாறறுங்கள் என்று என்னிடம் சொல்லி அஸுரராஜனின் சேஷ்டைகளையும் சொன்னார்கள்.

तदेन्द्रादिसुरान्सर्वान् भयार्तान्वीक्ष्य सद्गुणान्।
आश्वास्य तद्वधोपाय सविचिन्त्य स्थितो मुने।। (१२)

12. நல்ல குணமுள்ளவர்களும், பயத்தால் பீடிக்கப்பட்டவர்களுமான இந்த்ரன் முதலான தேவர்களைவரையும் ஆச்வாஸப்படுத்தி அந்த அஸுரனை வதம் செய்வதற்கான உபாயத்தை சிந்தித்திருந்தேன்.

नारदः- भगवन् कस्य पुत्रस्स केनन्दाक्तध्दरं शिवम्।?
कथ हतस्स दैत्येन्द्रो वाल्कलि ब्रूहि मे प्रभो।। (१३)

13. நாரதர் - பகவந் ! அந்த அஸுரன் யாருடைய புத்ரன்? எவ்வாறு ஈச்வரனை த்ருப்தி செய்வித்தான்? அந்த வால்கலி என்னும் அசுரராஜன் எவ்வாறு கொல்லப்பட்டான்? ப்ரபுவே ! விபரமாக எனக்கு அறிவிக்க வேண்டும்.

ब्रह्मा- वल इत्यसुरः कश्चित् भ्राता तस्य स वलकलि।
जघानेन्द्रो मम ज्येष्ठ वलमित्यनिरोषत.।। (१४) ?

14. ப்ரம்மா சொல்வது வலன் என்று ஒர அஸுரன் இருந்தான். அவனுடைய ஸஹோதரன் இந்த வல்கலி என்பவன், என்னைக் காட்டிலும் பெரியவனான இந்த வலனை இந்திரன் விரோதத்தால கொன்றுவிட்டான்.

रुद्रं रौद्र तपो दीर्घ अकरोत्स हिमाचले।
तदा तस्मै प्रसन्नात्मा स्तोत्रेणाऽदात् वरान् शिव ।। (१५)

15. அந்த வல்கலி என்பவன் ஈச்வரனைக் குறித்து ஒரு நீண்ட கால தபஸ் செய்தான். அவனது ஸ்தோத்ரங்களால மகிழ்ச்சியடைந்த ஸிவபிரான் அவனுக்கு வேண்டிய வரங்களைத் கொடுத்தார்.

तेन दैत्यो महावीर्यात् बलयुक्तो रणोद्धत ।
जित्वेन्द्रादीन् रणे सर्वान् स्वर्गं प्राप्य सुखी स्थित ॥(१६)

16 அதனால் அதிக பலம் பெற்ற வல்கலன் யுத்தத்தில (இந்த்ராதி) தேவர்கள் எல்லோரையும் தோற்கடித்து ஸ்வர்க்கத்தைக் கைபபறறி ஸுகமாக இருந்தான்.

अथेन्द्रो निखिलैर्देवै. केशव शरणागतः ।
तेन दत्तायुधादिन्द्र. तन्निकाय यमक्षयम् ॥ (१७)

17. அதன் பிறகு தேவேந்த்ரன் ஸகல தேவர்களுடனும கேசவனான ஸ்ரீஹரியை சரணமடைந்தான். இந்த்ரன் அவரால கொடுக்கப்பட்ட ஆயுதத்தால் அந்த அஸுரனைக் கூட்டத்தோடு யமலோகம் அனுப்பினான்.

नारदः भगवन् कथमिन्द्रस्तु विष्णोरायुधमाप्तवान् ।
केन युध्देन तं दैत्य शत्रुं सहरदब्जज ॥ (१८)

18. நாரதா - பகவந் ! தாமரையில உதித்தவரே ! இந்தரன் எவ்வாறு விஷ்ணுவிடமிருந்து ஆயுதம் பெற்றான்? எந்த யுத்தத்தினால ஶத்ருவான அஸுரனைக் கொன்றான்.

ब्रह्मा- मुनेऽह सकलैर्देवै. इन्द्राद्यष्टदिशाधिपै ।
क्षीराब्धितटमभ्येत्य सस्तुव श्रुतिवाक्यत ॥ (१९)

19. ப்ரஹமா - முனிவரே ! நான் முனிவர்கள் எல்லோருடனும, இந்த்ரன் முதலான அஷடதிகபாலர்களுடனும, திருபபாறகடலின கரையை அடைந்து ச்ருதிவாக்யஙகளால ஸ்ரீமந்நாராயணனை ஸ்தோத்ரம செய்தேன.

ततः प्रसन्नो भगवान् हरिस्सर्वविदच्युतः ।
ब्रह्म सर्वमहं वेद्मि तद्भीतिर्माऽस्तु वोऽमराः ॥ (२०)

20. அதனால் ஸந்தோஷமடைந்த பகவான, எல்லாமறிந்தஅச்யுதன், ப்ரஹமதேவரே ! நான் எலலாமறிவேன் தேவர்களாகிய உஙகளுக்குப் பயம் வேண்டாம் என்று சொல்லி

कावेर्याश्चोत्तरे तीरे श्वेताद्यास्तु दक्षिणे।
श्रीमुष्णस्य पुरोभागे पूर्वाबोधेस्तु पश्चिमे॥ (२१)

*21. காவேரியின் வடகரையில வெள்ளாறறின் (வெண்ணாறறின்) தென்திசையில், ஸ்ரீமுஷ்ணததின எதிரில கீழத்திசையில், ஸமுத்ரத்துக்கு மேற்கு திசையில்*

तिल्लीकाननमध्ये तु विश्वकर्मविनिर्मिते
काननाख्ये सभामध्ये रत्नसिंह्मासने स्थित ॥ (२२)

*22. தில்லீவனத்தின நடுவில விசவகாமாவால நிாமாணிக்கப்பட்ட மாளிகை போன்ற ஸபையின் நடுவில ரத்னமயமான சிங்காதனத்தில வீற்றிருந்தார்*

ब्रह्मन् सत्वाखिलैर्देवैरिन्द्राद्यैस्सततं क्षितौ।
ज्ञातु हि लोकवृत्तान्त कर्तु आस्थानमुत्सहे॥ (२३)

*23 ப்ரஹ்மதேவரே ! இந்த்ரன் முதலான எலலா தேவாகளுடனும பூலோகததில நடக்கும லோக வ்ருததாந்ததகை அறிய ஆவலுள்ளவனாக இருககிறேன*

इति प्रोक्त्वा हरि. श्रीमान् शेषसेनाधिपादिभे ।
नित्यैर्मुक्तैर्द्वारपालै परिवारजनैर्वृत ॥ (२४)

*24 இவவாறு சொலலி ஸ்ரீமந்நாராயணன ஆதிசேஷன மற்றும ஸேனாதிபதிகளுடனும, நிதயமுகதாகளான தவாரபால முதலான பரிவாரஙகளால சூழபபட்டவராக*

कस्तूरीतिलके भ्राजत् मन्दस्मितमुखाम्बुज. ।
किरीटहारकेयूरकुण्डलाभरणोज्ज्वल ॥ (२५)

*25 கஸதூரி திலகமிட்டு, மலர்நத செநதாமரை போன்ற புன்சிரிப்புடன, கிரீடம, ஹாரம, தோளவளை, குணடலம முதலான ஆபரணஙகளணிநத பிரகாசிப்பவராக*

पीताम्बरधरस्स्रग्वी पञ्चायुधधरः प्रभु ।
श्रीभूनीळास्समेतस्सन् गरुडोपरि सस्थित ॥ (२६)

26. பீதாம்பரம், வனமாலை அணிந்து, பஞ்சாயுதங்களை உடைய ப்ரபு ஸ்ரீ தேவி, பூதேவி, நீளாதேவியுடன் கூட கருடன் மீது எழுந்தருளிருந்தார்.

बाह्वोर्मूललसद्दिव्यशङ्खचक्रादिलाञ्छनैः।
स्फुरद्दिव्योर्ध्वपुण्ड्राय शोभिताद्भुदविग्रहैः ॥ (२७)

27. கைகளின் மூலஸ்தானத்தில் (தோளிகளில்) ப்ரகாஸமான திவ்ய ஸங்கம், சக்ரம் இவற்றினால் பொறிககப்பட்டும், மிகச் சிறப்பான திருமன் காப்பினால் ஸோபிக்கிற அத்யத்புதமான திவ்யமங்கள ஸ்வரூபமுடையவர்களாயும்,

पद्माक्षतुलसीमाला राजद्वक्षस्सुकन्धरैः।
दिव्यवस्त्रधरैर्दिव्ययज्ञसूत्रविराजितैः ॥ (२८)

28. தாமரை, துளஸீமணிகளால் அலங்கரிக்கப்பட்ட வக்ஷஸ்தலத்தினாலும், திவ்யமான வஸ்த்ரங்களைத் தரித்தும, மிக உயர்ந்த யஜ்ஞோபவிதமணிந்து விளங்குபவர்களாயும்,

कुर्वद्भिस्सामगानादीन् श्रीवैष्णवचयोत्तमैः। पु
अन्तिमोपायनिष्ठैश्च प्रसन्नमुनिसेवितैः ॥ (२९)

29. ஸுஸ்வரமான ஸாமகானாதிகளை ஓதுகிறவர்களாயும் துரீயாச்ரம நிஷ்டர்களாகத் திகழும் முனிபுங்கவர்களாலே ஸேவிக்கப்படுகிறவராயும்,

श्वेतद्वीपवसन्मुक्तैः स्त्रीसाहस्रैः सुपूजितः।
क्षीराम्बुधिं समुत्सृज्य प्रतस्थे भगवान् हरिः ॥ (३०)

30. ச்வேத த்வீபத்தில் வஸிக்கின்ற முகதாகளான ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளால் பூஜிக்கப்பட்ட பகவான ஸ்ரீமந்நாராயணன் திருப்பாற்கடலை விட்டுப் புறப்படடார்

देवदुन्दुभयो नेदुः ननृतुश्चाप्सरोगणाः।
वीणावेणुमृदङ्गादिवाद्यान् जघ्नुः पुरेऽमराः ॥ (३१)

*31.* தேவர்கள் துந்துபி முதலான வாத்யஙகளை முழஙகினார்கள் அப்ஸரஸ்த்ரீகள் நாட்டியமாடினார்கள். அமரர்கள் வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலான வாத்யஙகளை இசைத்தனர்.

पुष्पवर्षाणि मुञ्चन्तः संस्तुवन् जनकादयः।
अस्मादाद्यमरैस्सर्वैः स्तूयमानः जगत्पतिः॥ (३२)

*32.* புஷ்பவர்ஷஙகளைச் செய்து ஜனகர் முதலானோர் ஸ்தோத்ரம், செய்தனர், நம்முடைய முன்னோர்களான தேவர்கள் எல்லோராலும் லோகநாதனான ஸ்ரீஹரிஸ்தோத்ரம் செய்யப்படுகிறார்.

पताकैश्च ध्वजैश्चित्रैर्वितानैर्विविधायुधैः।
छत्रचामरचिह्नादिव्यजनैश्च सुपूजितः।
भूलोकमेत्य संराजत् सर्वप्राणिमनोहरम्॥ (३३)

*33.* பலவர்ணமுள்ள த்வஜபடங்களாலும், பலவகையான ஆயுதங்களாலும், குடை, சாமரம், விசிறி முதலான உபசாரஙகள் செய்யப்பட்டு, ஸர்வப்ராணி மனோஹரனான பகவான பூலோகமடைந்து அஙகு மிகவும் ப்ரகாசமான,

सर्वं सस्यावृतं ह्रदमपश्यत्तिल्लिकावनम्।

பலவகை பயிர்கள் சூழ்ந்த ஏரியை உடைய தில்லிகாவனத்தைப் பார்த்தார்.

सन्तानकल्पमन्दारपारिजातसुचन्दनैः।
पञ्चदेवतरुव्रातैः पाटलीबकुलद्रुमैः॥ (३४)

*34.* நீண்ட கிளைகளையுடைய கற்பகவ்ருக்ஷம், மந்தாரம, பாரிஜாதம், சந்தனவ்ருக்ஷம், தேவதைகள், மனிதர், கந்தர்வர், பாம்பு, பித்ருக்கள் முதலான ஐந்து தேவர்களுக்கு விருப்பமான வ்ருக்ஷஙகள், பாதிரி, மகிழவ்ருஷம் முதலான வ்ருக்ஷஙகளாலும்,

पुन्नागचम्पकाऽशोकतालहिन्तालसालकैः।
मधूकैश्चम्पकामिश्च तिन्त्रिण्यामलकद्रुमैः॥ (३५)

35. புன்னாகம், சம்பகம், அசோகம், பனை, கூந்தல், ஸாலம், மதூகம், புளி, நெலலி முதலான மரஙகளாலும்,

कदलीनारिकेलाम्रपनसैः पूगदाडिमैः ।
नानानारङ्गजम्बीरबदरीसहकारिभिः ॥ (३६)

36. வாழை, தென்னை, மா, பலா, பாக்கு, மாதுளை, பலவகையான ஆரஞ்சு, எலுமிச்சை, இலந்தை முதலிய மரஙகளாலும் அவற்றின் இனங்களாலும்,

लवङ्गद्रुमखर्जूरजातिकादिफलद्रुमैः ।
अन्यैश्च विविधैः वृक्षैः फलपुष्पादिसन्ततैः ॥ (३७)

37. லவங்கச் செடிகள், பேரீச்சை, ஜாதிக்காய் முதலிய வ்ருக்ஷஙகளாலும், மேலும் பலவகையான புஷ்பஙகள், பழங்கள் தரக்கூடிய (நிரம்பிய) வ்ருக்ஷ விசேஷங்களாலும்,

तिप्पिलेलानागवल्लीमरीचीलतिकादिभिः ।
ओषधीभिश्च दिव्याभिः नानाशाखादिशोभितैः ॥ (३८)

38. திப்பிலி, ஏலம், வெற்றிலை, மிளகு முதலான ஒஷதிகள் நிரமபிய கொடிகளாலும, திவ்யமான காய்கறி வகைகளால் ஶோபிதமாயும்,

जातीकुरजकस्तूरीनानामल्लयादि सद्रुमैः ।
वासिताखिलदिग्व्योमदेशान्तरतलानि च ॥ (३९)

39. ஜாதி, குரஜம் (வாடாமல்லி) கஸ்தூரி மற்றும் பலவகையான மல்லிகை முதலான கொடிகளால் வாஸனை நிரம்பிய திசைகளனைத்தையும், ஆகாஶம் மற்றும் தேஶாந்திர ப்ரதேஶஙகளை உடையதாயும்,

सम्पूर्णसलिलस्निग्धवापीकूपसरोवरैः ।
विस्तारपद्मिनीभिश्च शोभितानि समन्ततः ॥ (४०)

40. தண்ணீர் நிரமபிய அழகிய வாபிகள், கிணறுகள், ஏரிகள், அகனற தாமரைக் குளஙகளாலும நிரம்பி, எஙகிலும் ஶோபையை உடையதும்,

मनोहरणभृङ्गाना व्यूहझङ्कारनिस्वनैः।
मुखरीकृत्तोद्यानवदि दिग्प्रान्तेष्वद्भुतानि वै।। (४१)

41. மனதைக் கவரும் வகையில் வண்டுக் கூட்டங்களின ரீங்கார த்வனியால் எதிரொலிக்கும உத்யானவனஙகளையும, திசைகளையும அத்புதமாகச் செய்கிறதும்,

हंसकरण्डचक्रादि नानाजडखगस्वनै।
मयूरशारिककीरकपोतानां च निस्वनै.।। (४२)

42. ஹம்ஸம், வாத்து வகைகள், சக்ரவாக பக்ஷிகள் முதலியவற்றினுடையவும், மயில், ஶாரிகா, கிளி, புறா முதலிய பறவைகளின் மதுர ஸ்வரஙகளாலும,

स्फटिकैः कृत्तवप्रादिंदिव्यद्वारैश्शुभानि च।
सौधचत्वरवेदीभि मण्डपादिगृहैश्शुभै।। (४३)

43. ஸ்படிகஙகளால் செய்யப்படட சுவாகளையும, திவ்ய வாசற்படிகளால் அழகாக உள்ளதும, வெள்ளையடித்து ஶுத்தம் செய்யப்பட்ட நான்கு கோணஙகளையுடைய யாக மேடைகளையுடையதும், அழகான மணடபஙகளையுடைய மங்களகரமான வீடுகளாலும்,

शोभितानि च रम्याणि महाश्चर्यकराणि च।
नन्दनद्रुमसस्पर्धि अटवीशिखराणि च।। (४४)

44. ஶோபையுடன் கூடிய அழகான ஆச்சர்யம் தரக்கூடிய மனதைக் களிப்படையச் செய்கிற வ்ருக்ஷக் கூட்டஙகள் நிரம்பிய காடகஙளையும், மலைச் சிகரங்களையும்,

कुबेरेन्द्रवनश्रीहृत्कान्तिकान्तानि सर्वतः।
सुशीतमन्दपवनचरता सुखदानि च।। (४५)

45. குபேரனுடையவும், இந்திரனுடையவும் (உத்யான) வனம் போல் லக்ஷ்மீகரமான ஶோபையை எல்லா பக்கங்களிலும் உடையதும், குளிர்ச்சியுடன் மெதுவாக வீசுகிற காற்றின் ஸஞ்சாரத்தால் ஸுகமளிப்பதும்

समन्तात् कौतुकादत्र दिव्योद्यानवनानि च।
पश्यन्नेवाऽथ लक्ष्मीशो पुरमध्यगतो मुने॥ (४६)

46. எல்லா இடங்களிலும் ஸந்தோஷம் நிரம்பியுள்ள இங்கு திவ்யமான உத்யான வனங்களையும் பார்த்துக் கொண்டு லக்ஷ்மீ காந்தனான ஶ்ரீமந்நாராயணன் நகரத்தின் மத்தியில் சென்றார்.

तस्य दिव्यालयस्यास्य चतुर्द्वारेषु नारद।
तेषु प्राक् पश्चिमद्वारे मुख्ये मुख्यं तयोर्द्वयोः॥ (४७)

47. அந்த திவ்யமான ஆலயத்தில் நான்கு வாசல்கள் உள்ளன. அவற்றின் கிழக்கு, மேற்கு வாசல்கள் முக்கியமானவை. இந்த இரண்டிலும்,

पश्चिमद्वारमत्यन्तश्रेष्ठन्तन्नगरीमुखम्।
सर्वानन्दकरं हृद्यं सदाऽभूज्जनसङ्कुलम्॥ (४८)

48. மேற்குத் திசையில் நகரத்தை நோக்கி உள்ள வாசல் மிகவும் ஶ்ரேஷ்டமானது. மனதைக் கவரக்கூடியதாகவும் எப்போதும் ஜனக்கூட்டம் நிரம்பியதாகவும், மகிழ்ச்சியைத் தரக்கூடியதாகவும் இருந்தது.

तदारभ्याऽयता हृद्या विस्तारास्सुमनोहराः।
वीथीः प्रकल्पयित्वादौ शुध्दजूर्विविधा मुने॥ (४९)

49. அதிலிருந்து தொடங்கி நீண்ட, மனதைக் கவரக்கூடிய விஸ்தாரமான, மிக அழகான, பழமை வாய்ந்த பல்வகையான வீதிகளை எற்படுத்தி, முதலில்,

श्रीवैष्णवादि-विप्राणां क्षत्रियाणा ततः परम्।
वैश्यानां विविधानां तु शूद्रादीनां पृथक् पृथक्॥ (५०)

**50.** ஸ்ரீ வைஷ்ணவர் முதலானன அந்தணர்களுக்கும், மேலும் அரச பரம்பரையினருக்கும், பலவகைப்பட்ட வணிகருக்கும், நான்காவது வர்ணத்தவருக்கும் ஆகிய சமூஹத்தாருக்கு (அமைக்கப்பட்ட)

नाना-रत्न-चयैश्श्लाध्यैः दारुभिः सुदृढाऽऽयतैः।
राजतैः पृथु-सच्चित्र-गम्भीर-द्वार-वेदिभिः ॥ (५१)

**51.** பலவகையான மிக உயர்ந்த ரத்னங்களாலும், நல்ல பலம பொருந்திய மரங்களாலும், அகலமான, சித்திரங்கள் நிறைந்த கம்பிரமான வாசல்களாலும்,

विचित्र-स्तम्भ-संयुक्त-चैत्य-चत्वर-वेदिभिः।
हर्म्य-प्रासाद-सौधादि-चन्द्रशाला-गृहैश्शुभैः ॥ (५२)

**52.** விசித்ரமான ஸ்தம்பங்களுடன் இணைந்த கோயிலின் நாற்கோண யாக சாலைகளாலும் மேல்மெத்தையுடன் கூடின மாளிகையும், வெள்ளையடித்து ஶுத்தமாக்கப்பட்ட மாடியறைகளையுடைய மங்களகரமான வீடுகளாலும்,

गर्भागारैः स्त्री-निवासैरन्तःपुर-गृहैरपि।
अवरोधैररिष्टैश्च उपकार्यादि-वेश्मभिः ॥ (५३)

**53.** உள் அறைகளாலும், (கருவறை) ஸ்த்ரீகள் வஸிக்கக் கூடிய அந்தப்புரம் உள்ள வீடுகளாலும், ஶுத்தமான ராஜஸ்த்ரீகள் வசிக்கும் இடங்களாலும், அரண்மனைகளாலும்,

सर्वतो-भद्र-संहृद्यैः गवाक्षाणां च पङ्क्तिभिः।
देहलीभिस्सुकूटैश्च चत्वरैश्च सुकुट्टिमैः ॥ (५४)

**54.** நான்கு பக்கம் வாசலுள்ளவையும், மனோஹரமானவையும் ஜன்னல்களின் வரிசைகளையுடையதாயும், வாசற்படி, ரேழி, திண்ணைகளை உடையதாயும், நாற்கோண யாக சாலைகளை உடையதாயும், அழகான கற்கள் பதித்த தரைகளையுடையவையாயும்

जनाश्रयैर्मठस्सत्रैः मण्टपैर्विविधैरपि।
चतुश्शाला-गृहैश्शिल्प-शालाभिश्च प्रपादिभिः ॥ (५५)

55. ஜனங்களால் ஆச்ரயிக்கத்தக்க, பலவகையான மண்டபங்களையுடைய யாகசாலைகளாலும், நாற்சந்தியிலுள்ள உப்பரிகைகளாலும், சிற்பசாலைகளாலும், தண்ணீர் பந்தல்களாலும்,

आपणैरति-विस्तारैर्विपणीभिर्मनोहरैः।
आभीरपल्लिभिर्हृद्यैः शबरादिगृहैरपि॥ (५६)

56. அதிவிஸ்தாரமான சந்தைகளாலும், கவர்ச்சியான கடைகளாலும், ஆயர்பாடிகளாலும், மலைவாஸிகளின் க்ருஹங்களாலும்,

विहार-वाटैर्विविधैश्शृङ्गाटक-सुमण्टपैः।
मदिरादि-गृहैर्हृद्यैस्तन्तु-वायादि-वेश्मभिः॥ (५७)

57. பலவகையில் மனதைக் கவரும் சோலைகளாலும், நாற்சந்தி மண்டபங்களாலும், மனதை மயக்கும் க்ருஹங்களாலும், நெசவாளிகள், தையற்கலைஞர்களின் கடைகளாலும்,

याग-शाला-पाक-शाला-वाजि-शालाभिरद्भुतम्।
गज-वाहन-शालाभिः बहिर्द्वारैर्मनोहरैः॥ (५८)

58. யாகசாலை, சமையற்கூடம், அத்புதமான குதிரை சாலைகள், யானைன மற்றும் வாஹன சாலைகளுடன், மனோஹரமான வெளிவாசல்களை உடையனவாயும்,

एतदादिभिरत्यन्त-शोभितं सुमनोहरम्। एवमा
सन्तान-सम्पदाद्यष्ट-दिव्यैश्वर्यप्रदं सदा॥ (५९)

59. இவற்றால் அத்யந்தம் ஶோபையுயடையதாயும், மனோஹரமானதாயும், ஸந்தானம், ஸம்பத்து என்கிற திவ்யமான அஷ்ட ஐச்வர்யஙகளை எப்போதும் கொடுப்பதும்,

धर्मार्थ-काम-मोक्षादि-चतुर्विध-फल-प्रदम्।
सर्वाभीष्ट-प्रदं हृद्यं साक्षादिन्द्र-पुरोपमम्॥ (६०)

60. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு வித புருஷார்த்த பலன்களை அளிப்பதும், ஸர்வாபீஷ்டங்களையும் அளிப்பதும், மனோஹரமானதும் ஸாக்ஷாத் இந்த்ரபுரிக்கு ஸமமானதுமான,

लक्ष्म्या सह महाहर्षात् पश्यन् सन् स्वपुरं हरिः।
स्थापितुं वैष्णवादींश्च चतुर्वर्णान् मनो दधे॥ (६१)

61. தன்னுடைய நகரத்தை மஹாலக்ஷ்மியுடன் கூட மிகவும் ஸந்தோஷத்துடன் ஸ்ரீஹரி பார்த்துக் கொண்டு (அதில்) ஸ்ரீவைஷ்ணவர்களையும், மற்றவர்களையும் நிலை பெற்றிருக்கத் திருவுள்ளம் பற்றினார்.

नित्यं स्वाराधनार्थाय श्वेत-द्वीपान् समागतान्।
त्रिसाहस्रान् द्विज-श्रेष्ठान् श्रीवैष्णव-वरान् मुनीन्॥ (६२)

62. எப்போதும் தன்னுடைய நித்ய ஆராதனத்துக்காக ச்வேத த்வீபத்தை அடைந்திருக்கிற ப்ராமண ச்ரேஷ்டர்களும், ஸ்ரீ வைஷ்ணவர்களும், முனிவர்களுமான மூவாயிரம் பேரை,

स्थापयित्वा यथायोग्यं भवनेषु महत्सु च।
क्षत्रियादीन् ततस्सर्वान् स्थापयित्वा समन्तत.॥ (६३)

63. அவரவர் தகுதிக்கேற்ற வகையில் மஹத்தான மாளிகைகளில் ஸ்தாபித்து, அதன் பிறகு க்ஷத்ரியர்களனைவரையும் நகரம் முழுவதும் ஸ்தாபித்து,

सन्तान-सम्पत्-सुयुक्ताः सर्व-विद्या-विशारदाः।
भवन्त्विति त्वनुगृह्य श्रिया सार्धं जगत्पतिः॥ (६४)

64. குழந்தைப்பேறு உடையவர்களாயும், கல்விகள் எல்லாவற்றிலும் சிறந்தவர்களாயும் இருக்கட்டும் என்று அநுக்ரஹித்து ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் கூடினவராக,

अथाऽस्मदादि-देवैश्च दिक्पालैश्च समावृतः।
निज-दिव्यालयं हृद्यं विश्वकर्म-विनिर्मितम्॥ (६५)

65. எங்களைப் போன்ற தேவர்களாலும், அஷ்ட திக்பாலர்களும் சூழ விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்ட மனோஹரமான தனது திவ்ய ஆலயத்தில்

प्रविश्य च सभाः हृद्यास्सर्व-रत्नमयोज्ज्वला।
प्राकर-मण्टपादींश्च पुण्या पुष्करिणीमपि॥ (६६)

66. ப்ரவேசித்து, பலவகை ரத்னங்களால் ஜாஜ்வல்யமாக இருக்கிற, மனதைக் கவரும்படியான ஸபா மண்டபத்தையும், ப்ராகார மண்டபங்களையும், புண்யமான புஷ்கரிணியையும்,

गोपुरादीन् समालोक्य मुमुदे भगवान्मुने।
तदाद्यनुग्रहाद्विष्णोः महालक्ष्म्याः कटाक्षतः॥ (६७)

67. கோபுரங்களையும், பார்த்து, பகவான் மிகவும ஸந்தோஷமடைந்தார். அப்போது மஹாவிஷ்ணுவின் அநுக்ரஹத்தாலும், ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கடாக்ஷத்தாலும,

सर्व सुख-वर चासीत् हृष्ट-पुष्ट-जनाकुलम्।
चतुर्वेदाश्चतुर्दिव्य-गोपुराण्युन्नतानि च॥ (६८

68. பராக்ரமமஸாலிகளாயும், ஸுகவாஸிகளாயும் உள்ள ஜனங்களால நிறைந்து, எல்லாம் ச்ரேஷ்டமானதாக இருந்தது. நான்கு வேதஙகளாக் நான்கு கோபுரங்களும் மிக உயர்ந்தும்,

विश्वकर्म-कृतान्यासन् उपवेदाश्चतुर्मुखम्।
विस्तरोन्नत-सच्चित्र-किरीट-नवमे मुने॥ (६९)

69. நான்கு உபவேதங்களும், நான்கு வாசல்களாகவும் விச்வகர்மாவால் செய்யப்பட்டிருந்தன. ஒன்பதாவது நிலையில் கிரீடம் போன்று சித்ரங்களுடன் விஸ்தாரமாயும் உன்னதமாயும்,

गोपुराणि विराजन्ते बहुदूरं चतुर्मुखम्।
अष्टादश च सूत्राणि स्मृतयो अष्टादश-द्वयम्॥ (७०)

70. நான்கு முகங்களை (பக்கங்களை) உடையதாக கோபுரங்கள் வெகுதூரம் வரை ஒளிர்கின்றன. பதினெட்டுவகை ஸூத்ரங்கள், முப்பத்தாறு வகை ஸ்ம்ருதிகள்,

एकैकस्य च तेष्वासन् नव-द्वाराणि वै मुने।
पञ्च-विशति-तत्वानि त्रिगुणैरद्भुतानि च॥ (७१)

71. அவற்றில் ஒவ்வொன்றுக்கும ஒன்பது த்வாரஙகள் இருந்தன இருபத்தைந்து வகை தத்வஙகளும், மூன்று வகை குணஙகளால அத்புதமானவையும்

नव-रत्नमया ह्यासन् प्राकारास्सौम्य-दर्शन.।
षडङ्गानि च षट्-द्वाराण्यायतान्युन्नतानि च॥ (७२)

72. ப்ரகாரங்கள் அழகாகவும், கண்களைக் கவரக்கூடியனவாயும் நவரத்ன மயஙகளாக இருந்தன. ஆறு அஙகஙகளும் ஆறுவாயிற்படிகளாக உன்னதமாக (உயரமாக)கவும், நீண்டதாயும்,

षट्-दर्शनानि तेषां वै षट्(-)क्वाटानि नारद।
तिस्रो व्याहृतयस्तत्र मण्टपोपरि मण्टपम्॥ (७३)

73. அவற்றின் கதவுகளாக ஆறு தர்சனங்களும், பூராதி ஸப்த வ்யாஹ்ருதிகள் மூன்று மடஙகாக மண்டபத்தின் மேல் மண்டபஙகளாகவும்,

एकैकस्य क्रतोरेक एकस्तम्भ महोन्नतम्।
स्थापितत्वाच्च तत्स्तम्भमण्टप नातिकीर्तितम्॥ (७४)

74. ஒவ்வொரு மண்டபத்திலும் மஹோன்னதமான ஒவ்வொரு ஸ்தம்பமும் ஸ்தாபிக்கப்பட்டதால் அந்த ஸ்தம்ப மண்டபங்கள் அதிக புகழ் வாய்ந்ததாக இல்லை.

विष्णोस्सहस्र-नामाऽऽसीत् सहस्र-स्तम्भ-मण्टपम्।
उपाख्यानान्यनन्तानि पुण्डरीक-सरोऽभितः॥ (७५)

75. ஆயிரக்கால் மணடபம் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஆயிரம நாமாக்களை உடையதாக இருந்தது. அநேக சரித்ரஙகளைக் கொண்டாகத் தாமரைத் தடாகம் போல் தோன்றியது

वज्र-वैदूर्य-गोमेद-प्रवाळ-स्फटिकादिभिः।
मणिभिः कलितान्याशु सोपानानि समन्ततः॥ (७६)

76. வஜ்ரம், வைடூர்யம, கோமேதகம், பவளம், ஸ்படிகம முதலான மணிகளாலே ஆக்கப்பட்ட படிக்கட்டுகளை ஆலயம முழுவதும உடையதாக இருந்தது.

निर्मलानि च हृद्यानि मण्टपैरावृतानि च।
सज्जनैश्च समृध्दानि सलिलानि मुहुर्मुहुः॥ (७७)

77. நிர்மலமாயும், மனோஹரமாயுள்ள மண்டபங்கள் சூழ்ந்த (அந்த ஆலயம் (அ) திவ்யதேசம்) நீர் நிலைகள் நிரம்பியும், அநேகமாக ஸத் ஜனஙகள் நிரம்பியதாயும் இருந்தது.

पश्यन्नथ महाहर्षात् मया देवैस्सह प्रभुः।
· प्रविश्यान्तस्सभा हृद्याः पश्यन् सन् मुमुदे हरि.॥ (७८

78. ப்ரபுவான ஸ்ரீஹரி என்னோடும், மற்ற தேவர்களுடனும், மிக்க ஸந்தோஷத்தோடு பார்த்துக் கொண்டே, மனோஹரமான ஸபாவின் உள்ளே ப்ரவேசித்து, அங்குள்ள காக்ஷிகளையும் கண்டு மிகவும் ஸந்தோஷப்பட்டார்.

आदौ रजत-वृन्दैश्च मूल-भित्ति-महादृढम्।
तदुपर्यग्र-पर्यन्तं स्वर्ण-भित्तिर्मनोहरम्॥ (७९)

79. முதலில் அடிச்சுவர் (அஸ்திவாரம்) வெள்ளிப் பாளஙகளால் அதிக பலமானதாயும், அதன் மேல் முனை வரை தங்கத்தினால் ஆன சுவர், மிக்க மனோஹரமாயும் இருந்தது.

तन्मध्ये नव-रत्नौघ-चित्र-पंक्ति-विराजितम्।
चित्र-माणिक्य-संराजत् नासा-पार्श्व-शिलोज्वलम्॥ (८०)

80. அதன் நடுவே நவரத்னஙகளால் இழைக்கப்பட்ட சித்ரவரிசைகள் விளங்கின. சித்ரஙகளில் உள்ள உருவஙகளின் மூக்கின் இரு பக்கங்களிலும் மாணிக்க மணிகள் ஜ்வலித்தன.

चित्र-प्रवाळ-रत्नैश्च मुख-भाग-सुशोभितम्। पश्शै
गम्भीर-सुखदुं श्रीमत्-पुर-द्वारं मनोहरम्॥ (८१) ?

81. சித்ரஙகளின் முகத்தோற்றங்கள் பவளஙகளால் ஶோபையுள்ளதாயும் உள்ளன. இப்படிப் பட்ட கம்பீரமானதும், ஸுகத்தைத் தரக்கூடியதுமான சித்ரஙகளையுடைய வாசற்படிகள மிகவும் மனோஹரமாயிருந்தன.

भक्ति-न्यस्त-सुचित्राढ्य-वज्रैक-फलक तत.।
बहु-चित्रेन्द्र-माणिक्य-तुला-व्रात-विराजिता ॥(८२)

82. பக்திபாவம் நிறைந்த சித்ரஙகளை உடைய வஜ்ர பலகைகளும் அநே சித்ரங்கள் இந்த்ரநீல, மாணிக்கக் கற்களால், ஐப்பசி மாத ராசியில் மேகங்களைப் போல ஜ்வலிக்கின்றன.

चित्रकाञ्चनपट्टाढ्यमूलाग्रतलशोभिता.।
चन्द्रकान्तशिलास्तम्भपङ्क्तयस्समलङ्कृताः॥(८३)

83. ஸ்வர்ணத்தால் ஆன சித்ரங்கள் உடைய தள வரிசைக்கற்களால் தரை ப்ரதேஶஙகளும், மேல் பாகஙகளும் ஶோபிக்கின்றன. சந்த்ரகாந்த கற்களாலான சிலைகளை உடைய ஸ்தம்ப வரிசைகள் அலங்கரிக்கின்றன.

अथ गोमेदकखण्डैश्च वळभ्यावलयः कृताः।
ततो वैदूर्यफलकः चादना हि निरन्तरम्॥ (८४)

84. கோமேதக் துண்டுகளால் ஆலயத்தின் உச்சிப் பகுதி வளையங்கள் செய்யப்பட்டன. நிரந்தரமாக வைடூர்ய பலகை கூரைகள் (மறைப்புகள்) பதிக்கப்பெற்றுள்ளன.

सर्वोर्ध्वं नवरत्नौघैः खचितास्स्वर्णपट्टक.।
तन्मध्ये दिव्यमाणिक्यकुम्भाः पञ्च सुभास्वराः॥(८५)

85. எல்லாவற்றுக்கும் மேலே நவரத்னஙகள் இழைககபபட்ட ஸ்வர்ணத்தகடுகள் உள்ளன. அதன் நடுவே திவய மாணிக்கங்களாலான ஐந்து கலசஙகள் ஒளி வீசுகின்றன.

अभितस्वर्णभित्तेस्तु मध्ये मध्ये सकृत् शुभैः।
दिव्यमाणिक्यचित्रौघैर्बहुदूरविराजिता॥ (८६)

86 ஸ்வர்ணத்தாலான சுவர்களின் நான்கு பக்கஙகளிலும, நடுவில அஙகஙகே திவ்ய மாணிக்க கற்கள் பதித்த சித்ரஙகளாலே வெகு தூரம் வரை ஒளி வீசுகின்றன.

मुक्ताप्रवालसराजदद्वारतोरणपङ्क्तिभिः।

வாசற்படியிலுள்ள தோரண வரிசைகள், முத்துக்களாலும், பவளங்களாலும் ஜ்வலிக்கின்றன.

चित्रवज्रकपाटाभ्या सार्गलं संविराजिता।
तद्बध्ददिव्यघण्टौघनाळानादितदिक् तया।। (८७)

87. சித்ரங்கள், இழைக்கப்பட்ட வஜ்ரம் போன்ற கதவுகளுடனும், தாழ்பாள்களுடனும் ஒளி வீசுகின்றன. அதில் கட்டப்பட்டுள்ள திவ்யமான மணிகளின் நாக்கினால் எழுப்பப்பட்டுள்ள ஓசைகள் எல்லா திசைகளிலும் ஒலிக்கின்றன.

नीलरत्नकपाटैश्च गवाक्षैरुभशोभिता।
शुद्धस्फटिकवज्रादिमणिसङ्घैः प्रकल्पिता।। (८८)

88. ஜன்னல்கள் நீலரத்னமணிகளால் ஶோபிக்கின்றன. கதவுகள் ஶுத்தமான ஸ்படிகம், வைரம் போன்ற மணிகளின் சரங்களால் செய்யப்பட்டுள்ளன.

सुस्निग्धा सविराजन्ती सोपाना सकुट्टिमा।
द्वारपार्श्वद्वयो(:)राजत् सुवर्णकदळीद्वया।। (८९)

89. வளைந்த படிக்கட்டுகள் அழகாகக் காணப்படுகின்றன. வாசலின இரு பக்கங்களிலும் தங்கமயமான இரண்டு வாழை மரங்கள் ப்ரகாஶிக்கின்றன.

कपोतपालिकाभिश्च राजिता रत्नशोभिता।
अस्मदादिमलोकना महानन्दप्रदायिनी।। (९०)

90. புறாக்களால் பாதுகாக்கப்படுகின்ற மண்டபங்கள் ரதனமயமாகச் ஶோபிக்கின்றன. அவற்றைக் காண்கிறவர்களுக்கு ஆனந்தத்தை அளிக்கின்றன.

मदिन्द्रयक्षराट्धर्मवरुणादिसभायिकः।
सभाकाद्विच्च तन्मध्ये चित्रस्तम्भविराजितम्।। (९१)

91. நானும், இந்திரனும், யக்ஷர்தலைவனும், தர்மராஜனும் வருணன் முதலானோரும் ஸபாஸதர்களாக இருந்தோம். ஸபாவின் நடுவில் சித்ரங்கள் நிறைந்த ஒரு ஸ்தம்பமும் ப்ரகாஶமுள்ளதாக இருந்தது.

नानालङ्कारसंयुक्तं नानाशृङ्गारशोभितम्।
पश्यतां सर्वलोकनां दृष्टिचित्तापहारि च॥ (९२)

92. அநேக அலங்காரங்களுடனும், பலவகையான சிருங்கார ரஸம் நிரம்பியும் எல்லோரும் பார்க்கக் கூடியதுமான கண்களையும் மனஸையும் ஆகர்ஷிக்க கூடியதாக இருந்தது.

वज्रवैदूर्यगोमेदपुष्परागोज्वलं महत्।
चित्रसचित्रयुक्तत्वात् चित्रकूटमिति स्मृतम्॥ (९३)

93. வைரம், வைடூர்யம், கோமேதகம், புஷ்பராகம முதலியவற்றால் மிக அதிகமாக ஒளி வீசுகின்ற சித்ரங்களும், சித்ரங்களில் காணப்படும் விசித்ரங்களும் நிறைய இருந்ததால் சித்ர கூடம் என ப்ரஸித்தி பெற்றது.

तन्मध्ये दिव्यरत्नौघराजितं मूलमस्तकम्।
अखिलोपनिषद्रूप दर्शनात् पापनाशकम्॥ (९४)

94. அதன் நடுவில் திவ்ய ரத்னங்களால் ஒளி வீசுகிற முக்கியமான ஒருமேடை உள்ளது. அனைத்து உபநிஷத்துக்களின் உருவமுடையதாயும், பார்த்த மாத்திரத்திலேயே பாபங்களைப் போக்குவதாயும் உள்ளது.

पञ्चभूतात्मकैः पञ्चरत्नकुम्भैर्विराजितम्।
अष्टाक्षराख्यसंराजत् रत्नसोपानसंयुतम्॥ (९५)

95. நிலம், நீர், காற்று நெருப்பு, ஆகாயம் என்கிற பஞ்சபூதஸ்வரூபமாக பஞ்ச (ஐந்து) ரத்னங்களாலான கலசங்களால ப்ரகாயமுடையதாயும, அஷ்டாக்ஷரங்களால் ஒளி வீசுகிற ரத்னமயமான படிக்கட்டுகளுடையதாயும்,

दिव्योन्नतसुविस्तारश्रीमहामणिमण्टपम्।
सात्विकाख्य महापुण्यं विमान लोकविश्रुतम्॥ (९६)

96. திவ்யமானதும், உயரமானதும, ஸாத்வீகமானதும, புண்யமானதும், லோகத்தாரால் பாராட்டுதலைப் பெற்றதுமான விமானத்தையும்,

एतान् सर्वान् समालोक्य महाहर्षयुतो हरिः।
अस्मदाद्यमराणां तु मध्ये गम्भीरमब्रवीत्॥ (९७)

97. இவையெல்லாவற்றையும் பார்த்து ஸ்ரீஹரி மிக்க ஸந்தோஷமுடையவராக எங்கள் முதலான தேவர்களின் மத்தியில் கம்பீரமாக சொல்லத் தொடங்கினார்.

श्रीभगवान् : सर्वं रत्नमयत्वाच्च लोके रत्नसभेति च।
कनकौघमयत्वाच्च कनकख्यसभेति च॥ (९८)

98. பகவான் கூறுகிறார் - இந்த ஸபையில் எல்லாம் ரத்னமயமாக இருப்பதால் லோகத்தில் இது ரத்ன ஸபை என்றும், ஸ்வர்ணமயமாக இருப்பதால் கனக ஸபை என்பதாயும்,

दिव्यरत्नकृत्तोद्भ्राजत् वाजित्रोश्चित्रशोभितात्।
चित्रकूटमिति क्षित्यां मत्कृता नाम नारद॥ (९९)

99. நாரதரே ! திவ்ய ரத்நங்களால் செய்யப்பட்டு ப்ராகாஸிக்கிற குதிரை முதலான சித்ரங்களால் ஶோபிக்கினற் காரணத்தாலே இப்பூலகில் ,இந்த ஆலயம் சித்ரகூடம் என்பதாக என்னால் பெயரிடப்படுகிறது.

लोक वदन्तु प्रख्यातं तं नाम स्मरणात्परम्।
सर्वपापात् प्रमुञ्चन्त. प्राप्नुवन्ति महत्पदम्॥ (१००)

100. ஜனங்கள் இதனை ப்ரஸித்தமாக சொல்லட்டும். அதன் ச்ரேஷ்டமான பெயரை ஸ்மரிப்பதால், பாபங்களனைத்தினின்றும் விடுபட்டு மிகவுயர்ந்த (வைகுந்த) பதவியை அடைவார்கள்.

इत्युदीर्य हरिःश्रीमान् श्रीभूनीळा सहायवान्।
अस्मदादिसुरैस्सेव्य. प्रविवेश शुभां सभाम्॥ (१०१)

101. இவ்வாறு திருவாய் மலர்ந்தருளி, பகவான், தேவர்களால் ஸேவிக்கத்தகுந்தவராக மங்களகரமான ஸபையில ப்ரவேஸித்தார்.

आदौ कृतयुगे वर्षे विजये जयपूर्वके।
मीनमासे तु पौर्णम्यां इन्दुवारे शुभेऽहनि॥ (१०२)

102. முதலில் க்ருதயுகத்தில் ஜய பூர்வகமான விஜய வருஷத்தில் மீன (பங்குனி) மாஸத்தில் பௌர்ணமி திதியுடன் கூடின திஙகட் கிழமை மங்களகரமான பகல் நேரத்தில்

उत्तरे दिव्यनक्षत्रे वृषभे तु शुभङ्करे।
श्रीमद्रत्नसभामध्ये चित्रकूटे महोन्नते॥ (१०३)

103. திவ்யமான உத்ரபல்குனி நக்ஷத்திரத்தில் ஶுபமான வ்ருஷப லக்னத்தில் மிக உன்னதமான சித்ர கூடத்தின் ரத்ன ஸபையின் நடுவில்

तन्मध्ये कोटिसूर्याभे शेषपर्यङ्कशोभिते।
रत्नसिहासने तुङ्गे श्रीभूनीळासमावृतः॥ (१०४)

104. கோடி ஸூர்ய ப்ரகாஶமுடைய ஆதிஶேஷனின் மடியில ஶோபையுடைய மிக உயர்ந்த ரத்னமயமான ஸிம்ஹாஸனத்தில ஸ்ரீ, பூ நீளா நாச்சிமார்கள் சூழ்ந்து வர

सभापतिर्हरिः श्रीमान् प्राङ्मुखो सस्थितो मुने।
नित्यैर्मुक्तैस्सुरैः मुनिभिः सस्थितस्तदा॥ (१०५)

105. முனிவரே! ஸபாபதியாக ஸ்ரீமந்நாராயணன் கிழக்கு முகமாக, நித்யமுக்தர்களான நித்ய ஸூரிகளுடனும், தேவர்கள், பக்தர்கள், முனிவர்களோடும, அஙகே எழுந்தருளியிருந்தார்.

तदा दुन्दुभयो नेदुः ननृतुश्चाप्सरोगणाः।
गन्धर्वकिन्नरासिसद्धाः गायन्ति च नटन्ति च॥ (१०६)

106. அப்போது அப்ஸரஸ்த்ரீகள் துந்துபி இசைத்தனர். மேலும், நாட்டியமாடினர். கந்தர்வர், கின்னரர், ஸித்தர் முதலானோர் ஆடல் பாடல்களைச் செய்தனர்.

ववर्षुः पुष्पवर्षाणि सिद्धचारणदेवताः।
एवं बहुप्रकरैश्च रराज भगवान् हरिः॥ (१०७)

*107.* *ஸஸித்தர், சாரணர் முதலான தேவர்கள் புஷ்பங்களை வர்ஷித்தனர். இவ்வாறு பல வகையாலும, பகவான் நாராயணன் ப்ரகாஶமுடையவராக இருந்தார்.*

अथाऽहं च देवाश्च राजर्षयो महात्मनः।
तदाज्ञया उपविष्टास्स्मः मुने दिव्यसभात्रये॥ (१०८)

*108.* *முனிவரே ! பிறகு நானும், தேவர்களும், மஹான்களும் பகவானின் ஆஜ்ஞையின் பேரில் திவ்யமான (ரத்ன, கனக, சித்ர) மூன்று ஸபாக்களிலும் உட்கார்ந்து கொண்டோம்*

तदा महात्मनो लोके सभात्र्यवरस्य च।
श्रीमद्ब्रह्मसभेत्येव राजदेव सभेति च॥ (१०९)

*109.* *அப்போது இந்த லோகத்திலுள்ள மஹான்களனைவரும ச்ரேஷ்டமான மூன்று ஸபைகளையும் பார்த்து, இந்த ஸபா ஸ்ரீமத் ப்ரஹ்ம சபாவைப் போன்றே ஒளி வீசுகிறது என்றனர்.*

श्रीविष्णोराज्ञया सोऽपि विश्वकर्मा महामुदा।
नानारत्नमयैर्हृद्यैः सचित्रैस्सहमण्टपैः॥ (११०)

*110.* *ஸ்ரீமஹா விஷ்ணுவின் ஆணைப்படி அந்த விச்வகர்மாவும மிகுந்த ஸந்தோஷத்துடன் மனோஹரமான, ரத்னமயமான சித்ரங்களோடு கூடின மண்டபங்களாலே*

लक्ष्मीगोदाचमूनाथद्वारपालादीना पृथक्।
आलय विविध कृत्वा प्राक्भागेऽथ हरे. पुर.॥ (१११)

*111* *மஹாலக்ஷ்மிக்கும், கோதா தேவிக்கும், ஸேனாதிபதியான விஷ்வக்ஸேனருக்கும, த்வார பாலகர்களுக்கும், தனித்தனியாக ஸந்நிதிகளை பலவகையாக ஏற்படுத்தி, ஆலயத்தின முன்னால ஸ்ரீஹரியின் எதிரில்*

गरुडालयमुद्भ्राजत् ध्वजस्तम्भ सुवर्णकम्।
बलिपीठं महातुङ्गं कृत्वा स्वर्णमयं मुने॥ (११२)

*112* *கருடன் ஸன்னிதி ஏறபடுத்தினார். முனிவரே, ஸ்வர்ண மயமான த்வஜஸ்தம்பத்தையும், மிகப்பெரிய பலி பீடத்தையும ஸ்வர்ணமயமாகச் செய்து,*

तदा रत्नमयं सर्वगोपुरादिसभान्तरम्।
कृत्वा विचित्र विधिवत् चाहितशिल्पराट् बभौ।। (११३)

*113 பிறகு கோபுரங்களனைத்தையும, ஸபையின உடபுறத்தையும் ஆசசாயபபடும வகையில முறைப்படி ரதன மயமாகச் செய்து சிற்பிகளின் அரசனான விச்வகாமா பரகாஶமாக இருந்தார்*

नित्यस्नानादिपानार्थं क्षीराब्धौ निहित पुरा।
आज्ञया गरुडेनाशु समानीतं महाऽमृतम्।। (११४)

*114. பரதி தினம ஸநான பானஙகளுக்காக, முன்னொரு ஸமயம திருப்பாற்கடலில் வைக்கப்பட்டிருந்த திவ்ய ஔஷதமான அமருதம பகவானின் ஆஜ்ஞையைப் பெற்ற கருட பகவானால எடுதது வரப்படடது.*

प्रागुत्तरदिशा सरथे कृपया तत् प्राक्षिपत् हरि ।
तदाद्यमृतकूपस्त्वित्यासीत् ख्यातः क्षितौ मुने।। (११५)

*115. ஸ்ரீஹரி அதைக கருணையுடன வடகிழககு மூலையில ஸ்தாபித்தார். முனிவரே ' அது முதற்கொணடு அநத அமருதமயமான கிணறு புகழுடன் இந்த பூமியில் விளஙகி வருகிறது*

ப்ரம்மாண்ட புராணம் ஐந்தாம் அத்யாயம் நிறைவுற்றது

# ஸ்ரீப்ரம்மாண்ட புராணம்

## ஆறாம் அத்யாயம்

नारदः- पुण्डरीकपुरे तस्मिन् सर्वविद्याधरा बुधा.।
अनन्तास्सन्ति हीति त्वं ब्रूहि किं चतुरानन ।

1. நாரதர் - ப்ரம்ஹ தேவரே, புண்டரீக (சித்ரகூட க்ஷேத்திரத்தில) ஸகல கலைகளையும் கற்ற வித்வான்கள் நிறையபேர் இருக்கின்றனர் என்று தேவரீர் திருவாய் மலர்ந்தீர்கள்

तद्विद्यानामधेयं त्वं ब्रह्मन् तदधिकारिण.।
श्रोतुमिच्छाम्यहं त्वत्त परं कौतूहलं हि मे ।। (२)

2. ப்ரஹ்மதேவரே, தேவரீரிடமிருந்து அந்த வித்யைகளின் நாமாக்களையும், அதனையறிந்து பூர்ண அதிகாரிகளானவர்களையும் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன. மிகுந்த ஆவலுடையவனாயுமிருக்கிறேன்

ब्रह्मा- ऋग्यजुस्सामाथर्वाख्यचतुर्वेदाश्चिरतना ।
गान्धार्वायुर्धनुर्नाट्याख्योपवेदाश्चतुर्मुने ।। (३)

3. ப்ரஹமா - ரிக்வேதம, யஜுர் வேதம், ஸாமவேதம், அதர்வன வேதம என்பதாக மிகப் பழமையான நான்கு வேதஙகள் உள்ளன. இவற்றுடன் காந்தர்வ வித்யா (ஸங்கீதம), ஆயுர்வேதவித்யா (மருத்துவம்), தனுர் (வில) வித்யா, நாட்ய வித்யை முதலான கர்வமடையத் தக்க நான்கு உபவேதஙகளும உள்ளன

निरुक्तं ज्योतिषश्छन्दो शिक्षा व्याकरणं तथा।
कल्पेति षडङ्गानि प्रख्यातानि क्षितौ मुने ।। (४)

4. நிருக்தம, ஜ்யோதிஷம், சந்தஸ், ஸிக்ஷா, வ்யாகரணம, கல்பம, ஆறு (6) வகையான அஙகஙகள் இந்தப் பூமியில் ப்ரஸித்தமாயுள்ளன

छान्दोक्यं कठवललीं च तैत्तिरीयं गारुडं तथा।
वाराहं नारसिंहं च गर्भन्नारायणं तथा ।। (५)

5 சாந்தோக்ய உபநிஷத், கடோபநிஷ வல்லீ, தைத்ரீயம, காருடம், வாராஹம, நாரஸிமஹம், நாராயணோபநிஷத்

बृहदारण्ये शारीरकलिङ्गज्ञानवर्गकः।
शतपथब्राह्मणं च जाबालियाज्ञवल्क्यकः॥ (६)

6. ப்ருஹதாரண்யோபநிஷத்தில் ஜ்ஞானத்தை வ்ருத்தி செயயக கூடிய ஶாரீரக மீமாம்ஸை, லிஙகம், ஶதபத ப்ராஹ்மணம இவற்றையெல்லாம் கற்றறிந்த ஜாபாலி, யாஜ்ஞ வல்க்யர்

ब्रह्मबिन्दुस्तापनीया मौद्गल्या मुण्डकस्तथा।
मैत्रावरुणकालाग्निरुद्रकैवल्य एव च॥ (७)

7. தபோநிதிகளான ப்ரஹ்மபிந்து, மௌத்கல்யர், முணடகா, மைத்ராவருணர், காலாக்னிருத்ரர், கைவல்யர் முதலானவாகளின் ஶாஸ்த்ரஙகளும்,

पारमात्मा च चैशान्यस्सुबालश्चिदगुणालयः।
प्रश्नोऽथर्वशिरश्चैव श्वेतश्वेतर एव च॥ (८)

8. பாரமாத்மிகம், ஈசாவாஸ்யம், ஸத்சித் முதலான குணஙகளை உரைக்கின்ற ஸுபாலம், அதர்வவேதத்தின் முக்யமான ப்ரச்நோத்தரமான ச்வேதாச்வேதரம் முதலியவையும

आश्वलायनो मन्त्रमुख्यो रामो पुरुष देव च।
द्वात्रिंशोपनिषद्वर्गप्रख्याताऽद्य मुने क्षितौ॥ (९)

9. ஆச்வலாயனம் முதலான முக்ய மந்த்ரஙகளை சொலலக கூடிய முப்பத்திரண்டு வகையான உவநிஷத்துக்கள் இப்போது பூமியில ப்ரஸித்தமாக உள்ளன.

बोधायनापस्तम्बौ च कत्यायनाश्वलायनौ।
भारद्वाजं सत्यसन्धं ग्राह्यायनमतः परम्॥ (१०)

10. போதாயனம், ஆபஸ்தம்பம், காத்யாயனம, ஆச்வலாயனம ஸத்யஸந்தரான பரத்வாஜ முனிவருடையது, பிறகு க்ராஹ்யாயனம்

वैखानसं जैमिनीय्यं मुख्यानीमानि नारद।
सूत्राण्यष्टादशाख्यानि प्रख्यातानि महीतले॥ (११)

11 வைகானஸம, ஜைமிநீயம என்ற இந்த முக்யமான பதினெட்டு வகையான ஸூத்ரங்கள் இப் பூவுலகில் பிரஸித்தமானவை.

वासिष्ठं चैव हारीतं व्यासं पाराशर तथा।
भारद्वाजं काश्यपञ्चेत्वेतानि सात्विकानि च।।(१२)

12. வஸிஷ்டர், ஹரிதர், வ்யாஸர், பராஶரர், பாரத்வாஜர், கச்யபர், இவர்களால் இயற்றப்பட்ட ஸூத்ரங்கள் ஸத்வகுண போதகங்கள்.

वामन याज्ञवल्क्य च त्रैयबन्धाक्षमेव च।
कत्यायन वैष्णवं च राजसानीमानि वै।। (१३)

13. வாமனர், யாஜ்ஞவல்க்யர், த்ரைய்ய பந்து, அக்ஷமுனிவர், காத்யாயனர், வைஷ்ணவர் இவர்களால் இயற்றப்பட்ட ஸூத்ரங்கள் ராஜஸகுண போதகங்கள்.

बार्हस्पत्यं गौतमञ्च सावर्तं यमस्मृति ।
शाखञ्चौशन सूत्राणि तामसानीति नारद।। (१४)

14 ப்ருஹஸ்பதி, கௌதமர், ஸம்வர்த்தர், யமஸ்மருதி, ஶாகர், ஔஶனா இவர்களால் இயற்றப்பட்ட ஸூத்ரங்கள் தாமஸ குண போதங்கள் என்பதாக - நாரதரே நீர் அறிவீராக.

एतान्यष्टादशाख्यानां सूत्राणां मुनिनारद।
चातुर्वर्णैर्नरैर्योगिन् नतां कर्मसु निष्ठिताः।। (१५)

15 நாரத முனிவரே ! இந்த பதினெட்டு வகை ஸூத்ரங்களும் நான்கு வகையான மனிதர்களால் அநுஷ்டிக்கத்தக்க கர்மாக்களாகும்

श्रीशतातपशाण्डिल्यलिखिताङ्गीरसस्तथा।
पात्रीनसवृहध्दारी सनके गर्ग एव च।। (१६)

16. ஸ்ரீஶதர், ஆதபசாண்டில்யர், ஆங்கிரஸர், ஸநகா, கார்க்யா, இவாகளால் இயற்றப்பட்ட

जाबालवृध्दमनुसत् बार्हस्पत्यसमुद्गलः।
ऋध्दवासिष्ठदाल्भ्यौ च प्राजापत्यञ्च दाक्षकम्।। (१७)

17 ஜாபாலா, வருதத (ஜ்ஞான) ம்ஹு, பருஹஸ்பதி, ஸம்ருதகலா, ருத்த வாஸிஷ்டா, தாலபயா, ப்ரஜாபதி, தாக்ஷகா,

सत्यव्रतञ्च लोकाक्षस्त्वेता भूमौ प्रकीर्तिता ।
अष्टादशोपस्मृतयस्त्विति लोके वदन्ति हि ।। (१८)

18 ஸதயவரதா, லோகாக்ஷர் இவாகளால இயறறபபட பதினெட்டு வகையான உபஸமருதிகள் இபபூவுலகில ப்ரஸித்தமானவை என இவவுலக மககளால சொலலபபடுகினறன

पाद्मपद्मौक्षवळञ्चैव तथा पुष्करवैभवौ ।
वासिष्ट जनकेन्द्रञ्च नळकूबरसात्वतौ ।। (१९)

19. பாதமம, பதமாக்ஷவளம, அதே போனறு புஷகரததின ப்ரஸிததமான வாஸிஷடம, ஜனகேந்தரம, நளகூபரம,

सनत्कुमारविजयभुवन मोहन हि च ।
पारमेश्वरहसौ च भविष्यत्तिलक तथा ।। (२०)

20 மனோஹரமாக, புனை பரஸிததமான ஸநத குமார விஜயம, பவிஷயததிலகமென போறறபபடும பாரமேசவரஹமஸம,

प्रशस्त सच्च देवाना एते पूजा विधिक्रमा ।
अष्टादशागमा ह्येते मुनेऽवैहि पर क्षितौ ।। (२१)

21. இநதப் பதினெட்டு வகையான ஆகமஙகள் தேவர்களின பூஜைவிதி கரமஙகளாக இஙவுலகில போறறததககவையாக அமைநதுளள ா

वैष्णव नारदीय च तथा भागवत शुभम् ।
गारुडञ्च तथा पाद्मं वाराह शुभदर्शने ।। (२२)

22 விஷ்ணு புராணம, நாரத புராணம, ஶுபகரமான பாகவதம கருடபுராணம, நலல மாககம காணபிககும பாத்ம, வராஹ புராணஙகள்

षडैतानि पुराणानि साक्षिकानि शुभानि च ।
ब्रह्माण्ड ब्रह्मवैवर्तं मार्कण्डेय तथैव च ।। (२३)

23. இந்த ஆறு வகை புராணங்கள் ஶுபமான ஸாக்ஷிகளாக விளங்குகின்றன. ப்ரஹ்மாண்டம், ப்ரஹ்மவைவர்த்தம் மார்க்கண்டேயம்,

भविष्यद्वामनं ब्राह्म राजसानि मुने शृणु।
मात्स्यं कूर्म तथा लैंग्यं शैव स्कन्द तथैव च।। (२४)

24. பவிஷ்யத் வாமனம், ப்ராஹ்மம் முதலான ஆறு புராணங்கள் ராஜஸ குண போதகங்களாகும. மத்ஸ்யம், கூர்மம், லிங்கம், சைவம், ஸ்காந்தம,

आग्नेयञ्च षडैतानि तामसानि मुनीश्वर।
इत्येतानि पुराणानि प्रख्यातानि महीतले।। (२५)

25. ஆக்நேயம் என்ற இந்த ஆறு புராணங்கள் தாமஸ குண போதகங்களாகும். இவ்வாறாக இந்தப் புராணங்கள் லோகப்ரஸித்தமாயுள்ளனவாகும்.

वायव्यं भार्गवञ्चैव ब्रह्माण्ड कौशिकं तथा।
पाराशर्यं नारदीय नारसिह्म च कपिलम्।। (२६)

26. வாயவ்யம், பார்கவம், ப்ரஹ்மாண்டம், கௌஶிகம், பாராஶர்யம், நாரதீயம், நாரஸிம்ஹம், காபிலம

वासिष्ठ शिवधर्म च मारीच मानव तथा।
स्कन्द दौर्वासमादित्य वारुण शाम्बर तथा।। (२७)

27 வாஸிஷ்டம், சிவதர்மம, மாரீசம், மாநவம, ஸ்காந்தம, தௌர்வாஸம (துர்வாஸரியற்றியது) ஆதித்யம, வாருணம, சாம்பரம

एतान्युपपुराणानि ह्यष्टादश मुने क्षितौ।।

இவ்வாறு பதினெட்டு உப புராணங்கள் இவ்வுலகில பிரஸித்தமானவை

तर्क्खिलं साख्यञ्च भाट्ट प्राभाकर तथा।
पूर्वमीमासकद्याश्च प्रतिपादकजैमिनिम्।। (२८)

28. தர்க்க ஶாஸ்த்ரம, ஸாங்க்யம்/, பாட்தீபிகா, ப்ராபாகரம, பூர்வமீமாம்ஸா, ஜைமினியால் இயற்றப்பட்டவை.

यत्कारणं तद्विशेषं प्रख्यात गौतमं मतम्।
यद्यत् नैय्यायिकं तद्वै वेदान्तशास्त्रकम्॥ (२६)

29. காரண பூதமான பொருளையே ப்ரதானமாக உடைய கௌதம (தர்ம) ஸூத்ரம், ந்யாய ஶாஸ்த்ரத்தைப் போலவே இருக்கக் கூடிய வேதாந்த ஶாஸ்த்ரங்கள்

एतानि षट् दर्शनानि प्रख्यातानीह नारद।

இந்த தர்சனங்கள் புகழ் வாய்ந்ததாக உள்ளவை.

पाराशर्यञ्च वासिष्ठ विहगेश्वरसहिते।
विष्णुधर्मो भरद्वाजं नारदीय च सहिता॥ (३०)

30. பாராஶர்யம், வாஸிஷ்டம், விஹகேச்வர ஸம்ஹிதா, விஷ்ணுதர்மம், பாரத்வாஜம், நாரத ஸம்ஹிதா

विश्वकर्मा विश्ववेषं सुधासारन्तु जैत्रिकम्।
वास्तुबोधमहातन्त्र माषक चित्रकापिलम्।
कल्पान्त मानुमदवृत्तं विद्यासार बहुश्रुतम्॥ (३१) भ्रा

31. விஸ்வகர்மா, விச்வவேஷம், ஸுதாஸாரம், ஜைத்ரிகம, வாஸ்துபோதமஹாதந்த்ரம், மாஷகம், சித்ரகாபிலம், கல்பாந்தம், மானுமத்வ்ருத்தம், வித்யாஸாரம் இவையெல்லாம் சிற்ப, கட்டிட நூல்களாகும்.

विश्वबोधं महानन्दं शास्त्रबोधं विश्वकश्यपम्।
कालयूपभळमय विशालं मानवं मुहुः॥ (३२)

32. மிகுந்த ஆனந்தமளிக்கிற விச்வபோதம, ஶாஸ்த்ர விஷயஙகளைச் சொல்கிற விச்வகாச்யபம், விஶாலமாக உள்ள மானவம், காலயூபபளம்,

पाराशर्यश्चादसोरं सङ्कीर्णं सामसंस्थितम्।
त्र्यक्षं ब्राह्मं सौरमैन्द्रं वज्रस्पष्टसमानसम्॥ (३३)

33. பாராஶர்யம், சாதஸோரம, கதம்பமாக (பலவிதம) உள்ளதும ஸாம (வேத)த்துடன் கூடிய நூல், த்ரயக்ஷம், ப்ராஹ்மம், ஸௌரம், ஐந்த்ரம், வஜ்ரஸ்பஷ்டஸமானஸம்

एतानि शिल्पशास्त्राणि त्रयस्त्रिंशन्मुने शृणु।
लोकेषु सहिताः श्रेष्ठा भारतादिबन्धाः क्वचित्॥ (३४)

34. முனிவரே ! இவ்வாறாக சிற்ப ஶாஸ்த்ரஙகள் முப்பத்து மூன்று என்று அறிவீராக. உலகத்தில் ச்ரேஷ்டமான ஸம்ஹிதைகள் பாரத தேஶததிலேயே அடஙகியவையாகும்.

हरिश्चन्द्रनळादीनामुपाख्यानानि कुत्रचित्।
हरेर्हरस्य सक्षेत्रमाहात्म्यानि क्वचिन्मुने॥ (३५)

35 ஹரிச்சந்திரன், நளமஹாராஜன் முதலானோரின சரித்திரஙகள் சில இடங்களிலும், ஸ்ரீஹரியினுடையவும, பரமேச்வரனுடையவுமான மஹாத்மயஙகள் சில இடஙகளிலும

श्रीरामायणगीतादिव्याख्यानानि क्वचित्क्वचित्।
विविधानि रहस्यानि भाव्यानीति शुभानि भोः॥ (३६)

36. ஸ்ரீமத்ராமாயணம், ஸ்ரீபகவத்கீதை முதலியவறறின் ஸயாக்யானஙகள் சிலவறறிலும பலவகையான ரஹஸயஙகள் ஶுபத்தை தரக்கூடியவையாக அஙகஙகே அமைந்துளளன

द्राविडश्रीप्रबन्धश्च चतुस्साहस्रिकाभिधा।
यान्यानि भुवि चित्राणि प्रबन्धादीनि वै मुने॥ (३७)

37 நாலாயிரம ஸ்லோகஙகளை (செயயுள்களை) உடைய த்ராவிட வேதமாகிய ப்ரபநதம் முதலானவை இப்புவியில ஆச்சர்யகரமாக உள்ளன.

ब्राह्मणक्षत्रविट्शूद्रमुख्यैर्नित्य यथाक्रमम्।
एतन्मुखा क्षितौ यावत् प्रबन्धास्सन्ति नारद॥ (३८)

38. ப்ராஹமணர், க்ஷத்ரியர், வைச்யா, ஶூத்ரா முதலானவாகளாலே நிதயம முறைப்படி சொலலககூடிய பிரபந்தஙகளும இருக்கின்றன.

स्वस्वजात्यानुसारेण स्वस्वयोग्यानुसारत।
वैष्णवादिद्विजैश्शिष्टै. त्रिमतस्थै पृथक् पृथक्॥ (३९)

39. ஶிஷ்டர்களான வைஷ்ணவர் முதலான ப்ராஹ்மணர்களாலே மூன்று மதத்தாரும் தனித்தனியாக தஙகள் தஙகள் ஜாதிக்குத் தக்கவாறும், தங்கள் தஙகள தகுதிக்கு ஏற்றவகையிலும்

योग्यैरन्यैः क्षत्रियाद्यैः नरैर्ब्राह्मणसेविभिः।
तावच्च पालितानां तु वेदादीनां यथाक्रमम्॥ (४०)

40. மற்றும் தகுதியுள்ள க்ஷத்ரியர்களாலும், ப்ராஹ்மணர்களுக்குத் தொண்டு செய்யும் மனிதர்களாலும், அவர்களாலல் முறைப்படி பரிபாலிக்கப் படுமளவில் வேதங்களுக்கும்,

शास्त्रप्रवन्धसङ्घाना ध्वनिरासीन्महामुने।
समन्ताच्च दिवारात्रं सागरान् स्तम्भयन्निव॥ (४१)

41. ஶாஸ்த்ரம், ப்ரபந்தச் சேர்க்கைகளுக்கும் 'த்வனி' (சப்தம்) இருந்தது. இரவிலும், பகலிலும் முழுவதும் இந்த த்வனி ஸமுத்ரத்தையும் ஸ்தம்பிக்கச் செய்தது.

तेन सर्वा दिशो व्योमतलञ्च मुखरीकृतम्।

அதனால் திஶைகள், ஆகாஶம், பூமி எல்லாம் எதிரொலிக்கப்பட்டது.

वीणावेणुमृदङ्गादितालमङ्गलनिस्वनैः।
नृत्तदासिपदद्वन्द्वमञ्जुमञ्जीरनिस्वनैः। (४२)

42. வீணை, புல்லாங்குழல், ம்ருதங்கம் முதலான மங்கல தாள வாத்யஙகளின் ஶப்தங்களாலும், நாட்யமாடுகின்ற தாஸிகளின் பாதங்களிரண்டிலும் உள்ள சலங்கைகளின் ஶப்தங்களாலும,

नानाविधानां विद्यानां घोषैश्च मुखरीकृतम्।

பலவகையான கல்விமான்களின் கோஷங்களாலும் எதிரொலிக்கப்பட்டன.

तदा तत्क्षेत्रवर्यस्य वायव्ये दिक्तटे स्थिताः।
ताण्डवे विजय ज्ञातुं गोविन्दध्यानतत्परा.॥ (४३)

43 அப்போது அந்த க்ஷேத்திரத்தின் வாயுதிக்கில் இருநதவாகள் நாட்யததில வெற்றி யாருக்கு என்பதை அறிய கோவிந்தராஜப் பெருமான் மீது த்யானத்தில ஆழ்ந்தவர்களாக இருந்தனா.

चिरकलात्तपः कुर्वन् विष्णुमुद्दिश्य शङ्कर ।
तदा वेदादिघोषास्तान् श्रुत्वा सन्त्यज्य तत्तप.॥ (४४)

44. அப்போது வெகு காலமாக மஹாவிஷ்ணுவைக் குறித்து தபஸ செய்து வந்த ஶங்கரபகவான் வேத கோஷங்கள் முதலானவற்றைக் கேட்டும், தபஸ் செய்வதை விட்டு விட்டு,

ततो नानाविधैं हृद्यै द्रुमै पुष्पफलान्वितै ।
कान्तैर्लताभि. कान्ताभिरुद्यानैरिव सवृतम्॥ (४५)

45. பலவகையான மனதைக்கரும் பூக்களும் பழங்களும் நிரம்பிய வ்ருக்ஷங்களாலும், மனைவி போல் அழகான கொடிகளாலும, கணவன போல் தோற்றமளிக்கும் தோட்டங்களால சூழப்பட்டதும்,

हर्म्यप्रासादसौधादिचन्द्रशालाविराजितम्।

வெள்ளையடித்து ஶுத்தமாக்கப்பட்டும், மாடிகளையும், மாடியறைகளையும் உடைய மாளிகைகளால் ஶோபையை உடையதும்,

चतुर्भिर्गोपुरैस्तुङ्गद्वारैस्सुशोभितम्।
नमस्कृत्त्वा महादेवो मुहुर्मुहुरवेक्ष्य तत्॥ (४६)

46. உயரமான வாயிற்புறஙகளுடைய நான்கு கோபுரங்களால் அழகாயிருக்கிற நகரத்தைப் பரமேச்வரன் பார்த்து மீண்டும் மீண்டும் ப்ரணாமஙகளையுமசெய்து,

विचित्रस्तम्भसयुक्तकूटैर्वेदिभिरद्भुतम्।

ஆச்சர்யமான வேலைப்பாடுகள் நிறைந்த ஸ்தம்பக் கூட்டங்களால் அத்யத்புதமாகக் காணப்படுபவையும்

सत्रशालासमूहादिनानाजातिगृहावृतम्।
आपणैस्सर्ववस्त्वोघैः पूरितैस्सविराजितम्॥ (४७)

47. யாகசாலா போன்ற அநேக ஸத்கர்ம கார்யஙகள் செய்யப்படுகிற க்ருஹஙகள் சூழ்ந்ததும், அனைத்துப் பொருடகளும நிரம்பிய கடைவிதிகளால் ஶோபையை உடையதும்

नानाजनाना सङ्घेन सराजितवणिक्पथम्।
तेषा घोषेण महता मुखरीकृत्तदिङ्मुखम्॥ (४८)

48. பலவகையான ஜனங்களின் கூட்டத்தால் கலகலப்பாக உளள வயாபராஸ்தலஙகளையும், அந்த ஜனஙகளின் கூச்சலகளால, இரைச்சலாக உள்ள திக்குகளையும்

पताकध्वजसंराजद्द्वाधीशतसमाकुलम्।
तत्पुरं सर्वमालोक्य नानावाद्यरवान्वितम्॥ (४६)

49. மிகுந்த ஒளி வீசுகிற உயரத்தூக்கிக் கட்டப்படட கொடி கமபஙகளை உடையதும், அநேக வித வாத்யங்களின் ஒலிகளை உடைய அந்த நகரம், முழுவதையும் பார்த்து,

महदाश्चर्ययुक्तस्सन् शास्त्रघोषान्निशम्य च।
संपत्सन्तानसराजदहृष्टपुष्टजनाकुलम्॥ (५०)

50. ஶாஸ்தர விசாரம் செய்கிற விதவானகளின் கோஷஙகளையும கேடடு மிகுந்த ஆசசாயமடைநதவராக பொருட்செல்வமும், மக்கட் செல்வமும் நிரம்பி உடலும, மனனும சந்தோஷித்திருக்கும் ஜனஙகளையும்

मुनिभिः कृतयज्ञादिमन्त्रघोषैश्च पूरितम्।
ततो विवेश सहृष्टो गोपुरावरणादिकम्॥ (५१)

51. முனிவர்களாலே செய்யப்பட்ட மந்த்ர கோஷஙகள் நிரமபிய யாகம் முதலானவறறையும், கோபுரஙகளால் நிரப்பபபடட நகரை ஸந்தோஷத்தோடு சென்றடைந்தார்.

आलयञ्च सरो दिव्य मण्डपांश्च ततस्सभाम्।
सर्व रत्नमय हृद्य विचित्रस्तम्भसंयुतम्॥ (५२)

52 ஆலயத்தையும, அதில உள்ள புஷ்கரிணியையும, திவயமான மணடபஙகளையும், அதில உள்ள 'ஸபா' மண்டபத்தையும, பலவித ரத்னஙகளால் இழைக்கப்பட்டதும், மனோஹரமானதும ஆசசர்யகரமான ஸ்தம்பஙகளுடன் கூடின

चित्रकूटं समालोक्य विश्वकर्मविनिर्मितम् ।
ततस्तन्मध्ये सराजत् कोटिसूर्यसमप्रभम् ॥ (५३)

53 விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்ட சித்ர கூடத்தைக் கண்டு, அதன் நடுவில் கோடி ஸூர்யர்களுக்கு ஸமமான ஒளியுடன் ப்ரகாஶிக்கிறதும்

शेषपर्यङ्कवर्ये श्रीरत्नसिहासनेऽद्भुते ।
श्रीभूनीळासमेतशङ्खचक्रगदाधरम् ॥ (५४)

54. அத்புதமான ரத்நமயமான ஸிம்மாஸனத்தில ஆதிஶேஷனின மடியில ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவியருடன் கூட ஶஙகம், சக்ரம, கதை முதலான ஆயுதங்களை தரித்தும்

किरीटहारकेयूरसर्वाभरणभूषितम् ।
पीताम्बरधर देव कोटिकन्दर्पसुन्दरम् ॥ (५५)

55. கிரீடம், வனமாலை, கங்கணம் முதலான எல்லா ஆபரணஙகளை அணிந்தவரும், கோடி மன்மதர்களுக்கு ஸமமான அழகுடன், பீதாம்பரம் உடுத்திய தேவனை,

नित्यमुक्तैस्सदा सेव्य देवेन्द्रादिभिरर्चितम् ।
सर्वमङ्गलदेवेशं सर्वाभीष्टफलप्रदम् ॥ (५६)

56. நித்ய முக்தர்களாலே ஸதாஸர்வகாலமும ஸேவிக்கப்படுபவரும் தேவேந்த்ராதிகளால் ஆராதிக்கப்படுபவரும, ஸகல அபீஷ்டஙகளைத் தருபவரும், ஸர்வ மஙகளஙகளும நிறைந்தவரான தேவாதி தேவனான ஸ்ரீமந் நாராயணனை

नत्वा स्मृत्वा महादेवो मुहुर्मुहुरवेक्ष्य तम् ।
आनन्दताण्डव कुर्वन् श्रीशसाम्राज्यविस्मित ॥ (५७)

57 பரமேசவரன அடிககடி பாாத்தும, களிததும, ஸேவிததும தயானித்தும, மஹாலக்ஷமி அனுகரஹததுடன ஆச்சாயமடை நதும ஆனந்த தாணடவம் செயது களிப்படை.நதார்.

.शङ्करः- देवदेवेश सर्वात्मन् पुरा काळ्याश्च मे मिथ ।
ताण्डवार्थे महान्वादस्त्वासीत् कि वेत्सि त प्रभो ।। (५८)

58. சஙகரா -தேவாதிதேவனே 'எலலாமறிநதவனே' முன்னொரு ஸமயம எனககும, காளி தேவிக்கும பரஸபரம நாட யமாடுவதில பெரிய சர்ச்சை ஏறபட்டது இது உ மக்கு தெரியுமலலவா'

तस्मात्कुरु समर्थ मा सभाया तव सन्निधौ।
एतन्निमित्तमुद्दिश्य शिरसा प्रार्थयन्सदा ।। (५९)

59 ஆகையால தேவரீர் என்னை தஙகள் ஸனனிதியாகிய ஸபையில நாடயத்தில சிறந்தவனாகச செயவீராக எபபோதும் தேவரீரைத் தலைவணஙகி, இதன் காரணமாக ப்ரார்ததித்துக கொண்டு

तपस्तप्त्वा स्थितो देव ःा मा शरणागतम्।
इत्युक्त्वा नटतस्तस्य ध्वनिरद्भुतः ।। (६०)

60. தபஸ செயது கொணடிருக்கிறேன். தேவனே ஶரணாகதனான என்னை ரக்ஷிப்பீராக ' எனறு சொலலி நாட்யமாடுகிற அவரது கால் சலஙகையின் ஶப்தம,

महानासीत् तदा सर्वा दिशश्च मुखरीकृता ।
तदाकर्ण्य रुषा काळी रामपुर्यास्समागता ।। (६१)

61. மிக உன்னதமாக இருந்தது அநத ஶப்தம அனைதது திசைகளிலும எதிரொலித்தது. அதைக்கேட்ட காளி தேவி அதிக கோபத்துடன் ராமாபுரத்திலிருந்து அஙகே வந்தாள்

·सोद्यानसौधगेहाढ्यं पुरं देवपुरोपमम्।
ससालगोपुरोत्तुङ्गमण्डपैस्सवृतालयम् ।। (६२)

62. உத்யான வனங்களுடனும், வெள்ளையடித்து ஶுத்தம் செய்யப்பட்ட வீடுகளை உடையதும், தேவலோகத்துக்கு இணையானதுமான நகரத்தையும், உயர்ந்த கோபுரங்களாலும் உன்னதமான மண்டபங்களாலும் நிறைந்த ஆலயத்தையும்

कनकख्यसभामध्यं राजदन्तविचित्रितम्।
चित्रकूट समालोक्य तन्मध्ये रत्नशोभिते॥ (६३)

63. ஸ்வர்ணமயமான ஸபையின் நடுவில் ஆச்சர்யமாக ஒளி வீசுகிற சித்ர கூடத்தைக் கொண்டு, அதன் நடுவில் ரத்னங்களின் ஶோபையுடன் கூடின.

सिंहासने स्थित देव श्रीभूनीळासमावृतम्।
सभापति हरि दृष्ट्वा विस्मयाविष्टचेतसा॥ (६४)

64. ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவரும், ஶ்ரீதேவி, பூதேவி, நீளாதேவியருடன் சூழ்ந்திருக்கிற ஸபாநாயகரான ஶ்ரீஹரியைப் பார்த்து, ஆச்சர்யமடைந்தவளாக

नत्वा स्तुत्वा जगन्नाथं सर्वदेवैस्समावृतम्।
गोविन्द पुण्डरीकक्ष काळी वचनमब्रवीत्॥ (६५)

65. வணங்கி, தேவர்களெல்லோரும் சூழ்ந்திருக்கிற ஜகந்நாதரை ஸ்தோத்ரம் செய்து, தாமரை மலர் போன்ற கண்களையுடைய ஶ்ரீகோவிந்தராஜனைப் பார்த்து காளி தேவி சொல்லத் தொடங்கினாள்.

काळी-शिवस्य मम नाट्यार्थे सवादोऽभून्महाप्रभो।
तस्माद्दृष्ट्वाऽवयोर्नाट्य जयापजयमग्रत॥ (६६)

66. காளி - மஹா ப்ரபுவே ! பரமேச்வரனுடன் கூட ஆடின என்னுடைய நாட்யத்தில் சர்ச்சை ஏற்பட்டது. ஆகையால் எங்களது நாட்யத்தை தேவரீருக்கு எதிரில் ஆடுவதைப் பார்த்து எங்களது வெற்றி தோல்வியை

सत्य वद दयासिन्धो पक्षपातं विनाऽच्युत।
इति ब्रुवन्त्या काळ्यान्तु गम्भीर प्राह ससदि॥ (६७)

67 கருணாகரனே ! பக்ஷபாதம இல்லாமல உண்மையான விஷயத்தைச் சொலவீராக என்று ப்ரார்த்தித்த காளி தேவியைப பார்த்து, பகவான் உடனே சொல்லத் தொடஙகினார.

भगवान्- यस्तु नाट्येऽजितस्सोऽद्य कृत्वा निर्गळबन्धनम्।
एतन्नगरसीमान्ते स्थापितव्यो न सशय ।। (६८)

68. நாடயத்தில தோல்வியடைபவர்கள், தோலவியடைந்த நேரம முதல் பிரிந்து சென்று இந்த நகரத்தின் எல்லையில வஸிகக வேண்டுமென்பதில் ஸம்ஶயமில்லை

इदमेव पण कळि युवयोर्नाट्यकारिणो.।
इति विष्णुस्सभामध्ये सभानाथोऽन्वगादिशत्।। (६९)

69. நாடயமாடப் போகிற உஙகள இருவருககும இதுதான உடன்படிக்கையாம் என்பதாக ஸபாநாதனான ஸ்ரீமஹாவிஷ்ணு ஸபையின் நடுவில் கட்டளையிட்டார்.

;शिवकाळ्योश्च सवादे सप्राप्ते नृत्तकर्मणि।
विष्णुस्सभापतिस्तिष्ठन् नृत्तितु तौ समादिशत्।। (७०)

70. ஶிவபெருமானுக்கும், காளி தேவிக்கும நருத்ததம் ஸமபநதமாக வாதம ஏறபட்ட போது ஸ்ரீமஹாவிஷ்ணு ஸபா நாயகனாக இருந்து அவ்விருவரையும் நாட்யம் ஆடுவதற்குக் கடடளையிடடார்.

तदा सदाशिवो वेगात् काली चोभौ जयैषिणौ।
स्वजनैस्सवृतौ हृष्टौ नाट्यवेषधरौ मुने।। (७१)

71 அப்போது பரமேச்வரன், காளிதேவீ இருவரும வெறறி தஙகளுக்கே கிடைக்கவேணடும் என்று விருமபுவாரகளாகித தஙகள தஙகள் பரிவாரஙகள் சூழ மகிழ்ச்சியுடன் நாட்ய வேஷம தரித்தனர்

ताळमद्दळवीणादिवाद्यैर्वेणुस्वरान्वितम्।
स गान सप्तरात्र हि प्रणेदुः पुरतो हरे.।। (७२)

72. காதுக்கு இனிமையான தாளம், மத்தளம், வீணை, ஸுஸ்வரமான புல்லாங்குழல் இவையெல்லாம் கானத்துடன் ஏழு இரவுகள் ஸ்ரீஹரியின் எதிரில் இசைக்கப்பட்டன.

तदा.तयोश्च वाद्यानां नूपुराणां मनोहरः।
घोषो महानभूत् तेन ब्रह्माण्डं प्रतिनादितम्॥ (७३)

73. அப்போது அவ்விருவருடைய வாத்யங்களினுடையவும் மனோஹரமான, கால் சலங்கைகளினுடையவும் ஶப்தங்கள் சத்தமாக இருந்தன. அதனால் உலகம் பூராவும் இந்த ஶப்தம் எதிரொலித்தது.

देवगन्धर्वमानवाः किन्नराश्चाप्सरोगणाः।
काळ्या स्त्रीत्वात्तन्नाट्यात् मोहिता श्लाघयन्ति हि॥ (७४)

74. தேவர்களும், கந்தர்வர்களும், மநுஷ்யர்களும், கின்னரர்களும் அப்ஸரஸ்த்ரீகளும், காளிதேவி ஸ்த்ரீ என்பதாலும், அவளுடைய நாட்யத்தில் மோஹித்ததாலும், அதனை வெகுவாகப் புகழ்கிறார்கள்.

तत् श्रुत्वा सरुषा शम्भुः सेर्ष्यं दृष्ट्वा च कालिकम्।
व्याकुलात्मा नटन्मन्दं जयाय प्रार्थयेध्दरिम्॥ (७५)

75. அதைக்கேட்டு மஹாதேவன் கோபத்தால் அழுகை மிகுந்தவராக பொறாமையுடன் காளி தேவியைப் பார்த்து, மிக்க கவலையடைந்து, நாட்டியத்தில் மந்தம் ஏற்பட்டு, வெற்றி கிடைக்க ஸ்ரீஹரியை ப்ரார்த்தித்தார்.

तत् ज्ञात्वा सर्ववित् शौरिः स्वपादं दक्षिण तदा।
उध्दृत्य सव्यं विन्यस्य पादं पीठेऽप्यसूचयत्॥ (७६)

76. ஸர்வஜ்ஞான ஸ்ரீமந்நாராயணன் இதையறிந்து தனது வலது காலைத் தூக்கி இடது காலின் மேல் வைத்து ஈச்வரனுக்கு ஸூசகமாகத் தெரிவித்தார்.

तत्संज्ञां तत्क्षणात् ज्ञात्वा केनाऽप्यविदितं तदा।
जयं ममेति निश्चित्य महानन्दात्सदाशिवः॥ (७७)

77. அந்த ஸமிஜ்ஞை வேறு யாரும் அறிந்து கொள்ள முடியாத நிலையில் ஸதாசிவன் அந்த க்ஷணமே அதையறிந்து கொண்டு 'வெற்றி எனக்கே' என நிச்சயித்து மிக்க மகிழ்ச்சியுன்

भुव्येक वामक पाद विन्यस्याऽन्यच्च दक्षिणम्।
पादमूर्ध्वं समुध्दृत्य साट्टहास. पुन पुन ॥ (७८)

78. தரையில் இடது காலை ஊன்றி, வலது காலை மேலே தூககி, அட்டஹாஸம் செய்து, மறுபடியும

उत्पत्योत्प्लुत्य हर्षेण समन्तात् संभ्रमन्मुने।
ऊर्ध्वं ताण्डवमुद्वगं धूर्जाटिस्त्वातनोन्मुने ॥ (७९)

79 ஸந்தோஷத்தோடு குதித்து குதித்துச் சுற்றிவந்து பரமேச்வரன உத்வேகத்துடன் ஊர்த்வ தாண்டவமாடினார்

तदा कोलाहलारावात् देवाना नूपुरस्वनात्।
नानावाद्यरवाः सर्वे लोकाश्च बधरीकृताः ॥ (८०)

80. அப்போது தேவர்களின் கோலாஹல ஸப்தங்களாலும ஈசவரனின் நூபுர (சலங்கை) த்வனியாலும், பல வகை வாத்யங்களின் முழக்கங்களாலும் லோகம் பூராவும் ஶப்தமயமாக இருந்தன

तत्र देवादयस्सर्वे किमेतदिति ताण्डवम्।
साश्चर्य प्रहसन्ति स्म हरिश्च प्रहसन्मुने ॥ (८१)

81 அங்கு தேவர்கள் எல்லோரும் இது என்ன வகை தாண்டவம? என ஆச்சர்யத்துடன் பார்த்துக் களிப்படைந்தார்கள் ஸ்ரீமந்நாரயணனும் இதைக் கண்டு முறுவலித்தார்

तत. काळी महाकोपात् सभाया त्यक्तताण्डवा।
लज्जावनतवक्त्राब्जा स्थाणु प्राह हरेः पुर ॥ (८२)

82. அதன்பிறகு காளி தேவி அதிகக் கோபத்துடன் ஸபையில தனது நாடயததை நிறுத்திவிட்டு லஜ்ஜையினால் முகம் திருபபியவளாக விஷ்ணுவின் எதிரில் ஈச்வரனைப் பார்தது சொன்னாள்.

अये मृडेश निर्लज्जो मान त्यक्त्वा सभान्तरे।
भूताविष्ट इवाद्य त्वं किं निमित्तं हसस्यहो ॥ (८३)

83. ஹே உமாகாந்தனே ! இந்த ஸபாவின நடுவில வெடகததை விட்டு லஜ்ஜையிலலாமல் பேய்பிடித்தவர்போல ஏன் சிரிககிறீா?

अनेन ताण्डवेन त्व मा विजेतुं हि पश्यसि।
पश्य पश्येति काळ्या तु वदन्त्या प्राह शङ्कर.॥ (८४)

84. இந்த நடனத்தினால் நீர் என்னை வெற்றி கொளளப பாாக்கிறீா? பாருஙகள் - பாருஙகள் என்று பேசுகிற காளியைப் பாாத்து ஶஙகரா் சொன்னாா்.

अयि मूढे महाकालि त्व हि किन्नु सभान्तरे।
पुरुषेण सम कृत्वा विवाद नृत्तसि क्रुधा॥ (८५) य(वा)ता

85 மூடபுததிள்ள காளி தேவியே ! நீ ஸபாவின மத்தியில ஆண்களுக்கு ஸமமாக நாட்யமாடுகிறாய் கோபமுற்றவளாக வாதம வேறு செய்கிறாய் !

त्व वा लज्जाविहीनाऽह वद सत्य सुदारुणे।
यदा मौन न नृत्तासि तदा सविजिता ध्रुवम्॥ (८६)

86. கொடூரமான தோற்றமுடையவளே ! உண்மையாகச் சொல்வாயாக. லஜ்ஜையில்லாமலிருப்பது நீயா அலலது நானா? எபபோது மௌனமாக நடனம் ஆடாமலிருக்கிறாயோ அப்போதே என்னால் ஜயிக்கப்பட்டவளாகிறாய். இது நிச்சயம்.

तदन्तरे सुरास्सर्वे जिता काळ्यद्य शम्भुना।
इति ह्याघोषयन् सर्वे हस्तताडनपूर्वकम्॥ (८७)

87. முடிவாகத் தேவர்களும், மற்றவர்களும், எல்லோரும் கையைத் தட்டி ஆர்ப்பரித்து காளி தேவி பரமேச்வரரால ஜயிக்கப்பட்டாள் என்று உரக்கக் கோஷமிட்டனர்.

एतान् श्रुत्वा रुषा काळी देवान् सर्वान् विनिन्द्य च।
जिताऽहं च जितो वाऽद्य सत्यं ब्रूहि सभापते॥ (८८)

88. இவற்றையெல்லாம் கேட்டு கோபமடைந்த காளிதேவி தேவர்களையும், மற்றல்லோரையும் நிந்தித்து, ஸ்ரீமந்நாராயணனை, ஸபைத்தலைவரான ச்ரிய · பதயே, நான் இப்போது வெறறியடைந்தேனா, இல்லையா ? உண்மையைச் சொல்வீராக.

इति ब्रुवन्त्यां काळ्यां तु पश्यतां त्रिदिवौकसाम्।
मध्ये सभापतिः काळी गम्भीरं प्राह माधवः॥ (८९)

89 நாட்டியத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிற தேவாகளின் நடுவில இவ்வாறு கேள்வி கேட்கும் காளிதேவியைப் பார்த்து ஸபாநாயகனான மஹாவிஷ்ணுவாகிற மாதவன் கமபீரமாகச் சொன்னார்.

भगवान्- अयि काळी महाहर्षं कृत्वा त्वं मम सन्निधौ।
नृत्यन्ती यतो त्यक्तनृत्ता तस्मात् जिता ध्रुवम्॥ (९०)

90. பகவான் - ஹே காளிதேவியே ! நீ என்னுடைய ஸந்நிதியில் மிகுந்த மனமகிழ்ச்சியுடன் ஆடிக் கொண்டிருக்கும் ந்ருத்யத்தை நடுவில் விட்டு விட்டதால் ஜயிக்கப்பட்டவளாகிறாய். இதுவே நிச்சயம்.

काळी- कोपादिवाऽऽवयोरग्रे निर्वाण दर्शयन्पदम्।
उध्दृत्य नटति व्रीडाहीनस्तेस्मात् पुमान् किमु॥ (९१)

91. காளி :- கோபத்துடனிருக்கிற என் எதிரில் காலைத் தூக்கி வெட்கமில்லாமல் ஆடுகிறாரே ! ஆனாலும் இவர் ஒரு ஆண் மகனா?

अनेन ताण्डवेनाऽहं लज्जया त्यक्तताण्डवा।
स्थिताऽनेन शिवेनाऽद्य जेतुं दुष्कृतं कृतम्॥ (९२)

92. இந்த (ஊர்த்வ) தாண்டவத்தினாலே வெட்கமடைந்தத நான் என்னுடைய நாட்யத்தை நிறுத்தி இருந்தேன். இதனால் இந்த ஶிவனால் ஜயிக்கப்பட்டேன். இல்லையெனில் இவரால் என்னை ஜயிக்கமுடியாது என்று கூறிவிட்டு தில்லையின் எல்லைக்குச் சென்று விட்டாள்.

ப்ரம்மாண்ட புராணம் ஆறாம் அத்யாயம் நிறைவுற்றது.

## ப்ரம்மாண்ட புராணத்திலுள்ள சித்ரகூட மாஹாத்மியம் நிறைவுற்றது

# துவாதச தீர்த்தங்கள்

தெய்வப் புனல் சூழ்ந்தழகாய தில்லை" என்று திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டபடி புண்ய தீர்த்தங்களால் சூழப்பட்டுள்ள தில்லை நகர்த்திருச்சித்திரகூடத்தில் படிந்தாரை பரிசுத்தமாக்கவல்ல தீர்த்தங்கள் பன்னிரன்டு. அவைமுறையே (1) புண்டரீக சரசு (2) அம்ருத தீர்த்தம் (3) திருப்பாற்கடல் (4) சேஷதீர்த்தம் (5) கருடதீர்த்தம் (6) காவேரி (7) வெள்ளாறு சுவேதநதி (8) யமபாசச்சேதன தீர்த்தம் (பாசமறுத்த தீர்த்தம்) (9) இந்திரதீர்த்தம் (10) அக்னி தீர்த்தம் (11) நிர்ஜரா தீர்த்தம் (12) ஸ்வாமி தீர்த்தம் என்பன இவைகளின் விபரம் பின்வருமாறு.

## (1) புண்டரீக சரஸ்

இத்தீர்த்தம் ஸ்ரீகோவிந்தராஜன் ஸந்நிதிக்கு வடபாகத்தில் அமைந்துள்ளது. ப்ரம்மா பௌண்டரிகம் என்னும் யாகம் செய்தபடியாலும், புண்டரிக முனிவன் படிந்து தவம் செய்து, புருஷோத்தமனைக் கண்டவற்றாலும் இத் தீர்த்தத்திற்கு புண்டரீக சரஸ் என்று பெயர். பங்குனி உத்திரத்தன்று பரமன் இத் தீர்த்தத்தில் அவப்ருதம் கண்டருளுவர்.

## (2) அம்ருத தீர்த்தம்

இது பெருமாள் விமானத்துக்கருகில் ஈசான்யத்தில் உள்ளது. கருடதேவன் அம்ருத கலசத்தைக் கொணர்ந்து, இக்கூபத்தில் கலந்ததினால் அமுத கூபம் எனப் பெயர் பெற்றது. புத்திரப்பேறு வேண்டினார் ஆனிமாதத்திய கேட்டை கூடிய சுக்ல ஏகாதசியில் இவ்வமுத கூபத்தில் நீராடி, உபவாசமிருந்து, கோவிந்தராஜனை துதித்து ஏத்தி, துவாதசியில் உப வாசத்தை முடித்து இவ்வாறு ஆனி முதல் ஆறுமாதங்கள் ஏகாதசி, துவாதசி விரதம் அனுஷ்டிப்பார் மக்கட்பேறு அடைவர்.

## (3) திருப்பாற்கடல்

திருவிருந்தமார்பன் சினகரத்துக்கு வடக்கில் திருப்பாற்கடல் உள்ளது. பாற்கடலில் பள்ளிகொண்ட கோலமாகப் பரமனைக் காண எண்ணி தவம் செய்து புண்டரீகருக்கும் முன்பு கன்வ முனிவனால் அமைக்கப்பெற்றது. முகுந்தன் அருளை எண்ணி முழுகினார்க்கு சுகம் அளிக்கவல்லது.

## (4) சேஷதீர்த்தம்

கோவிந்தராஜன் ஸந்நிதிக்கு மேற்கெல்லையில் உள்ளது. பதஞ்சலி முனிவரால் பாதளத்திலிருந்து கொண்டுவரப்பட்டது. ஐப்பசி மாதத்தில், வாசுகி, அனந்தன், பலராமன், ஆதிசேஷன் ஆகியோரது நாட்களில் கோவிந்தப்ரீதி செய்து தானம் செய்பவர் பாராளும் அரசராவார், இத்தீர்த்தத்தில் பங்குனி மாதம் சுவாதி நாளில் கோவிந்தராஜன் தெப்பத்திருவிழா கண்டருள்வர்.

## (5) கருடதீர்த்தம்

தில்லைக்கு ஈசானிய திக்கில் அரையோஜனை தூரத்தில் கீழ்க்கடலுக்கு அருகில் உள்ளது. சுமுகன் என்னும் நாகம் தன்னை உணவாகப் பற்றி விழுங்க வரும் கருடனைக் கண்டு பயந்து, பரமனைச் சரண் அடைந்தது. ஐயனும் அபயம்அளித்து கருடனைத் தடுக்க, கருடன் சினம் கொண்டு, ஐயனை நோக்கி பாம்புக்கு அபயம் தந்து, உன்னை எஞ்ஞான்றும் எழுந்தருளச் செய்யும் எனக்கு உணவினைத் தடுத்தாயே என்று கடுத்துப்பேச அமலன் புன்னகை செய்து கருடனை நோக்கி ''நீ அகங்காரம் கொண்டாய்'' எனவே தில்லை நகர் கீழ்க்கடலுக்கருகில் தவம் கிடந்தாயாகில் உன்னை ஆட்கொள்வேன் என்ற கூறினார். கருடன் அவ்வாறே இத்தீர்த்தத்தை அதைத்து, தவம் கிடந்து மாசி மக நாளில் தெய்வப்புள் ஏறி கருடாரூடராய் எழுந்தருளி ஸேவை ஸாதித்து, தீர்த்தமளித், கருடனை ஆட்கொண்டார் இதில் நீராடினார் சேதுவாடிய பயனடைவர்.

## (6) காவேரி

எம்பெருமான் திருவரங்கத்தின் நடுவே பள்ளி கொள்ளுகையாலும், இரு திருவடிகளின் ஸ்பர்சத்தாலும் ஏற்பட்டுள்ள ஏற்றத்தையுடைய கங்கையிற் புனிதமாய வடதிருக்காவிரி சித்ர கூடத்துக்கு தெற்கு எல்லையில் உள்ளது. ஆடி மீ 18, 28 பெருக்குநாளில் கோவிந்தராஜன் அங்கு எழுந்தருளி காவேரிக்கு அருள் புரிந்து திருவிழாக் கொண்டாடுவர் இக்காவேரி நதியில் படிந்து குடைந்தாடுவார் இஷ்டசித்திகளைப் பெறுவர்

## (7) சுவேத நதி

சுவேதநதி என்கிற வெள்ளாறு தில்லையின் வடவெல்லையில் உள்ளது. ஆதியில் சுவேத வராஹமாகிய தொன்முதல் ஆணையின்படி சுவேதாத்ரியிலிருந்து வந்த தொடர்பினால் சுவேத நதி என்று பெயர் பெற்றது. பரசுராமன் முன்பு கார்த்தவீரியன் செய்த கரிசினால், மூவேழு தலைமுறை முடிமன்னரைக் கொன்ற இவ்வாற்றில் பிதுர்ச்ராத்தம் செய்ததினால் 'நிவாப நதி' என்றும் இதற்க ஒரு பெயர் உண்டு. திருமங்கையாழ்வார் தமது சித்திர கூடப்பதிகத்தில் பெருநீர் நிவாவுந்தி முத்தம் கொணர்ந்து, எங்கும் வித்தும் வயலுள் கயல்பாய்ந்துகள திரு நீலம் நின்று திகழ்கின்ற தில்லைத் திருச்சித்திரகூடம் என்றும் நிவா என்சிற வெள்ளாறு "கௌவைக் களிற்றின் மருப்பும் பொருப்பில் கமழ்சந்து முந்தி நிவா வளங்கொள் தெய்வப்புனல் சூழ்ந்தழகாய தில்லை" என்றும் வர்ணித்துள்ளார். கோடைக்கால வெப்பமகல ஸ்ரீகோவிந்தராஜன் இதில் ஜலக்ரீடை உத்ஸவம் கண்டருளுவர். மாசிமக நன்னாளில் இதில் நீராடி தான தருமம் செய்வோர் இஷ்டசித்திகளை அடைவர்.

## (8) யமபாசச் சேதன தீர்த்தம்

இது சித்ரகூடத்திற்கு வடக்கே உள்ளது. இதற்கு ப்ரம்ம தீர்த்தம் என்றும் பெயர். இதில் புரட்டாசி மாதத்தில் சனி வாரங்களில் நீராடி, மறையோர்க்கு அறுசுவை அன்னமிடுவர். இங்கு கோவிந்தராஜப்பெருமாள் உத்யான உத்ஸவம் (வனபோஜனம்) கண்டருளுவார் பத்தியோடு இவ்வுத்ஸவம் சேய்வார் பாராளும் மன்னர் ஆவர். மாசி மக உத்ஸவத்தில் இங்கு வனபோஜன உத்ஸவம் நடைபெறுவது வழக்கு.

## (9) இந்திரதீர்த்தம்

இந்திரனால் அமைக்கப்பட்ட இந்திர தீர்த்தம் சித்திரகூடத்திற்கு கிழக்கில் உள்ளது. முனிவர்கள் சாதுர்மாஸிய விரதத்தை இந்த தீர்த்தத்தில் அனுஷ்டித்ததால் சாதுர்மாசிய தீர்த்தம் என்றும் வழங்குவர். இத்தீர்த்தத்தில் மார்கழி மாதத்தில் சுக்ல பக்ஷத்வாதசியில் நீராடி, திருமால் அடியார்க்கு தொண்டு செய்து அன்னம் அளிப்பவர் இகபோகம் நுகர்ந்து, பின் இணையில்லா இன்ப வீடு அடைவர்.

## (10) அக்னிதீர்த்தம்

தில்லை நகருக்கு நிருதி திக்கில் உள்ளது. மாதவனை நோக்கி யாகம், செய்து/ தனக்குண்டான மாந்த நோயினைப் போக்கிக் கொண்ட அக்னிதேவனால் அமைக்கப்பட்ட தீர்த்தமாகும். கார்த்திகை மாதக் கார்த்திகை நாளில் இக்குளத்தில் நீராடி அந்தணர்க்கு நெய்தானம் செய்வார் இச்சுகம் துய்த்து சுவர்க்கம் எய்துவர்.

## (11) நிர்ஜரா தீர்த்தம்

சித்ரகூடத்திற்கு மேற்கே உள்ளது. இது நரை, திரை மூப்பு அகல, கண்ணனைக் கருத்திற் கொண்டு, யாகம் செய்து நோற்ற தேவர்களால் அமைக்கப்மட்டது. ஆவணிமாத அஷ்டமி ரோஹிணி நாளில் இத்தீர்த்தத்தில் ஆடி, மாதவனைப் பூஜித்தால் முதுமை நீங்கி இளமை அடைவர்

## (12) சுவாமி தீர்த்தம்

தில்லை நகர்க்கு வடபால் உள்ளது. இதற்க அண்ணா குளமென்று [illegible] பெயர் உண்டு. புரட்டாசி மாதச்சனிக்கிழமைகளில் இக்குளத்தில நீரா[illegible] திருவேங்கடவனைத் தொழுவார் சம்பத்து, வித்தை, ஞானம், வீரியம், முதல[illegible] வேட்டனவெல்லாம் பெறுவர்

ஆக பன்னிரன்டு தீர்த்தங்களிலும் நீராடி பக்தவத்ஸலனை சேவிப்போர் கோவிந்தராஜன் இன்னருளுக்கு என்றும் இலக்காகி, சதிராக வாழ்ந்திடுவர்

சித்திரகூடத்து எம்பெருமான் வைபவம் வாசாமகோசரமானது இவ்வரிய புராணத்தை ஸ்ரீ கோவிந்தராஜன் வஸந்த உத்ஸவத்தில [illegible] ஸன்னிதியில் வாசிப்போர், கேட்போர் [illegible], தொழுதோர், இம்மையில் எண்ணி[illegible]லலாம் [illegible] சுகித்து [illegible] அந்தமில்லாத ஆனந்தமடைவர்[illegible] நைமிசாரண்ய முனிவர்கட்கு சூத [illegible]

## உத்ஸவங்கள்

இக்கோயிலில் வைணவ திவ்ய தேசங்களில் நடைபெறுகின்ற நித்ய, பர்வ, மாத ஸம்வத்ஸர, உத்ஸவங்கள் அனைத்தும், வைகானஸ ஆகம விதிப்படி சிறப்பாக உபயக்காரர்களாலும் கட்டளை தாரர்களாலும் நடத்திவைக்கப்படுகின்றன. அவையாவன.

### (1) நித்ய உத்ஸவம்

| | | | |
|---|---|---|---|
| காலை | 6–00 | மணிக்கு | விஸ்வரூபம் |
| | 8–00 | மணிக்கு | சாலக்ராம திருமஞ்சனம் காலசந்தி திருவாராதனம் |
| | 8–30 | மணி | திருப்பாவை ஸேவாகாலம் |
| | 9–00 | மணி | திருப்பாவை சாத்துமுறை தீர்த்த வினியோகம் |
| | 12–00 | மணி | உச்சிகாலம் |
| | 1–00 | மணி | திருக்காப்பு சேர்த்தல் |
| மாலை | 4–00 | மணி | திருக்காப்பு நீக்குதல் |
| | 6–00 | மணி | நித்யானுசந்தான ஸேவா காலம் |
| | 7–00 | மணி | சாத்துமுறை, தீர்த்தவினியோகம் |
| | 7–30 | மணி | மணி திருவாராதனம் |
| | 8–00 முதல் 9–30 வரை | மணி | ஆழ்வார், ஆச்சார்யாள், திருநக்ஷத்திர உத்ஸவ மங்களா ஸாஸனம், ஸேவாகாலம், சாத்து முறை, தீர்த்த ப்ரசாத விநியோகம் |
| | 10–00 | மணி | அர்த்தஜாம பூஜை |
| | 10–30 | மணி | திருக்காப்பு சேர்த்தல் |

## (2) பஞ்சபர்வ உத்ஸவங்கள்

| | பகல் திருமஞ்சனம் | இரவு புறப்பாடு |
|---|---|---|
| (a) மாஸப்பிறப்பு | பெருமாள் | பெருமாள் |
| (b) அமாவாசை | பெருமாள் | பெருமாள் |
| (c) க்ருஷ்ண, சுக்ல ஏகாதசி | பெருமாள் | பெருமாள் |
| (d) உத்திரம் | பெருமாள் | பெருமாள் |
| (e) பௌர்ணமி | பெருமாள் | பெருமாள் |
| (f) வெள்ளிக்கிழமை | தாயார் | தாயார் |

## மாஸ உத்ஸவங்கள்

மாதம்

| *சித்திரை* | *காலை* | *மாலை* |
|---|---|---|
| 1. வருஷப்பிறப்பு | பெருமாள் திருமஞ்சனம் | பெருமாள் புறப்பாடு |
| 2. சித்ரா பௌர்ணமி கஜேந்திர மோக்ஷம் | பெருமாள் திருமஞ்சனம் | இரவுகருட ஸேவை விதிப்புறப்பாடு |
| 3. அக்ஷயத்ருதியை | சூர்யப்ரபைவாகனம் உற்சவப்புறப்பாடு | |
| 4. ஸ்ரீராமநவமி | பெருமாள் திருமஞ்சனம் | திருகல்யாண உத்ஸவம் |
| 5. வஸந்த உத்ஸ்வம் 10 நாட்கள் | ஏகவஸந்தம் | திருவாராதனம் ஸ்தல புராண படனம் ஸேவை சாத்து முறை |

## வைகாசி

| | | |
|---|---|---|
| 6. வைகாசித் திருவாதிரை | பெருமாள் சதகலசத் திருமஞ்சனம் | |
| 7. வைகாசி விசாகம் 5 நாட்கள் | உதய கருட ஸேவை வீதிப்புறப்பாடு விசாக மண்டபத்திற்கு எழுந்தருளுதல் பகல் திருமஞ்சனம் ஸேவை சாத்துமுறை | இரவு சேஷ வாகன வீதிப் புறப்பாடு |
| 8. நரஸிம்ம ஜயந்தி | ஸ்ரீ அழகிய சிங்கர் திருமஞ்சனம் ஸேவை சாத்துமுறை | |

## ஆனி

| | | |
|---|---|---|
| 9. ஜ்யேஷ்டாபிஷேகம் | பெருமாள் திருமஞ்சனம் | இரவுசேஷ வாகனத்தில் வீதிப் புறப்பாடு |
| 10. ஸ்ரீசுதர்சனஜயந்தி | சக்கரத்தாழ்வார் திருமஞ்சனம் | புறப்பாடு |

## ஆடி

| | | |
|---|---|---|
| 11. வெள்ளிக்கிழமைகள் | தாயார் திருமஞ்சனம் | கண்ணாடி அறை ஸேவை புறப்பாடு |
| 12. ஆடிப்பூர உத்ஸவம் | 10 நாட்கள் | மாலை மாற்றுதல் |
| ஆடிப்பூரம் | பெருமாள் ஆண்டாள் திருமஞ்சனம் காலைப்புறப்பாடு ராமர் ஸன்னிதிக்கு எழுந்தருளுதல் | பெருமாள் தாயார் மாலை மாற்றுதல் இரவு வீதிப் புறப்பாடு |

| | | |
|---|---|---|
| 13. ஆடிஉத்திரம் | பெருமாள் ஆண்டாள் திருமஞ்சனம் | மாலை ஆண்டாள் திருக்கல்யாணம் இரவு வீதி புறப்பாடு |
| 14. ஆடிஹஸ்தம் | பெருமாள் ஆண்டாள் திருமஞ்சனம் | இரவு திருவிதிப் புறப்பாடு |
| 15. ஆடிசுவாதி கருடஜயந்தி | திருமஞ்சனம் உற்சவம் | |
| 16. பதினெட்டாம் பெருக்கு | திர்த்தவாரி உத்ஸவம் | |

## ஆவணி

| | | |
|---|---|---|
| 17. ஸ்ரீஜயந்தி | | கண்ணன் ப்ராகாரப் புறப்பாடு திருமஞ்சனம் ஸேவா காலம் சாத்துமுறை தீர்த்த வினியோகம் |
| 18. உறியடி | பெருமாள் திருமஞ்சனம் | புன்னைமர வாகன ஸேவை வீதிப்புறப்பாடு |

(19) பவித்ர உத்ஸவம் 5 நாட்கள்

ஆவணி சுக்ல ஏகாதசியன்று காலை திருமஞ்சனம் புறப்பாடு மாலை பெருமாள் யாகசாலாப்ரவேசம் 5நாட்கள் யாகசாலை ஹோமம் ஸேவை சாத்துமுறை துவாதசி திருப்பவித்ரப்ரதிஷ்டைபௌர்ணமி காலை சஹஸ்ர கலச திருமஞ்சனம் மாலை பூர்ணாகுதி இரவு புறப்பாடு கடப்ரோக்ஷனம் சாத்துமுறை ஆசிர்வாதம்

## புரட்டாசி

| | | |
|---|---|---|
| 20. மாஹாளய அமாவாசை | பெருமாள் திருமஞ்சனம் | இரவு ப்ராகரப் புறப்பாடு |

| | | | |
|---|---|---|---|
| 21. | நவராத்திரி உத்ஸவம் ப்ரதிதினம் | (9அல்லது 10 நாட்கள்) ஸ்ரீபுண்டரீக வல்லித் தாயார் காலை திருமஞ்சனம் | மாலை கண்ணாடி அறை ஸேவை ப்ராகாரப் புறப்பாடு |
| 22. | ஸரஸ்வதிபூஜை | | பெருமாள் தாயார் சேர்த்தி உத்ஸவம் மாலை மாற்றுதல் |
| 23. | விஜயதசமி | காலை பெருமாள் புறப்பாடு | மாலை குதிரை நம்பிரானில் வீதிப் புறப்பாடு அம்பு போடுதல் |

## ஐப்பசி

| | | | |
|---|---|---|---|
| 24. | டோலோத்ஸவம் 5 நாட்கள் | டோலைக்குபுறப்பாடு திருவாரதனம் ஸேவை சாத்துமுறை | |
| 25. | தீபாவளி | பெருமாள் தாயார் பரிவாரங்கள் திருமஞ்சனம் | இரவு ப்ராகரப் புறப்பாடு |

## கார்த்திகை

| | | | |
|---|---|---|---|
| 26. | கைசிக ஏகாதசி | பெருமாள் திருமஞ்சனம் | ப்ராகரப்புறப்பாடு |
| 27. | கைசிக துவாதசி | கைசிகபுராண படனம், ஸ்தலத்தார் மரியாதை | |
| 28. | தீபோத்ஸவம் | காலைபெருமாள் | இரவு திருமஞ்சனம் புறப்பாடு சொக்கப்பானை பந்தக் காட்சி |
| 29. | கார்த்திகை திருவோணம் | கோவர்தனபட்டாபி ஷேகம் | |

## மார்கழி

| | |
|---|---|
| 30. திருப்பள்ளியெழுச்சி | 30 நாட்கள் |
| தினம் காலை | திருப்பள்ளி எழுச்சி |
| 4–00 மணிக்கு | திருவாராதனம் |
| 4–30 மணிக்கு to 5–00 மணிக்கு | திருப்பாவை சாத்துமுறை ஸேவாகாலம் |
| 6–00 மணிக்கு | நாள் பாட்டு |
| 31. கூடாரவல்லி | காலை ஆண்டாள் திருஞ்சனம் மங்களா சாஸனம் ப்ராகரப் புறப்பாடு சாத்துமுறை |
| .32. திருநெடுந் தாண்டகம் | பெருமாள்சந்நதி காலை ஆழ்வார் ஆசாரியர்கள் திருமஞ்சனம் ஸேவை சாத்துமுறை |
| 33. பகல் பத்து உற்சவம் 10 நாட்கள் | ப்ரதி தினம் பகல் 1 மணிமுதல் 5 மணிவரை ஸேவாகாலம் சாத்துமுறை தீர்த்தவினியோகம் ப்ரசாத விநியோகம் |
| 34. வைகுண்ட ஏகாதசி | காலை திருவாசல் நீக்குதல் திருவாய் மொழி தொடக்கம் பெருமாள் ப்ராகரப் புறப்பாடு திருமஞ்சனம் கருடஸேவை |
| 35 இராப்பத்து உத்ஸவம் ப்ரதி தினம் | 10 நாட்கள் இரவு 8மணி முதல் 11 மணி வரை திருவாய்மொழி ஸேவை சாத்துமுறை |
| 36. இராப்பத்து சாத்துமுறை | இரவு 9மணிக்கு மேல் ஸேவை நம்மாழ்வார் பரமபதப் புறபபாடு நம்மாழ்வார் மோக்ஷம் திருவாராதனம் சாத்துமுறை தீர்த்த வினியோகம் |
| 37 இயற்பா சாத்துமுறை | பகல் 1 முதல் 5 மணிவரை இயற்பா ஸேவை சாத்துமுறை நம்மாழவார் தாயார் ஸந்நிதிக்கு புறப்பாடு |

| | | | |
|---|---|---|---|
| 38 | நாச்சியாா அத்யயன உத்ஸவம் | 5 நாட்கள் காலை திருமஞ்சனம் இரவு 8 மணி 11 மணிவரை திருவாய்மொழி ஸேவை சாத்து முறை தீர்த்த வினியோகம் | |
| 39 | தாயாா இயற்பா சாத்துமுறை | இரவு 8மணி முதல் 11 மணி வரை இயற்பா ஸேவை; சாத்து முறை | |
| 40 | ஸ்ரீ மணவாளமாமுனிகள் ப்ரபந்த சாத்துமுறை | மடைப்பள்ளி நாச்சியார் ஸந்நிதி எழுந்தருளுதல் | இரவு ஸேவை சாத்து முறை நம்மாழ்வார் பெருமாள் ஸந்நிதிக்கு புறப்பாடு மங்களா சாஸனம். ஆஸ்தானம் சேர்தல் |
| 41. | ஸ்ரீ ஹனுமத்ஜயந்தி | ஸ்ரீ ஹனுமார் | திருமஞ்சனம் இரவு ப்ராகாரப் புறப்பாடு மங்களா சாஸனம் |
| 42 | போகிப்பண்டிகை | ஸ்ரீ பெருமாள் திருமஞ்சனம் | பூமிப்பிராட்டி பெருமாள் திருக்கல்யாணம் |

## தை

| | | | |
|---|---|---|---|
| 43 | சங்கராந்தி | காலை பெருமாள | இரவு ஸ்ரீ ஆண்டாள் தாயார் திருமஞ்சனம் தேவாதி தேவன் திருப்பாவை சாத்துமுறை புறப்பாடு மாலை மாற்றுதல் |
| 44 | கனு உத்ஸவம் | தாயார் திருமஞ்சனம் கொலு கோஷ்டி தீர்த்தம் விநியோகம் | |

| | | |
|---|---|---|
| 45. தை ஹஸ்தம் | திருப்பல்லாண்டு தொடக்கம், ஸேவை சாத்து முறை, தீர்த்த விநியோகம். | |
| 46. மாட்டுப் பொங்கல் | பெருமாள் தாயார் ஸந்நதிக்கு புறப்பாடு திருமஞ்சனம் | மாலை குதிரை நம்பிரானில் வீதிப்புறப்பாடு மாடு மிரட்டுதல் |
| 47. (குரு புஷ்யம்) தைப்பூசம் | திருமஞ்சனம் ஸேவை சாத்துமுறை புறப்பாடு | |
| 48. தை வெள்ளிக் கிழமைகள் | தாயார் திருமஞ்சனம் | மாலை கண்ணாடி அறைஸேவை புறப்பாடு மாலை மாற்றுதல் |

## மாசி

| | | |
|---|---|---|
| 49. மாசி மக உத்ஸவம் | 7 நாட்கள் | பெருமாள் ஸமுத்ரத்திற்கு கிள்ளைக்கு பல்லக்கில் புறப்பாடு பௌர்ணமியன்று கிள்ளை ஸமுத்ரத்தில் தீர்த்தம் வாரி திருமஞ்சனம், ஸேவை சாத்து முறை, திருப்பள்ளியோடம் மண்டபப்படிகள் |

## பங்குனி

50. பங்குனி உத்திரம் காலை

**பெருமாள் தாயார் ஸந்நிதிக்கு எழுந்தருளுதல்**

பெருமாள் தாயார் சோத்தி, **திருமஞ்சனம்** ஸேவை சாத்துமுறை மாலை மட்டையடி புராணம் புண்டரிகவல்லித் தாயார் தேவாதி தேவன் திருக்கல்யாணம் இரவு சேஷவாகனத்தில் வீதிப் புறப்பாடு.

## வருஷ உத்ஸவம்

ஸ்ரீ தில்லை கோவிந்தராஜப் பெருமாளுக்கு ப்ரம்மாண்ட புராணம் அத்யாயம் **14, 15**ல் விவரிக்கப்பட்டுள்ள நவதின ப்ரம்ம உத்ஸவம் மூன்றாகும்.

1. பங்குனி மாதம் ரோஹிணியில் தொடங்கி உத்தர நட்சத்திரத்தில் அவப்ருதமாக பிரமன் நடத்திய உத்ஸவம்.
2. சித்திரை மாதம் திருவாதிரையில் தொடங்கி சித்திரையில் அவப்ருதமாக சிவன் நடத்திய உத்ஸவம்.
3. வைகாசிமாதம் சித்திரையில் தொடங்கி திருவோணத்தில் அவப்ருதமாக இந்திரன் நடத்திய திருவிழா.

இவ்வுத்ஸவ காலங்களில் பெருமாள் விதியில் எழுந்தருளிய திருக்கோலத்தை கண்ணுற்ற திருமங்கை ஆழ்வார் தமது சித்ரகூட மங்களா சாஸனப் பாடல்களில்

(1) "கூடிய மாமழை காத்த கூத்தன் என வருகின்றான்" என்று கோவர்த்தன உத்ரண ஸேவை

(2) புலங்கெழு கோவியர் பாடி ...... என்றும்; பூதனாசம்ஹார ஸேவை.

(3) வானத்தவரும் ஆயிர நாமங்களோடு வருவான் என்று ஸேவை வெண்ணைத் தாழி ஸேவை.

(4) முளைத்த எயிற்றழல் நாகத்து உச்சியில் நின்று அதுவாட திளைத்தமர் செய்துவருவான் "என்று, காளீயமர்த்தன ஸேவை

(5) "உருவக்கருங்குழலாய்ச்சி திறத்து இனமால் விடை செற்று தெருவில் திளைத்துவருவான்" என்றும் நப்பின்னைப் பாராட்டி திருக்கல்யாண ஸேவை

(6) "வையத்தவரும் வணங்கஅணெங்கெழு மாமலை போலே தெய்வப்புள் ஏறிவருவான்" என்று கருடஸேவை

(7) "மேவுசினத்தழல்வேழம் விழமுனிந்து அழகாய காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான்" என்று யானை வாகன ஸேவை

(8) "பைங்கணிரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றொரு பேழ்வாய் சிங்கவுருவில் வருவான்" என்றும் சிங்கவாஹன ஸேவை

(9) "ஒரு மகள் ஆயர் மடத்தை ஒருத்தி நிலமகள் மற்றைத் திருமகளோடும் வருவான்" என்று திருத்தேர் உத்ஸவத்தையும் ஒரு முறைக்கு ஒன்பது முறையாக அனுபவித்து பாடியுள்ளார்

(45) ஸ்ரீராமநவமி கர்போத்ஸவம் 10 நாட்கள் ஸ்ரீகோதண்ட ராமருக்கு த்வஜாரோகணமாகி திருவீதிப் புறப்பாடு நவமியில் திருத்தேர் அவ்ப்ருதம் திருக்கல்யாணம் தசமியில் பட்டாபிஷேகம் மஹோத்ஸவம்

அஷயத்ருதியை உத்ஸவத்திற்கான சாஸனம்

"சுபமஸ்து. சசிதி சுபபுதய சாலிவாஹன சகாப்தம்

பு .... புயிதின் மேல் செல்ல நண்ட விளம்பி

வைசாக சுத்த அஷய திருதியை புண்ணிய

காலத்தில் திருச்சித்றகூடம் தில்லை கோவிந்தராசர்

சன்னதிக்கு கொண்டப்பனாயக்கனுடைய

கிறிச புசனாய அய்யானூத்திக்கல்கால் மண்டபத்தில்

தீர்த்தவாரி அருளியாடி கட்டளை செயித்து ....

## மாஸ திருநக்ஷத்திர உத்ஸவங்கள்

| | | |
|---|---|---|
| கார்த்திகை | திருமங்கை மன்னன் (வருஷ திரு நக்ஷத்திரம் 10 நாட்கள்) | திருமஞ்சனம் ஸேவை சாத்துமுறை |
| ரோஹிணி | வேணுகோபாலன் | " |
| | திருப்பாணாழ்வார் | " |
| | பெரியவாச்சான் பிள்ளை | " |
| ம்ருகசிரிஷம் | திருக்கச்சி நம்பிகள் | " |
| திருவாதிரை | உடையவர் (வருஷ திரு நக்ஷத்திரம் 10 நாட்கள்) | " |
| புனர்பூசம் | குலசேகராழ்வார் | " |
| மகம் | திருமழிசையாழ்வார் | " |
| பூரம் | ஆண்டாள் (வருஷ திரு நக்ஷத்திரம் 10 நாட்கள்) | " |
| ஹஸ்தம் | ஸ்ரீ கூரத்தாழ்வான் | " |
| சித்திரை | சக்கரத்தாழ்வார் | " |
| | மதுரகவி அழ்வார் | " |
| சுவாதி | அழகிய சிங்கர் | " |
| | பெரியாழ்வார் | " |
| விசாகம் | நம்மாழ்வார் (வருஷ திரு நக்ஷத்திரம் 10 நாட்கள்) | " |
| அனுஷம் | ஸ்ரீமந்நாதமுனிகள் | " |
| கேட்டை | தொண்டரடிப் பொடி ஆழ்வார் | " |
| மூலம் | ஸ்ரீமந்மணவாளமாமுனிகள் (வருஷ திரு நக்ஷத்திரம் 10 நாட்கள்) | " |
| பூராடம் | சேனை முதல்வர் | " |
| உத்ராடம் | ஸ்ரீஆளவந்தார் | " |
| திருவோணம் | பொய்கை ஆழ்வார் | " |
| | பிள்ளை லோகாசார்யர் | " |
| அவிட்டம் | பூதத்தாழ்வார் | " |
| சதயம் | பேயாழ்வார் | " |

ஸ்ரீ

# ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச் செய்த

# பெருமாள் திருமொழி

## பத்தாம் திருமொழி – ஸ்ரீ ராமாயணச் சுருக்கம்

1* அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தி யென்னும்
அணிநகரத்து உலகனைத்தும் விளக்கும் சோதி,
வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி
விண் முழுதும் உய்யக் கொண்டவீரன் தன்னை,
செங்கணெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
எங்கள் தனிமுதல்வனை எம்பெருமான் தன்னை
என்று கொலோ ! கண்குளிரக் காணும் நாளே.

2. வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக் கீறி
வருகுருதி பொழிதர வன் கணையொன் றேவி,
மந்திரம் கொள் மறைமுனிவன் வேள்வி காத்து
வல்லரக்கருயிருண்ட மைந்தன் காண்மின்,
செந்தளிர்வாய் மலர் நகைசேர் செழுந்தண் சோலைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
அந்தணர்களொரு மூவாயிரவரேத்த
அணிமணியாசனத்திருந்த அம்மான் தானே.

3. செவ்வரி நற்கருநெடுங்கண் சீதைக்காகிச்
சினவிடையோன் சிலையிறுத்துமழுவா ளேந்தி,
வெவ்வரி நற்சிலை வாங்கி வென்றி கொண்டு
வேல்வேந்தர் பகை தடிந்தவீரன் தன்னை,

தெவ்வரஞ்சு நெடும்புரிசை உயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
எவ்வரி வெஞ்சிலைத் தடக்கை இராமன் தன்னை
இறைஞ்சுவாரிணையடியே இறைஞ்சினேனே.

4. தொத்தலர் பூஞ்சுரி குழல் கைகேசி சொல்லால்
தொன்னகரம் துறந்து துறைக்கங்கை தன்னை,
பத்தியுடைக்குகன் கடத்த வனம் போய்ப்புக்குப்
பரதனுக்குப் பாதுகமும் அரசுமீந்து,
சித்திர கூடத்து இருந்தான் தன்னை இன்று
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
எத்தனையும் கண்குளிரக் காணப்பெற்ற
இருநிலத்தார்க்கு இமையவர் நேரொவ்வார் தாமே.

5. வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண் தமிழ் மாமுனிகொடுத்த வரிவில் வாங்கி,
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன் தனுயிரை வாங்கி,
சிலை வணக்கி மான்மறிய எய்தான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
தலை வணக்கிக்கை கூப்பி ஏத்தவல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே.

6. தனமருவுவைதேகி பிரியலுற்றுத்
தளர்வெய்திச் சடாயுவை வைகுந்தத் தேற்றி,
வனமருவு கவியரசன் காதல் கொண்டு
வாலியைக் கொன்று இலங்கை நகரரக்கர் கோமான்,
சின மடங்க மாருதியால் சுடுவித்தானைத்,

தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
இனிதமர்ந்த அம்மானை இராமன் தன்னை
ஏத்துவாரிணையடியே ஏத்தினேனே

7. குரைகடலை அடலம்பால் மறுகவெய்து
குலைகட்டி மறுகரையை அதனாலேறி
எரி நெடுவேலரக்க ரொடும் இங்கை வேந்தன்
இன்னுயிர் கொண்டு அவன் தம்பிக்கு அரசுமீந்து
திருமகளோடினிதமர்ந்த செல்வன் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
அரசமர்ந்தானடிசூடும் அரசை யல்லால்
அரசு ஆக எண்ணேன் மற்றரசுதானே.

8. அம்பொனெடு மணிமாட அயோத்தியெய்தி
அரசெய்தி அகத்தியன் வாய்த்தான் முன் கொன்றான்
தன், பெருந்தொல் கதை கேகட்டு மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள்,
செம்பவளத் திரள்வாய் தன் சரிதை கேட்டான்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோ மன்றே.

9. செறிதவச் செம்புகன் தன்னைச் சென்று கொன்று
செழுமறை யோனுயிர் மீட்டுத் தவத்தோனீந்த,
நிறைமணிப் பூணணியும் கொண்டு இலவணன் தன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன் வேண்ட,
திறல் விளங்கும் இலக்குமனைப் பிரிந்தான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்

உறைவானை மறவாத உள்ளந்தன்னை
யுடையோம் மற்றுறு துயரமடையோமன்றே.

10* அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி
அடலரவப் பகையேறி அசுரர் தம்மை
வென்று இலங்கு மணிநெடுந்தோள் நான்கும் தோன்ற
விண்முழுதும் எதிர் வரத்தன் தாமம் மேவி,
சென்று இனிதுவீற்றிருந்த அம்மான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
என்றும் நின்றான் அவனிவனென்றேத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதும் தொண்டீர் ! நீரே.

11*. தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
திறல்விளங்கு மாருதியோடு அமர்ந்தான் தன்னை
எல்லையில் சீர்த்தயரதன் தன் மகனாய்த் தோன்றிற்று
அதுமுதலாத் தன்னுலகம் புக்க தீறா,
கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாள்
கோழியர் கோன் குடைக்குலசேகரன் சொற் செய்த
நல்லியலின் தமிழ் மாலை பத்தும்வல்லார்
நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.

இந்த குறியிட்ட பாசுரங்களை இரண்டு முறை ஸேவிக்க வேண்டும்.

ஸ்ரீ

# திருமங்கையாழ்வார் அருளிச் செய்த

# பெரிய திருமொழி

## மூன்றாம் பத்து.

## இரண்டாம் திருமொழி

1*. ஊன்வாட உண்ணாதுயிர் காவலிட்டு
உடலில் பிரியாப் புலனைந்தும் நொந்து,
தாம்வாட வாடத் தவம் செய்யவேண்டா
தமதா இமையோருல காளகிற்பீர் !
கானாடமஞ்ஞைக் கணமாட மாடே
கயலாடுகானீர்ப் பழனம்புடை போய்,
தேனாடமாடக் கொடியோடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே

2. காயோடு நீடுகனியுண்டு, வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம், ஐந்து
தீயோடு நின்று தவம் செய்ய வேண்டா
திருமார்பனைச் சிந்தையுள் வைத்து மென்பீர் !
வாயோது வேதம்மலிகின்ற தொல் சீர்
மறையாளர்நாளும் முறையால் வளர்த்த,
தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர்மின்களே.

3. வெம்பும் சினத்துப் புனக்கேழலொன்றாய்
விரிநீர்முது வெள்ளம் உள்புக்கழுந்த,
வம்புண் பொழில் சூழுலகன்றெடுத்தான்
அடிப்போது அணைவான் விருப்போடு இருப்பீர் !
பைம்பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து
படைமன்னவன் பல்லவர் கோன்பணிந்த,
செம்பொன் மணிமாடங்கள் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர் மின்களே.

4. அருமாநிலம் அன்று அளப்பான் குறளாய்
அவுணன்பெரு வேள்வியில் சென்றிரந்த,
பெருமான் திருநாமம் பிதற்றி நுந்தம்
பிறவித்துயர் நீங்குது மென்னகிற்பீர் !
கருமா கடலுள் கிடந்தான் உவந்து
கவைநா அரவினணைப் பள்ளியின் மேல்,
திருமால் திருமங்கையோடாடு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே.

5. கோமங்கவங்கக் கடல்வையம் உய்யக்
குலமன்னரங்கம் மழுவில் துணிய,
தாம் அங்கு அமருள் படை தொட்ட வென்றித்
தவமா முனியைத் தமக்காக்க கிற்பீர் !
பூமங்கை தங்கிப்புல மங்கை மன்னிப்
புகழ்மங்கை எங்கும் திகழ, புகழ்சேர்
சேமம் கொள்பைம்பூம் பொழில் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே.

6. நெய்வாயழலம்பு துரந்து முந்நீர்
துணியப்பணி கொண்டு அணியார்ந்து, இலங்கு
மையார் மணிவண்ணனை எண்ணி நுந்தம்
மனத்தே இருத்தும்படி வாழவல்லீர் !
அவ்வாய் இளமங்கையர் பேசவும் தான்
அருமாமறையந்தணர் சிந்தைபுக,
செவ்வாய்க்கிளி நான்மறைபாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே.

7. மௌவல் குழலாய்ச்சி மென்தோள் நயந்து
மகரம் சுழலச் சுழல்நீர் பயந்த,
தெய்வத் திருமாமலர் மங்கை தங்கு
திருமார் பனைச் சிந்தையுள் வைத்து மென்பீர் !
கௌவைக் களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ்சந்தும் உந்திநிவாவலங் கொள்,
தெய்வப்புனல் சூழ்ந்த அழகாய தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர் மின்களே.

8. மாவாயினங்கம் மதியாது கீறி
மழைமாமுது குன்று எடுத்து, ஆயர் தங்கள்
கோவாய் நிரை மேய்த்து உலகுண்டமாயன்
குரை மாகழல் கூடும் குறிப்புடையீர் !
மூவாயிரம் நான் மறையாளர் நாளும்
முறையால்வணங்க அணங்காய சோதி,
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சோமின்களே

9. செருநீல வேல்கண் மடவார் திறத்துச்
சினத்தோடு நின்றுமனத்தால் வளர்க்கும்,
அருநீலபாவம் அகலப் புகழ்சேர்
அமரர்க்கும் எய்தாத அண்டத்து இருப்பீர் !
பெருநீர்நிவா உந்திமுத்தம் கொணர்ந்து எங்கும்
வித்தும் வயலுள்கயல் பாய்ந்து உகள,
திரு நீலம்நின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர் மின்களே.

10 சீரார் பொழில் சூழ்ந்து அழகாய தில்லைத்
திருச்சித்ர கூடத்து உறை செங்கண் மாலுக்கு,
ஆராத உள்ளத்தவர் கேட்டு உவப்ப
அலை நீருலகுக்கு அருளே புரியும்.
காரார்புயற்கைக் கலிகன்றி குன்றாவொலிமாலை
ஒரொன்பதோடு ஒன்றும் வல்லார்,
பாராருலகம் அளந்தானடிக்கீழ்ப்
பலகாலம் நிற்கும்படி வாழ்வர் தாமே.

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் கோவிந்தம் பஜ மூடமதே.

ஸ்ரீ :

# மூன்றாம் திருமொழி

## திருச்சித்ரகூடம் – 2

1. வாடமருதிடை போகி மல்லரைக் கொன்று ஒக்கலித்திட்டு,
ஆடல்நன்மாவுடைத்து ஆயராநிரைக்கு அன்று இடர்தீர்ப்பான்
கூடியமா மழைகாத்த கூத்தனென வருகின்றான்,
சேடுயர் பூம்பொழில் தில்லைச் சித்ர கூடத்துள்ளானே,

2. பேய்மகள் கொங்கை நஞ்சுண்ட பிள்ளைப்பரிசு இதுவென்றால்,
மாநிலமாமகள் மாதர்கேள்வன் இவனென்றும் வண்டுண்
பூமகள் நாயகனென்றும் புலங்கெழு கோவியர் பாடி,
தேமலர் தூவவருவான் சித்ரகூடத்துள்ளானே.

3. பண்டு இவன் வெண்ணெயுண்டா னென்று ஆச்சியர் கூடி இழிப்ப
எண்திசையோரும் வணங்க இணைமருதூடு நடந்திட்டு
அண்டரும் வானத்தவரும் ஆயிரநாமங்களோடு,
திண்திறல்பாடவருவான் சித்ர கூடத்துள்ளானே.

4. வளைக்கை நெடுங்கண்மடவார் ஆய்ச்சியர் அஞ்சி அழைப்ப
தளைத்தவிழ் தாமரைப் பொய்கைத் தண்தடம் புக்கு அண்டர்காண
முளைத்த எயிற்றழல் நாகத்து உச்சியில் நின்று அதுவாட
திளைத்தமர் செய்து வருவான் சித்ரகூடத் துள்ளாானே

5. பருவக் கருமுகிலொத்து முத்துடைமா கடலொத்து,
அருவித்திரள் திகழ்கின்ற ஆயிரம் பொன்மலை யொத்து
உருவக்கருங்குழலாய்ச்சி திறத்து இனமால் விடை செற்று,
தெருவில் திளைத்து வருவான் சித்ர கூடத் துள்ளானே

6. எய்யச் சிதைந்தது இலங்கமலங்க வருமழை காப்பான்
உய்யப் பருவரைத் தாங்கி ஆநிரைகாத்தா னென்றுஏத்தி
வையத்தெவரும் வணங்க அணங்கெழுமாமலைபோலே,
தெய்வப்புள் ஏறி வருவான் சித்ரகூடத்துள்ளானே.

7. ஆவர் இவை செய்வதறிவார்? அஞ்சனமா மலைபோலே,
மேவு சினத்து அடல்வேழம் வீழமுனிந்து, அழகாய
காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதி வருவான்
தேவர்வணங்கு தண்தில்லைச் சித்ரகூடத்துள்ளானே

8. பொங்கி அமரிலொருகால் பொன்பெயரோனைவெருவ,
அங்கு அவனாகம் அளைந்திட்டு ஆயிரந் தோள் எழுந்தாட,
பைங்கணிரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றொடு பேழ்வாய்,
சிங்க உருவில் வருவான் சித்திர கூடத்துள்ளோனே

9. கருமுகில் போல்வது ஓர்மேனி கையன ஆழியும்சங்கும்,
பெருவிறல் வானவர்சூழ ஏழுலகம் தொழுதேத்த,
ஒரு மகள் ஆயர் மடந்தை ஒருத்தி நிலமகள், மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்திர கூடத்துள்ளானே.

10. தேனமர்பூம்பொழில் தில்லைச் சித்திர கூடம் அமர்ந்த,
வானவர்தங்கள் பிரானை மங்கையர்கோன் ! மருவார்,
ஊனமர் வேல் கலிகன்றி ஒண்தமிழ் ஒன்பதா டொன்றும்,
தானிவை கற்று வல்லார்மேல் சாரா தீவினைதானே.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம் :

இந்த குறியிட்ட பாசுரங்களை இரண்டு முறை ஸேவிக்க வேண்டும்.

அடியாலுலகெல்லாம் அன்று அளந்து கொண்ட
நெடியானைக் கூடுதியே நெஞ்சே – கொடிதாய
குத்திர கூடங்கி கொளுந்தாமுன் கோவிந்தன் சித்திர,
கூடங்கருதிச் செல்

– நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி

புராண த்யான ச்லோகம்

தில்லீ காந்தார மத்யே ப்ரதித ஸிதநதீ தக்ஷியே பஸ்சிமேப்தே
காவேர்யாச்ரோத்தரேஸ்மின் கிடிபுரபுரத பத்தனே சித்ரகூட ।
ஸாத்வீகாக்யே விமானே மணிகனகஸபா மத்யத சேஷசாயீ
ஸ்ரீ பூ நீளா ஸமேத · சிவ விதி விநுத · பாது கோவிந்தராஜ ।

ஸ்ரீ புண்டரீகவல்லித் தாயார் ஸமேத

ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாள் திருவடிகளே சரணம்